# நாநா ஜீவ வாதக் கட்டளை,
# சத்யார்த்தப் பிரகாசிகை உரை.

अयमात्मा ब्रह्म

अहं ब्रह्मास्मि



प्रज्ञानं ब्रह्म

तत्वमसि

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
வேதாந்த மடம், திருப்பூவணம்.

 1952. [விலை ரூபா இரண்டு.

## திருப் பூவண மடம்,

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள்.

1. வேதாந்த பதார்த்த மஞ்ஜுஷா. வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
3. யுக்திப் பிரகாசம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
4. வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
5. வேதாந்த பரிபாஷை. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
6. வேதாந்த சஞ்ஞா. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
7. நைஷ்க் கர்ம்ய சித்தி, வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
8. வியாச தாத்பர்ய நிர்ணயம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
9. ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
10. ஹரி மீடே - ஹரி தத்வ முக்தாவலி. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
11. மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜ யோக பாஷ்யம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
12. ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
13. பகவற் கீதை - 15-வது அத்தியாயம் - பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
14. மூர்க்க சதகம் - பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
15. கணேச கவசம் - பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
16. பிரபோத சுதாகரம் - பத உரை. (வேதாந்தம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
17. விவேக சூடாமணி - பத உரை. (வேதாந்தம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
18. பேத திக்காரம் - சத்கிரியை உரை. (வேதாந்தம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
19. சித்தாந்த லேச சார சங்கிரகம். வசநம். (56 மத விசாரம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
20. தர்க்க சங்கிரகம் - தீபிகை உரை. (தர்க்கம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
21. காணாத சித்தாந்த சந்திரிகை. வசநம். (தர்க்கம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
22. சப்த பதார்த்தி. வசநம். (தர்க்கம்). சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
23. சொக்க லிங்கச் செட்டியார் தூஷண நாவுக் கோர் சூட்டுக் கோல். வசநம். (கண்டநம்)
24. முத்தையா பிள்ளை கடாவை அடக்குங் கட்டாரி. வசநம். (கண்டநம்)
25. வட நாட்டில் ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் னாட்டில் சாதுக்கள் மேளாவும். வசநம்.
26. அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தி விருப்பவர்கட்கும், ஓர் அறிக்கை. வசநம்.
27. சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம். வசநம்.
28. மடங்களின் உத்பத்தியும், தற் போது உள்ள நிலைமையும். வசநம்.
29. நாநா ஜீவ வாதக் கட்டளை - சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
30. மதுரை, மீநாக்ஷி அம்பிகை தோத்திரம்.
31. சிக்கல் - பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிகர் தோத்திரம்.
32. கோவிலூர் - முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரம்.
33. திருக் களர் - வீர சேகர ஞாந தேசிகர் தோத்திரம்.
34. கட்கம் கொண்ட காளியைச் செயிக்கும் காமாரி (கண்டநம்).
35. பிரஹ்ம சூத்திரம் - ஸ்ரீ கண்ட பாஷ்ய மொழி பெயர்ப்பு.
36. நியாய சங்கிரகம் (400). வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
37. சிவ சங்காரவதாரம். சுலோகம் உரை.
38. மஹாத்ம சரிதாமிருதம். வசநம்.
39. சமாதி விதி. வசநம்.
40. காசிகாநந்த விஜயம். வசநம்.
41. கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை.
42. சக்தி விவேசநம்.
43. ஸ்திரீ புருஷ ஜநந மரண ரஹஸ்யம். வசநம்.
44. உண்மைக் கடவுள். வசநம்.
45. சந்யாச விதி. வசநம்.
46. சூட்டுக் கோல் புச்சம். வசநம்.
47. சசி வர்ந போதம் - பதார்த்த பாஸ்கரன் உரை.

48. மஹா ராஜத் துறவு - மநப் பிரசாதினி உரை.
49. வைராக்ய தீபம் - பத உரை.
50. சீடாசாரம் - பால போதினி உரை.
51. கணேச கவசம் - கவி - உரை.
52. மதுரை, பொற்ருமரைக் கரை கணபதி தோத்திரம்.
53. திருப் பூ வண நாதர் தோத்திரம்.
54. சிதம்பரம், நடராஜர் தோத்திரம்.
55. பழனி - தண்டாயுத பாணி - தோத்திரம்.
56. கிருஷ்ண பகவான் தோத்திரம்.
57. பக்தி (வைராக்ய) சதகம் - பத உரை.
58. வேதாந்த சூடாமணி - சந்தோஷ தாயினி உரை.
59. பகவற் கீதை 15-வது அத்தியாயம் கவி - உரை.
60. பட்டினத்தார் பாடல் - உரை.
61. திருப் பூ வண மடம், விநாயகர் தோத்திரம்.
62. சௌந்தரிய நாயகி தோத்திரம்.
63. மதுரை, சொக்க லிங்கேசர் தோத்திரம்.
64. திருச் செந்தூர் முருகவேள் தோத்திரம்.
65. தாயும, தனையனும். (வேதாந்த விசாரம்.)

---

1. கதா சரித் சாகரம். வசநம் - கதை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
2. சங்கர விஜய விலாசம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு
3. கைவல்ய நவநீதம் - ஸ்ரீ அருணுசல ஞாந தேசிக சுவாமிகள் பத சார உரை.
4. திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம் வசநம்.
5. திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் சரிதம் கவி 1500.
6. ஈசுவர கீதை கவி. உரை.
7. பக்தி (வைராக்ய) சதக, உதாரணக் கவி உரை.
8. வைராக்ய தீப உதாரணக் கவி உரை.
9. கைவல்ய நவநீத உதாரணக் கவி உரை.

---

1. நாநா ஜீவ வாதக் கட்டளை.
2. கீதா சாரத் தாலாட்டு.
3. சசி வந்ந போதம்.
4. மஹா ராஜத் துறவு.
5. பக்தி (வைராக்ய) சதகம்.
6. வைராக்ய தீபம்.
7. லக்ஷண விருத்தி.
8. வேதாந்த சூடாமணி.
9. கைவல்ய நவநீதம்.
10. விவேக சூடாமணி.
11. அஞ்ஞ வதைப் பரணி.
12. பஞ்ச தசி.
13. ஈசுவர கீதை.
14. பகவற் கீதை.
15. பிரஹ்ம கீதை. 16. வாசிட்டம்.

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றியன.

1. நாநா ஜீவ வாதக் கட்டளைக்கு, சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
2. கீதா சாரத் தாலாட்டுக்கு, லகு சந்திரிகை உரை.
3. சசி வந்ந போதத்துக்கு, பதார்த்த பாஸ்கரன் உரை.
4. மஹா ராஜத் துறவுக்கு, மநப் பிரசாதினி உரை.
5. வேதாந்த சூடாமணிக்கு, சந்தோஷ தாயினி உரை.
6. பக்தி சதகத்துக்கு, பத உரை.
7. வைராக்கிய தீபத்துக்கு, பத உரை.
8. ஈசுவர கீதை. பத உரை.
9. கைவல்ய நவநீதத்துக்கு, துறவு ஆண்டவர், பத சார உரை.
10. பகவற் கீதைக்கு, பொன்னம்பல ஞாந தேசிகர், கூடார்த்த தீபிகை உரை.
11. பிரஹ்ம கீதைக்கு, பொன்னம்பல ஞாந தேசிகர் வியாக்யாநம்.
12. வாசிட்டத்துக்கு, வீர. சுப்பய்ய ஞாந தேசிகர், வீர சேகர உரை. (12) இவை உரை உடையன.
13. லக்ஷணவிருத்தி - 14. விவேக சூடாமணி - 15. அஞ்ஞ வதைப் பரணி - 16. பஞ்ச தசி.

இவை நான்கும் உரை யின்றியன.

1. **கைவல்ய நவநீதம்** என்னும் நூலுக்கு முதன் முத லாக உரை யியற்றியவர்கள் கோவிலூர் மடாதிபதி யாக எழுந்தருளி யிருந்த, துற வாண்டவர் எனப் பெயர் விளங்கியதேவி கோட்டை- ஸ்ரீ அருணுசல ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள், அவ் வுரை பத சாரம் என வழஙகப்படும், விரைவில் அச்சிட்டு வெளிவரும்.

2. அதன் பின், பிறைசை ஸ்ரீ அருணுசல சுவாமிக ளவர்கள் ஓர் உரை யியற்றினர்கள்.

3. அதன் பின், ஈசூர் - ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிக ளவர்கள் ஓர் உரை இயற்றினர்கள்.

4. அதன் பின், சிதம்பரம் - ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக ரவர்கள் தத்துவார்த்த தீபிகை என்னும் ஓர் உரை யியற்றினர்கள்.

5. அதன் பின், தஞ்சாவூர் ஸ்ரீ வெங்கடாசல சுவாமிக ளவர்கள் ஓர் உரை யியற்றினர்கள்.

6. அதன் பின், மதுரை, பீ. எம். சாமி நாத பிள்ளை ஓர் உரை இயற்றினர்கள்.

7. அதன் பின், காளையார் கோவில், ஸ்ரீ செல்லப்ப ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள் ஓர் பொழிப் புரை யியற்றினர்கள்.

8. அதன் பின், சென்னை கோமளேசுவரன் பேட்டை, கோ. வடிவேலு செட்டியார் அவர்கள், பத வுரையும், வசந உரையும், ஆக்கினர்கள்.

9. அதன் பின், காஞ்சீ புரம் ஆ. செங்கல்வ ராய முதலியா ரவர்கள் ஓர் உரை யியற்றினர்கள்.

10. அதன் பின், சிதம்பரம் - கோ. சித. மடம், ஸ்ரீ நீல கண்ட சுவாமிகள் அவர்கள் ஓர் உரை யியற்றுகின்றார்கள்.

பத்து உரைகளோடு கூடியது கைவல்ய நவநீதம் என்னும் நூ லாகும்.

பகவற் கீதை என்னும் நூலுக்கு, அருணசல முதலியார் என்பவர் ஓர் உரையும், ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் கூடார்த்த தீபிகை என்னும் ஓர் உரையும் இயற்றி யிருக்கின்றார்கள்.

பிரஹ்ம கீதை என்னும் நூலுக்கு, கோடக நல் லூர் ஸ்ரீ சுந்தர சுவாமிகள் ஓர் உரையும், ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகள் வியாக்யாந ரூப ஓர் உரையும் இயற்றி யிருக்கின்றார்கள்.

வாசிட்டம் என்னும் நூலுக்கு, பிறைசை ஸ்ரீ அருணசல சுவாமிகள் ஓர் உரையும், கோவி லூர் மடம், ஸ்ரீ நித்யாநந்த சுவாமிகள் வாசிட்ட நிர்ச்சந்தேக ஞப்தி வியாக்யாந மொழி பெயர்ப்பு ரூப ஓர் உரையும், நியாய சந்திர, வேதாந்த பாஸ்கர, ஸ்ரீ வீர. சுப்பைய ஞாந தேசிக ஸ்வாமிகள், வீர சேகரம் என ஓர் பே ருரையும் இயற்றி யிருக்கின்றார்கள்.

## கோவிலூர் மடத்தில் பாடம் நடக்கும் 16 நூன் முறை.

### ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றியது.

தாக்குறுநா நாஜீவ வாதக்கட் டளைகீ
தாசாரத் தாலாட்டுச் சசிவந்ந போதம்,
வாக்குமகா ராஜத்துற வுபத்திசத கம்நல்
வைராக்ய தீபமிலக் கணவிருத்தி யரிய,
வாக்கஞ்ஞ வதைப்பரணி வேதாந்த சூடா
மணிவிவே கசூடா மணிபஞ்ச தசியும்,
பாக்கமழ்கை வல்யநவ நீதமீ சுரகீதை
பகவற்கீ தைபிரம கீதைவா சிட்டமே.

---

எட்டு நூல் சக்தி விசிஷ்டாத்வைதம்.

1. நாநா ஜீவ வாதக் கட்டளை. 2. சசி வந்ந போதம். 3. மஹா ராஜத் துறவு. 4. பக்தி (வைராக்ய) சதகம். 5. வைராக்ய தீபம். 6. அஞ்ஞ வதைப் பரணி. 7. இலக்ஷணவிருத்தி. 8. ஈசுவர கீதை. இவ் வெட்டு மாம்.

எட்டு நூல் சுத்தாத்வைதம். கேவலாத்வைதம்.

1. கீதா சாரத் தாலாட்டு. 2. வேதாந்த சூடாமணி. 3. விவேக சூடாமணி. 4. பஞ்ச தசி. 5. பகவற் கீதை. 6. கைவல்ய நவநீதம். 7. பிரஹ்ம கீதை. 8. வாசிட்டம் (கீடா பிரமர வாதம்). இவ் வெட்டும் கேவலாத்வைதம் என்னும் சுத்தாத்வைதம் ஆம்.

எட்டு நூல் தமிழ். எட்டு நூல் மொழி பெயர்ப்பு.

தமிழ் நூல்:- 1. நாநா ஜீவ வாதக் கட்டளை. 2. கீதா சாரத் தாலாட்டு. 3. சசி வந்ந போதம். 4. மகா ராஜத் துறவு. 5. பக்தி (வைராக்ய) சதகம். 6. வைராக்ய தீபம். 7. அஞ்ஞ வதைப் பரணி. 8. கைவல்ய நவநீதம் என்னும் எட்டும் ஆம்.

மொழி பெயர்ப்பு நூல்:- 1. விவேக சூடாமணி. 2. வேதாந்த சூடாமணி. 3. இலக்ஷணவிருத்தி. 4. பஞ்ச தசி. 5. ஈசுவர கீதை. 6. பிரஹ்ம கீதை. 7. பகவற் கீதை. 8. வாசிட்டம் என்னும் எட்டும் ஆம்.

# சிறப்புப் பாயிரம்.

## அறு சீர் விருத்தம்.

குடி யேற்றம் வேதாந்தத் தமிழ் வாசக சாலை,
வேதாந்த போதகாச்சாரியர்
**திரு. நீ. சண்முகாநந்த ஐயா அவர்கள் இயற்றியன.**

மன்னுபெரு முபநிடதம் மகித்தபொரு ளொன்றெனவே மதியா லாய்ந்து, பன்னுலக குருவெனவே படியதனில் நற்றவத்தோர் பணிய வோங்கி, உன்னுமரு பூதியெனும் நிலையுடைய வொளிமயனு யுலவா வின்பம், மின்னுமொரு பெருந்துறவான் மிளிர்ராதி சங்கரனை விதியால் வாழ்த்தி. (1)

மொழிசுருங்கல் பொருள்விளங்கல் மொழியவினி தடனே நன் மொழியுணர்த்தல், வழியமையோ சையின்மலித லாழ்தலுடன் முறைநிறுவல் மலைவு தீர்தல், பொழிவிழுமி யனபயத்தல் பொலி காட்டோ டிவைபத்தும் புலவோர் போற்றும், கழுபொருளும் பலநயமுங் கருதுமிடந் தொறுங்கிடந்து களிப்பே நல்க. (2)

மூதுணர்வோர் போற்றுபுகழ் வேதமுநி சேஷாத்ரி முன்னேன் சொன்ன, காதுபவ நீக்குமெழிற் கட்டளைக்கோர் நல்லுரையைக் கண்டான்! கண்டீர், தீதுணராப் பெருந்துறவோர் திருத்தவஞ்செய் சமிவநத்தை சீர்செய் தெங்கள், பேதறுபுன் மநமயக்கம் பிரியநிலை யுரைத்தவறப் பெம்மான் நாளும். (3)

சிவஞாநத் திருவுருவாய்த் திகழ்வீர சேகாஞந் தீரன் பாதம், தவ ஞாநப் புணையெனவே சார்ந்துபவஞ் சாய்த்தொளிருந் தடையில்போதன், பவ ஞாநம் முழுதொழியப் பற்பலவாம் நூல்கடமைப் பதிப்பித் தோயா, அவ ஞாந மெமக்ககற்று மண்ணன்மொழிக் கடன்மூன்றி லாழ்ந்தோன் மாதோ. (4)



திருத்தகுசெந் தமிழ்மொழியைத் திகழ்த்தியநற் சிறப்பதனுற் றிகழ்ந்தே யோங்கிக், கருப்பிறவா நெறிகாட்டும் பாண்டியெனும் பாவைமணிக் கலனே யாகும், உருப்பொலியும் பூவணத்தே யோங்குமட மமைத்தருளு முரவோன் வாத, மருப்பொலிநற் றிருவாயோன் காசிகா நந்தனெனுங் கருணை யோனே. (5)

**தோதுப்பு:-** காசிகாநந்தன் எனுங் கருணையோன், சேஷாத்ரி முநிவன் சொன்ன கட்டளைக்குச் சங்கரனை வாழ்த்திக், களிப்பே நல்க, ஓர் நல் லுரையைக் கண்டான்.

---

### பதி னுறு நூற்கட்கு பன் னிருவர் கர்த்த ராவர்.

1. நாநா ஜீவ வாதக் கட்டளை, சேஷாத்திரி சிவன்.
2. கீதா சாரத் தாலாட்டு, திரு வேங்கட நாதர்.
3. சசி வர்ண போதம், அஞ்ஞ வதைப் பரணி, ஈசுவர கீதை, பிரஹ்ம கீதை, (நான்கும்) தத்துவ ராய சுவாமிகள்.
4. மஹா ராஜத் துறவு, குமார தேவர்.
5. பக்தி (வைராக்ய) சதகம், வைராக்ய தீபம், (இரண்டும்) சாந்த லிங்க சுவாமிகள்
6. வேதாந்த சூடாமணி, சிவப் பிரகாச சுவாமிகள்.
7. விவேக சூடாமணி, உகை நாத சுவாமிகள்.
8. இலக்ஷண விருத்தி, சிதம்பர சுவாமிகள்.
9. பஞ்ச தசி, நித்தியாநந்த சுவாமிகள்.
10. பகவற் கீதை, சேம நகர் பட்டர்.
11. வாசிட்டம், ஆள வந்தான்.
12. கைவல்ய நவநீதம், தாண்டவ ராய சுவாமிகள்.

---

உ

சிவமயம்.

# நாநா ஜீவ வாதக் கட்டளையின் முக வுரை.

---

சிதம்பரம் — கோ. சித. மடம்,

## ஸ்ரீ நீல கண்ட சுவாமிக ளவர்கள் இயற்றியது.

1. சீரிய இவ் வுலகில், சீவர்கள் இயல் பாகவே பந்த முடையர். அத் துன்ப ரூப பந்தத்தி னின்றும் தாமே, நீங்கற்கு ஆற்றல் அற்றவர். துன்பம் நீங்கி இன்புற எண்ணல் அவரது இயற்கை. ஆனால், துன்ப வடிவு இன்னது, இன்ப வடிவு இன்னது என உண்மை யாய் அறிந்திலர். அஞ்ஞாந வயத்தால் துன்ப வடிவை இன் பாகவும், இன்ப வடிவைத் துன் பாகவும் உணர்ந்து மயங்குகின்றனர்.

2. கருணைக் கடலாங் கடவுள், அம் மயக்கம் நீக்கி, உண்மை யுணர்த்தி, அவர்களை உய்விக்க எண்ணினர். அவர்கள் உய்யும் வழியை இருக்காதி வேதங்களால் உணர்த்தினர். கடவுள் அருள் பெற்ற பெரியோர்கள் பலர் அவ் வேதப் பொருளை மந்த அதிகாரி களுக்கு எளிதில் உணர்த்த விரும்பினர். வேதத்தை முத னூலாக் கொண்டு, அதன் பொருளை விளக்கும் பல நூல்கள் இயற்றினர். அவற் றுள், இந் நாநா சீவ வாதக் கட்டளையும் ஒன்று.

3. வேதத்தில், சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி ஆகிய மோட்சம் அடைதற்கு முக்கிய சாதந மாக ஞாநம் கூறப் பட்டுளது. அந்த ஞாநத்திற்குச் சாதந மாகக் கரும உபாசனை யாதிகள் கூறப்பட்டுள்ளன. அக் கருமங்களை விதிப்படி ஈசுரார்ப் பண மாக, நிஷ்காம மாய்ச் (பயனை விரும்பாமல்) செய்யின், உள்ளத்தி லுள்ள மலம் (பாபம்) நீங்கும். விதிப்படி உபாசனை



களைச் செய்யின், மநம் அசை வற்று ஒரு நிலைப்படும். இதனையே விக்ஷேப நீக்கம் என்பர். இவ் விரண்டின் சித்தியே சித்த சுத்தி யாம்.

இச் சித்த சுத்தி வந்த பின், விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுட் சுத்துவம் என்னும் நான்கு சாதநங்களையும் அவதி (முடிவு) வரை பெற்றவனே தீவிர அதிகாரி. அவற்றினை அரை குறை யாகப் பெற்றவன் மந்த அதிகாரி. அதிகாரிகள் சற் குருவை அடைந்து சிரவண, மநந, நிதித்தியாசநங்கள் செய்தல் வேண்டும். அங்ஙன் செய்யின் தத்துவ ஞாநம் உண்டாம். மந்த அதிகாரிக்கு வேதத்தின் முக்கிய சித்தாந்தத்தைச் சொல்லின் விளங்காது; அதில் நம்பிக்கையும் உண்டாகாது. ஆகையால், அவர்கட்குக் கீழ்ப்படிகளைக் கூறி, அவற்றின் வாயி லாய் அவர்களை மேல் நிலைக்குக் கொண்டுவரல் வேண்டும்.

மந்த அதிகாரிகளை நோக்கித் தைத்திரீய உபநிடதத்தில் நாநா சீவ வாதம் சொல்லப்பட்டுளது. அதனை அநுசரித்துச் சேஷாத்திரி சிவனார் என்னும் பெரியார் இந் நூலைச் செய்தார். அவர் வட மொழி, தென் மொழிகளில் வல்லுனர். திட அபரோக்ஷ ஞாநி. தீந தயாளு. சற் குண சம்பன்னர். இவ ரிருந்த காலம், இடம் முதலியன அறியப்பட வில்லை. தாம் ஐயந் திரி பின்றி அடைந்த அபரோக்ஷ (பிரத்தியட்ச) அநுபவத் தைக் கருணையினால், மந்த அதிகாரிகளும் அடைந் துய்யு மாறு செய்யத் திரு வுளம் கொண்டார்.

சாம வேதத்தின் முடிபா யுள்ளது சாந்தோக்கிய உபநிடதம். அதில் "தத்துவ மசி" என்னும் மஹா - வாக்கியம் கூறப்பட்டுளது. அதனால் போதிக்கப்படும் அரிய பொருள் சீவப் பிரஹ்ம ஐக்கிய மாகிய அத்துவித சொரூபமே. அதனை அத்தியாரோப அபவாதக்

கிரம மாகிய யுக்தியால் ஆசிரியர் இந் நூலில் கூறியுள்ளார். (அத்தியாரோபம் என்பது பொய் யாகத் தோற்றுவித்தல். அப வாதம் என்பது பொய் யென்று நிச்சயித்து ஒடுக்கல்.)

இதில் மித்தை யாகிய தேகேந்திரியாதி அநாத்ம வஸ்துக்கள் இத்தனை வகையன, இன்னன, இவ் வியல் புடையன, இன்ன வாறு ஆரோப மாய்த் தோன்றின, பின்னர்த் தம் தம் காரணங் களில் இன்ன விதம் ஒடுங்குகின்றன என்பன வாதியன நன்கு நவிலப்பட்டுள்ளன.

மேலும், காரிய மெல்லாம் ஒடுங்கிவிட, இறுதியில் ஒடுங்காமல் எஞ்சி யுள்ளது காரண மாய அதிஷ்டான பிரத்திய கபிந்ந பரம் பொருள் ஒன்றே என்றும், அது இன்ன இயல் புடையது என்றும், இயம்பப்படுகின்றன.

தத்துவமசி மஹா வாக்கியத்தில் உள்ள தத் பதத்தின் வாச்சி யார்த்தம் இன்னது, இலக்ஷியார்த்தம் இன்னது என்றும், துவம் பதத்தின் வாச்சியார்த்தம் இன்னது, இலக்ஷியார்த்தம் இன்னது என்றும், அவ் வாச்சியங்கட்குப் பேதம் உண்டு. இலக்ஷியார்த்தங் கட்குப் பேத மில்லை என்றும் உரைக்கப்பட்டுள்ளன. அவ் விலக்ஷியார்த்தங்கள் ஒரே இலக்கணம் உடையனவா யிருத்தலின் அபேதமே, (ஒன்றே) எனச் சீவப் பிரஹ்ம ஐக்கிய நிலை யாதியன வெள் ளிடை மலை போல் விளங்க விளக்கப்பட்டுள்ளன.

இந் நூல் ஏனைச் சிவப்பிரகாச முதலிய கட்டளைகள் விரிப்பது போல், நம்மால் அறிய முடியாத அநாத்ம தத்துவங்களை அதிக மாக விரிக்க வில்லை. அவசியமானவற்றைச் சுருக்க மாகக் கூறுகின்றது. மயக்கத்தால் தா ஞகத் தோற்றும் தேகேந்திரியாதி அநாத்ம வஸ்துக்களை, இதுவும் நான் அன்று; இதுவும் நான் அன்று என,



ஒவ் வொன்றாய்ச் சுருதி, யுக்தி அநுபவங் கொண்டு நேதி களை கின்றது. பின்னர் எஞ்சி யிருக்கும் ஆத்ம தத்துவம் இன்ன இயல் புடையது என்றும், அதுவே சீவனது யதார்த்த வடிவம் என்றும், அதுவே பிரஹ்ம சொரூபம் என்றும் காட்டுகின்றது.

இவ் விதம் அதிகாரிக்குத் தத்துவ ஞானத்தை ஐயம் திரி பின்றி உண்டு பண்ணி முக்தி நிலையை அளிப்பது இந் நூ லாகும். ஆகவே, சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தினை அடைய விரும்பும் ஒவ் வொருவர் கையிலும் இந் நூல் அத்தியாவசியம் இருக்கத் தக்கது.

இந் நூலுக்கு முன்னரே பலர் உரை செய்தனர். அவை இப் போது வழக்கில் அருகிவிட்டன. தற் கால வழக்கிற்கு ஓர் உரை அவசியம் வேண்டும். அதனை திருப் பூவண மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள் உணர்ந்தார்கள். அக் குறையைப் போக்க ஓர் உரை இயற்றியருளினர்.

ஏனை உரைகளையும், இதனையும் ஒத்து நோக்குவோர்க்கு இதன் சிறப்பு நன்கு விளங்கும். இதனை இயற்றிய ஆசிரியரோ இந் நூலின் ஏனை உரையாசிரியர்களிலும் மிக்க புலமை வாய்ந்தவர். வட மொழி தென் மொழிகளில் வல்லுனர். தர்க்கம், வியாகரணம் மீமாம்சை யாதிகளில் பாண்டித்தியம் படைத்தவர். உபநிஷத், பிரஹ்ம சூத்திர பாஷியாதிகளில் சிறந்த ஆராய்ச்சி யுடையவர். பரசமய கோளரி யாதி பல பட்டங்கள் படைத்தவர். இத் தகைப் புலமை நிறைந்த பெரியாரால் செய்யப்பட்ட உரை சிறந்ததா யிருக்கும் என்பதில் ஐயம் என்னை? ஆகவே, இப் பெரியார் இயற்றிய உரையுடன் இந் நூலினை வாங்கித் திரி கரண சுத்தி யோடு சற் குரு வாயிலாய்க் கேட்போர் யாவரும் பொய்யினை யகற்றி மெய்ந் நிலை யாய முக்தி யுறுவர் என்பது திண்ணம். சுபம்!

உ

சிவமயம்.

# புனைந்து உரை.

உலகத்தில் உள்ள ஜீவ ராசிகள், கட்டுப் படவும், விடு படவும், அநேக வித மார்க்கங்கள் உள்ளன. அவற்றிற்கு நூல்களும் பல உள்ளன. ஆனால், விசாரித்துப் பார்க்கும் இடத்து மாந்தர்களின் இச்சை விடுபடுவதில் தான் மிகுதியும் காணப்படுகின்றது. அவற்றுள்ளும், என்றும் அழியாது, என்றும் அறி வாய், என்றும் சுகி யாய் இருக்க வேண்டும் என்னும் இச்சையே, பண்டிதர் முதல் பாமரர் வரை விசாரித்தோ, விசாரம் இன்றியோ வெளிப்படு கின்றது. இந்த இச்சையைப் பூர்த்தி செய்வது, கர்மம், பக்தி, ஞாநம் என்பவற்றில், ஞாநம் ஒன்றே யாம். அந்த ஞாநமும், அநேக வித மாம். பேத ஞாநம் - அபேத ஞாநம் - பேதாபேத ஞாநம் - பரோக்ஷ ஞாநம் - அதிட அபரோக்ஷ ஞாநம் - திட அப ரோக்ஷ ஞாநம் - பிரதி பந்த அபரோக்ஷ ஞாநம் - அப்ரதிபந்த அபரோக்ஷ ஞாநம் எனப் பல வா றாக நூல்களில் கூறப்பட்டிருக் கின்றன. கட்டலும், விடலும், அநாத்ம ஆத்மாக்களின் அவி வேக விவேகங்களினால் உண்டாகின்றன வாகலின், ஆத்ம அநாத் மாக்களின் விவேகம் உண்டாயின், கட்டு விட்டு, மாந்தர் வீட்டினை அடைவர் எனக் கருதி, ஸ்ரீ காள ஹஸ்தி என்னும் ஊரில் வாசமா யிருந்த ஸ்ரீ சேஷாத்திரி (நாக மலை) சிவனார் என்னும் பெரியார், மந்த முமுக்ஷுக்களின் மேல் வைத்த கருணையினால், தத்வ விசார ரூப, நாநா ஜீவ வாதக் கட்டளை என ஒரு வசந நூல், இற்றைக்கு இரு நூறு ஆண்டுகட்கு முன் இயற்றினர். அது வசந வடி வாக இருப்பினும், பொருள் எளிதில் விளங்காமை கருதிப் பலர் விளக்க மான உரையினை அதற்கு விரும்பினர். இந் நூல், 33 விஷயங்களைத் தன் னகத்தே கொண்டு, சுத்தப் பிரஹ்மம் முதல், பரா சக்தி, மூலப் பிரகிருதி - ஜீவன் - ஈசன் - அந்தக் காரணம் -



பிராண வாயு - ஞாந இந்திரியம் - கர்ம இந்திரியம் - பூத பஞ்சகம் - தூல சரீரம் வரைப் பத்துப் பிரி வாக, உத்பத்தி ஸ்திதி லயங் கூறி, தடஸ்த லக்ஷண, ஸ்வரூப லக்ஷண வாயி லாகப் பிரஹ்மத்தினை, பிகங்க (விட்டில்) மார்க்கம் போல் இன்றி, மாதா குழந்தைக்கு உப தேசிப்பது போன்று, பிபீலிகா (எறும்பு) மார்க்க மாகச் சாதந சதுஷ்டய சம்பந்ந முமுக்ஷுக்களை, அநர்த்த நிவிர்த்தி ஆநந்த அவாப்தி யாகிய மோக்ஷத்தினை அடையும்படி கூறுகின்றது.

இந் நூலுக்கு, திரு வா ரூர் - தக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகள் மடாதிபதி, மதுரை, கோ. சித. சிவாநந்த சுவாமிகள் அவர்கள் விரி வான ஒரு வியாக்யாநமும், தஞ்சா வூர் - இராம சாமி ஐயா என்பவர்கள், ஒரு அரும் பத விளக்க உரையும், ஸ்ரீ வில்லி புத்தூர், இசைக்கி யாடும் பெருமாள் பிள்ளை என்பவர்கள் வினா விடை ரூப மான ஒரு உரையும், சென்னை - கோமளேசுவரன் பேட்டை, கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் ஓர் உரையும், காஞ்சீ புரம், ஆ. செங்கல்வ ராய முதலியார் அவர்கள் லகு போதினி என ஓர் உரையும், முன்னரே, பஞ்ச முக ஈசுவரன் போல், இயற்றி யிருக்கின் றார்கள். அங்ஙனம் இருந்தும், மேல் அறு முகக் கடவுள் ஆவிர்ப்ப வித்தது போன்று, ஆறாவ தாக, சத்யார்த்தப் பிரகாசிகை என்னும் உரை, நம்மால் இயற்றப்பட்டிருக்கின்றது. இவ் வுரையின்கண், முன் உரைகளிற் காணப்படாத பொருள்களும், கண்ட பொருள் களும், மூலப் பொருளைத் தெரிவிக்கும்படி யான பொருளும், பஞ்ச கோச விசாரமும், அத்தியாசமும், அத்தியாச நிவிர்த்தி ரூப 35 தத்துவ விசாரமும், வேண்டிய பிரமாண யுக்திகளும், ஆண்டு ஆண்டு இடத்தை அநுசரித்து விரித்து எழுதப்பட்டிருக்கின்றது. ஆறு உரையினையும் ஒப்பிட்டு நோக்குவார்க்கு அவை புல னாம்.

உரை 1947ஹு எழுதி முடிக்கப்பட்டது.

**திருப் பூ வணம் - வேதாந்த மடம்.**

சிவமயம்.

# விஷய அட்டவணை.

| நெம்பர் | பூதம் | சமஷ்டி வியஷ்டி | சத்வம் ரஜஸ் தமஸ் | ஞாநம் தொழில் | இந்திரிய பெயர் | இருக்கும் இடம் |
|---|---|---|---|---|---|---|
| | | | | **பூதம்.** | | |
| 1 | ஆகாயம் | | | | | |
| 2 | வாயு | | | | | |
| 3 | அக்கி | | | | | |
| 4 | அப்பு | | | | | |
| 5 | பிருதிவி | | | | | |
| | | | | **தூல சரீரம்.** | | |
| 1 | பிருதிவி | | | சோணித | தோல் | |
| 2 | பிருதிவி | | | சோணித | இரத்தம் | |
| 3 | பிருதிவி | | | சோணித | மாமிசம் | |
| 4 | பிருதிவி | | | சுக்கில | சநாயு | |
| 5 | பிருதிவி | | | சுக்கில | அஸ்தி | |
| 6 | பிருதிவி | | | சுக்கில | மஜ்ஜை | |
| | | | | **சூக்ஷம சரீரம்.** | | |
| 1 | ஆகாயம் | சமஷ்டி | சத்வம் | அந்தக்கர | உள்ளம் | சிரம் |
| 2 | வாயு | சமஷ்டி | சத்வம் | அந்தக்கர | மநம் | கண்டம் |
| 3 | அக்கி | சமஷ்டி | சத்வம் | அந்தக்கர | புத்தி | இருதயம் |
| 4 | அப்பு | சமஷ்டி | சத்வம் | அந்தக்கர | சித்தம் | நாபி |
| 5 | பிருதிவி | சமஷ்டி | சத்வம் | அந்தக்கர | அஹங்கார | சர்வஅங்கம் |
| 6 | ஆகாயம் | வியஷ்டி | சத்வம் | ஞாநஇந்தி | சுரோத்ரம் | செவி |
| 7 | வாயு | வியஷ்டி | சத்வம் | ஞாநஇந்தி | துவக்கு | தோல் |
| 8 | அக்கி | வியஷ்டி | சத்வம் | ஞாநஇந்தி | சக்ஷு | கருவிழிநுனி |
| 9 | அப்பு | வியஷ்டி | சத்வம் | ஞாநஇந்தி | சிங்குவை | நாக்கு |
| 10 | பிருதிவி | வியஷ்டி | சத்வம் | ஞாநஇந்தி | கிராணம் | மூக்கு |
| 11 | ஆகாயம் | சமஷ்டி | இராஜதம் | வாயு | வியாநன் | சர்வ அங்கம் |
| 12 | வாயு | சமஷ்டி | இராஜதம் | வாயு | பிராணன் | இருதயம் |
| 13 | அக்கி | சமஷ்டி | இராஜதம் | வாயு | அபாநன் | குதம் |
| 14 | அப்பு | சமஷ்டி | இராஜதம் | வாயு | சமாநன் | நாபி |
| 15 | பிருதிவி | சமஷ்டி | இராஜதம் | வாயு | உதாநன் | கண்டம் |

| தொழில் | அதிதேவதை | குணம் | தருமம் | வர்ணம் |
|---|---|---|---|---|
| இடம்கொடுத்தல் | சதாசிவன் | சப்தம் | வெளி | |
| உலர்த்தல் | மகேசுவரன் | பரிசம் | சலநம் | |
| தகித்தல் | ருத்திரன் | ரூபம் | வெப்பம் | |
| பிண்டீகரித்தல் | விஷ்ணு | ரசம் | நெகிழ்ச்சி | |
| பொறுத்தல் | பிரமன் | கந்தம் | திண்மை | |
| தரித்தல் | சதாசிவன் | | | |
| சங்கற்ப விகற்பம் | சந்திரன் | | | |
| நிச்சயம் | பிரமன் | | | |
| சிந்தித்தல் | விஷ்ணு | | | |
| அபிமாநம் | ருத்திரன் | | | |
| கேட்டல் | திக்கு | | | |
| ஸ்பரிசித்தல் | வாயு | | | |
| காண்டல் | சூரியன் | | | |
| ருசித்தல் | வருணன் | | | |
| மோத்தல் | அசுவிநி | | | |
| தாங்குதல் | விசுவயோநி | | | கபில வர்ணம் |
| உசுவாச — நிசுவாசம்] | விசிட்டன் | | | நீல வர்ணம் |
| சேரணிப்பித்தல் | விசுவகர்த்தா | | | பச்சை வர்ணம் |
| இழுத்துச்செல்லல் | சயன் | | | நீல வர்ணம் |
| கடைதல் | அஜன் | | | சந்திர வர்ணம் |

ஞாநஇந்திரியங்களை நடாத்திக்கும்.

| நெம்பர் | பூதம் | சமஷ்டி வியஷ்டி | சத்வம் ரஜஸ் | இந்திரியம் | இடம் |
|---|---|---|---|---|---|
| 16 | ஆகாயம் | வியஷ்டி | இராஜதம் | கர்மஇந்தி | வாய் |
| 17 | வாயு | வியஷ்டி | இராஜதம் | கர்மஇந்தி | கை |
| 18 | அக்கி | வியஷ்டி | இராஜதம் | கர்மஇந்தி | கால் |
| 19 | அப்பு | வியஷ்டி | இராஜதம் | கர்மஇந்தி | குதம் |
| 20 | பிருதிவி | வியஷ்டி | இராஜதம் | கர்மஇந்தி | குய்யம் |

வாயு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | ஆகாயம் | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு | இருதயம் |
| 2 | வாயு | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு | குதம் |
| 3 | அக்கி | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு | நா(பி)(சி) |
| 4 | அப்பு | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு | கண்டம் |
| 5 | பிருதிவி | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு | , சர்வ அங்கம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஆகாயம் | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு |
| 2 | வாயு | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு |
| 3 | அக்கி | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு |
| 4 | அப்பு | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு |
| 5 | பிருதிவி | சமஷ்டி | இரஜோகுணம் | வாயு |

குணம்

| தொழில் | அதிதேவதை | பெயர் | வர்ணம் |
|---|---|---|---|
| வசனித்தல் | அக்கி | வாக் | |
| இடுதல்எற்றல் | இந்திரன் | பாணி | |
| கமனஆகமனம் | உபேந்திரன் | பாதம் | |
| விசர்ச்சனம் | யமன் | பாயு | |
| ஆநந்தித்தல் | பிரஜாபதி | உபஸ்தம் | |

| | | | |
|---|---|---|---|
| வாந்தி சோம்பல் | நாகன் | கர்ம இந்திரியங்களை நடாத்துவிக்கும். | மஞ்சள் வர்ணம் |
| கண் இமைத்தல் விக்கல் தேக்கல் | கூர்மன் | | வெண்மை ,, |
| தும்மல் இருமல் | கிரிகரன் | | அஞ்சன வர்ணம் |
| கொட்டாவி நகுதல் சொல்லுதல் | தேவதத்தன் | | ஸ்படிக வர்ணம் |
| வீங்கல் சோகம் ராகம் | தநஞ்செயன் | | நீல வர்ணம் |

| | | |
|---|---|---|
| அந்தக் கரணத்தை நடாத்துவன | வைரம்பன் | அந்தக் கரணத்தினை நடாத்துவிக்கும். |
| | முக்கியன் | |
| | பிரபஞ்சனன் | |
| | அந்தர்யாமி | |
| | மகாப்பிராணன் | |

| | |
|---|---|
| சத்வம் | வெண்மை |
| ரஜஸ் | சிவப்பு |
| தமஸ் | கருப்பு |

# ॥ अक्षरमालिकाशिवस्तोत्रम् ॥

अद्भुतविग्रह अमराधीश्वर अगणित गुणगण अमितशिव
सांबसदाशिव सांबसदाशिव सांबसदाशिव सांबशिव
आनन्दामृत आश्रित रक्षक आत्मानन्द महेश शिव सांब···शिव
इन्दुकलाधर इन्द्रादिप्रिय सुन्दररूप सुरेश शिव सांब···शिव
ईश सुरेश महेश जनप्रिय केशवसेवितपाद शिव सांब···शिव
उरगादिप्रियभूषण शंकर नरकविनाश नटेश शिव सांब···शिव
ऊर्जितदानवनाश परात्पर आर्जिततापविनाश शिव सांब···शिव
ऋग्वेदश्रुतिमौलिविभूषण रविचन्द्राग्नित्रिणेत्र शिव सांब···शिव
ॠपमनादि प्रपञ्चविलक्षण तापनिवारण तत्त्व शिव सांब···शिव
लिङ्गस्वरूप सर्वेश बुधप्रिय मङ्गलमूर्ति महेश शिव सांब···शिव
लूताधीश्वर रूपप्रिय शिव वेदान्तप्रिय वेद्य शिव सांब···शिव
एकानेकस्वरूप विश्वेश्वर योगिहृदिप्रियवास शिव सांब···शिव
ऐश्वर्याश्रय चिन्मय चिद्घन अच्युतानन्द महेश शिव सांब···शिव
ओंकारप्रिय उरगविभूषण ह्रींकारादि महेश शिव सांब···शिव
औरसलालित अन्तकनाशन गौरीसमेत गिरीश शिव सांब···शिव
अंबरवास चिदंबरनायक तुंबुरुनारदसेव्य शिव सांब···शिव
आहारप्रिय आदिगिरीश्वर भोगादिप्रिय पूर्ण शिव सांब···शिव
कमलापूजित कैलासप्रिय करुणासागर शान्त शिव सांब···शिव
खड्गशूलमृगढक्काद्यायुध विक्रमरूप विश्वेश शिव सांब···चिव



गङ्गाधर गिरिसुतवल्लभगुणहित शंकर सर्वजनेश शिव सांब···शिव
घातकभञ्जन पातकनाशन देवीसमेत गिरीश शिव सांब···शिव
ङङाश्रित श्रुतिमौलिविभूषण वेदस्वरूप विश्वेश शिव सांब···शिव
चण्डविनाशन सकलजनप्रिय मण्डलमूर्ति महेश शिव सांब···शिव
छत्रकिरीटसुकुण्डलशोभित पुत्रप्रिय भुवनेश शिव सांब···शिव
जन्मजरामृतिनाशन कल्मषरहित तापविनाश शिव सांब···शिव
झंकारप्रिय भृङ्गिरिटिप्रिय ओंकारेश महेश शिव सांब...शिव
ज्ञानाज्ञानविनाशक निर्मल दीनजनप्रिय दीप्त शिव सांब...शिव
टंकाद्यायुधधारण सत्वर ह्रींकारादि सुरेश शिव सांब...शिव
ठकस्वरूप सहकरोत्तम वागीश्वर वरदेश शिव सांब...शिव
डंभविनाशन डिंडिमभूषण अंबरवास चिदेक शिव सांब...शिव
ढंढंडमरूकधरणी निश्चल ढुंडिविनायकसेव्य शिव सांब...शिव
ण (न)लिनविलोचन नटनमनोहर अलिकुलभूषण अमृत शिव
सांब..शिव

तत्त्वमसीत्यादिवाक्यस्वरूपक नित्यानन्दसुकृत शिव सांब···शिव
स्थावरजङ्गमभुवनविल(च)क्षण भावुकमुनिवरसेव्य शिव सांब...
शिव

दुःखविनाशन दलितमनोभव चन्दनलेपित चरण शिव सांब...शिव
धरणीधरशुभ धवलविभास्वर धनदादिप्रिय दान शिव सांब···शिव
नानामणिगणभूषण निर्गुण नटनजनप्रिय नाट्य शिव सांब···शिव
पन्नगभूषण पार्वतिनायक परमानन्द परेश शिव सांब...शिव
फालविलोचन भानुकोटिप्रिय हालाहलधर अमृत शिव सांब...शिव

बन्धविनाशन बृहतीशामर स्कन्दादिप्रिय कनक शिव सांब.. शिव
भस्मविलेपन भवभयनाशन विस्मयरूप विश्वेश शिव सांब... शिव
मन्मथनाशन मधुपा (गा)नाप्रिय मन्दरपर्वतवाश शिव सांब ..शिव
यतिजनहृदयनिवासित ईश्वर विधिविष्ण्वादिसुरेश शि सांब ...शि
रामेश्वर रमणीयमुखांबुज सोमेशेश्वर सुकृत शिव सांब...शिव
लङ्काधीश्वर सुरगणसेवित लावण्यामृत लसित शिव सांब...शिव
वरदाभयकर वासुकिभूषण वनमालादिविभूष शिव सांब...शिव
शान्तिस्वरूप जगत्रयचिन्मय कान्तिमतिप्रिय कनक शिव
सांब...शिव
षण्मुखजनक सुरेन्द्रमुनिप्रिय षाड्गुण्यादिसमेत शिव सांब...शिव
संसारार्णवनाशन शाश्वत साधुहृदिप्रियवास शिव सांब...शिव
हर पुरुषोत्तम अद्वैतामृतपूर्ण मुरारिसुसेव्य शिव सांब...शिव
ळाळितभक्तजनेश निजेश्वर कालिनटेश्वर काम शिव-सांब...शिव
क्षररूपादिप्रियान्वितसुन्दर साक्षि जगत्रयस्वामि शिव-सांब..शिव





சிவமயம்.

# நூன் முகம்.

## சிதம்பரம், கோ. சித, மடம், பண்டித — சித. நாராயண சுவாமிகள் இயற்றியது.

மலர் தலை யுலகிற் றலை சிறந்து மிளிர்தரு மக்கட் பிறப் பெய்திய பல்லோ ருள்ளும், அறிவு மீக் கூர்ந்து நெறி யறிந்து, அல்ல லகன்று அழி வறு மின்பந் துய்க்க அவாவி நிற்கும் பெரு மக்கட் குறு துணை யாக நின் றுலவு நூல்கள் பல.

அவற்றுள், ஸ்ரீ சங்கர பாடிய சகித தசோபநிடதங்கள் பகவற் கீதை, பிரம சூத்திரம் என்னும் பெரு நூல்களும், மற்றைய உபநிடதங்களும், அவற்றின் வழித் தோன்றிய வட மொழி, தென் மொழி நூல்களு மாகிய அத்வைத நூல்களே, அச்ச மின்றி அழி வறு மின்பந் துய்க்க வழி காட்டிக ளாக விளங்குவன வாகும்.

தமிழ் நாட்டில் அத்வைதக் கொள்கையை மேற் கொண்ட சான்றோர் பலரும் தம்மை யடைந்த மாணவர்கள், யா னறிபடு பொரு ளல்லன், அறிபடாப் பொருளு மல்லன், அவற்றை யறிகின்ற பொருளே யான், யான் என்று நிலையுத லுடையோன், இன்ப வடிவினன் எனத் தேறி ஏமாப்புற அவர்கட் கறி வுறுத்துவன பதி ஞறு நூல்களே யாகும். இவைகளே யன்றி, இன்னும் பலப் பல நூல்களுந் தமிழில் மிளிர்கின்றன. அவற்றையும், இப் பதி ஞறு நூற் பொருள்களைச் சவித்தார மாகப் புலங் கொளற்காகக் கற்றும் வருகின்றனர்.

இந் நூல்கள் (அத்வைத நூல்கள்) பலவற்றுள்ளும், முதன் முதலில் ஓதப்படுவது, 'நாநா ஜீவ வாதக் கட்டளை' என்னு மருமந்த நூ லாகும்.

இந் நூல் உயிர் இறை உலகங்களின் தோற்றமும்; அவற்றின் ஒடுக்கமுங் கூறி, இவை யனைத்துங் கற்பனையே, கற்பனை கழன்ற பொருளொன்றே யெனக் காட்டு முகத்தான், தத்துவங்க ளிவை யெனவும், அவை யின்ன நிலையின எனவும், மாணவ ருணர்ந்து கொள்ளத் தெள்ளிதின் விளக்கு மோ ரருமந்த கருவியாகவும், உரையாற் சுருங்கியதாகவும் பொலிவுறுகின்றது. இதனை யியற்றியவர் சேஷாத்திரி சிவனா ரென்னும் பிரம நிஷ்ட ராவர்.

இதற்கு (இந் நூற் பொருளை விளக்குவதற்கு) எழுந்த வுரைகள் பே ருரைகளும், சிற் றுரைகளு மாகப் பல விளங்குகின்றன எனினு, மவை யெல்லா, நூற் பொருளை விளக்குவதற்குச் சாலா தன வாகக் காணப்படுதலின், கோயி லூர், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிக ளாகிய, திருக் கள ராண்டவர் சீடர்களுட் டலை சிறந்த சீடர்களோ டொருங் கெண்ணப்படுபவரும், வட மொழி, ஹிந்தி மொழி, தமிழ் மொழிகளில் வல்லுநரும், பூருவ மீமாஞ்சை உத்தர மீமாஞ்சை நியாய வைசேடிக சாங்கியாதி நூல்களில் நிலைபெற்ற ஆய் வுடையவரும், மேதையாளரும், திருப் பூவண வேதாந்த மடாலயத் தலைவரு மாகிய ஸ்ரீ வீர - காசிகாநந்த ஞானாச் சாரிய சுவாமி யவர்களால், படிப்போர் ஐயந் திரிபுக ளறப் பொரு ளுணரு மாறு, 'சத்தியார்த்தப் பிரகாசிகை' என்னு மோ ருரை அந்வர்த்த நாம முடைய தாகச் செய்யப்பட்டிருக்கிறது.

இந் நூற் றொடக்கத்தில், 'சுத்தப் பிரமமா யிருக்கின்ற சர்வ சாக்ஷியினிடத்திலே அக்கிநியிற் சூடு போல அபிந்ந மாக ஒரு சக்தி யுண்டு'. என ஒரு சக்தியும், 'இந்த வகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரமத்தினிடத்திலே சுத்தியில் ரஜதம் போல மூலப் பிரகிருதி யென்னு மொரு சக்தி யுண்டு'. என்னு மொரு சக்தியும் கூறப்பட்டிருக்கின்றன.



இவ் விரண்டு சக்திகளுள், 'மூலப் பிரகிருதி' யென்னுஞ் சக்தி மித்யா சக்தி யாகும். முற் கூறிய சக்தி (அபிந்நா சக்தி) நித்திய சக்தி யாகும். எ னெனில், மூலப் பிரகிருதியைக் கூறும் போதே அது மித்தை யெனத் தெளியும்படி, 'சுத்தியில் ரஜதம் போல' என விளக்க மாகக் கூறி யிருத்தலினாலும், அபிந்நா சக்தியைக் கூறும் போது, அது நித்தியமே யாகு மெனத் தெளியும்படி 'அக்கிநியிற் சூடு போல' என உவமை முகத்தான் விளக்கி யிருத்தலினாலும், பாயிர ஆசிரியர், 'இப்பியி னிடையே யெழு மிரஜதம் போ லென்றுமா யிலகி யின் பாகி, யொப்பிட வேது மின்றிய பிரமத் துற்றிடும் பகுதி' யென மூலப் பிரகிருதியைத் தான், அநித்திய சக்தி யெனக் கூறி, 'என்று மா யிலகி யின் பாகி' என்றதனால், அபிந்நா சக்தி, பிரம சொருப மாதலின், நித்திய சக்தி யெனக் குறிப்பித் திருத்தலினாலும், நூலிலும், அநித்திய சக்தி யாகிய மூலப் பிரகிருதியைக் கூறும் போது, 'பிரமத்தினிடத்திலே சுத்தியில் ரஜதம் போல' எனக் கூறாது, "இந்த அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்தப் பிரமத்தினிடத்திலே" எனச் சுட்டிக் கூறு முகத்தான், அபிந்நா சக்தி நித்திய சக்தியே யெனக் குறிப்பித்திருத்தலினாலும், பிரம சொருப மாகிய அபிந்நா சக்தி நித்திய மாகு மன்றி அநித்திய மாகாது; அது பிரம சொருபமா யிருத்தலினால், துவைத முஞ் சித்தியாது எனச் சில சான்றோர் கருதுகின்றனர்.

இவ் வுரை யாசிரிய ராகிய சுவாமிகள், "இந் நூலில் முற் கூறப்பட்ட சக்தி அபிந்நா சக்தி யாகும். பிற் கூறப்பட்ட சக்தி, பிந்நா சக்தி யாகும். அபிந்நா சக்தி யென்றால், 'வேறாகாம லிருக்குஞ் சக்தி' யென்பது தான் பொருள். அவ் வளவிற்குத் தான் 'அக்கினியிற் சூடு போல' என்னு முவமை கொடுக்கப் பட்டிருக்கிறது. அவ் வபிந்நா சக்தி; "இலக்ஷண சூந்யமா யிருக்கின்ற இந்த சக்திக்கு" என்பதனாலே, அநித்திய சக்தி யென்பது பெறப்படுகின்றது. இனி யதற்கு 'அவ் வதீதப் பிரமத்தி

லடங்கியிருக்கும்" எனவும், '**விசிரிம்பித்துச் சுத்தப் பிரமத்தை வியாபிக்கும் போது**' எனவும், சங்கோச விகாச தர்மமுங் கூறப் பட்டிருக்கின்றன. அக்கியிற் சூடு, தாக சக்தியே யன்றிச் சொரூப சக்தி யன்று. அதனாற் றான் நூ லாசிரியர் 'அக்கினியிற் சூடு போல' என ஏழாம் வேற்றுமை கொடுத்து ஆதார ஆதேய பாவங் காட்டினர். வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் என்னு நூல்களில், '**அபிந்நா சக்தியும்**' பிரம மாகிய கடலில் '**திரை**' யெனக் கூறப்பட்டிருத்தலின், அநித்திய சக்தி யா மெனல் வலியுறு கின்றது. இனி, நைஷ்கர்மிய சித்தி, பஞ்ச தசி, விசார சாகரம், கைவல்யம், வாசிட்ட முதலிய நூல்களிலும், அபிந்நா சக்தி அநித்திய சக்தியாகவே கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், அபிந்நா சக்தி நித்திய மாகாது" என, இன்னும் பல நியாயமுங் காட்டி மறுக்கின்றனர். நிர்க்குண மாகிய பிரமத்தினிடத்தில் சொரூப மாக ஒரு சக்தியுண்டெனலுங் கற்பனை யாகு மன்றி, வே றின் றெனலுஞ் சுவாமிகள் கருத்து. அத்தியாரோப அபவாத முறையாற் கூறத் தொடங்கிய சேஷாத்திரி சிவனார், அத்தியாரோபப் பகுதியில் நித்திய சக்தி யொன் றுண்டு என எங்ஙனங் கூறுவர் என ஒரு இருதலை யுணர்வு முண்டாகின்றது.

சக்தியைப் பற்றி யெழுதிய வுரை வரவேற்கத் தக்க தாகும். அபிந்நா சக்தியு மித்யாத்வ முடைய தென்பதை நிலை நாட்டச் சுவாமிகள், பூர்வ பக்ஷ சித்தாந்த வடிவ மாக ஒ ருரை நடை நூல் எழுதி வெளி விடுவார்க ளாயின், பின்னு மெழு மைய மெல்லா மேது மென்பதி லைய மில்லை.

இனி நூலில், பிராணாதி வாயுக்களைப் பேசும் போது "பிராண வாயு வாயுவி னம்ஸமானபடியினாலே, வாயுவைப் போல இருதயத்தி லிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும்" எனக் கூறப்பட்டிருத்தலைக் கொண்டு, நாசிகாதி பரியந்தம் அலையும் வாயு



காட்சிப் பரிசத்திற் பற்றுக் கோடா யிருத்தலின், அதனைச் சூட்சும பூதத்தி னம்ஸ மான பிராண வாயு எனல் எங்ஙனம் பொருந்தும் என எழு மையம் போக அம் மூலத்தில், 'இருதயத்தி லிருந்து...... .........அலையும் என்பதற்கு, இருதயத்தை இட மாகப் பொருந்தி யிருந்து மூக்கு நுனி வரை உசுவாச நிசுவாச ரூப மாக, உள் தூல வாயுவை வெளியில் தள்ளும் (தள்ளும் = அலையும்படி செய்யும்) என வுரையிட்டிருத்தல் போற்றத் தகுந்த தாகும். வாயு வென்னு மொற்றுமையாலும், இயங்குவது மியக்குவது மாகிய தொடர் புண்மையாலும், இயங்குந் தூல வாயுவின் றொழிலை, யியக்குவ தாகிய சூட்சும வாயுவின் மே லேற்றிக் கூறினார் போலும். இப்படியே தூல வாயுக்களின் றொழிலை சூட்சும வாயுக்களின் மேல் எங்கு மேற்றிக் கூறி யிருக்கின்றனரா? இரண் டொன்றி லேற்றிக் கூறி யிருக்கின்றனரா என ஆய்ந் துணர்ந்த லறிவுடையார் மலை யாமை யாகும்.

இனிப், பஞ்ச கோசங்களைப் பற்றி விரி வாக விளக்கி யிருக் கின்றார்கள். மயம் என்பதற்கு விகாரம், அல்லது, காரியம் எனப் பொருள் கூறி, அந்நம் இப்படி விகாரப்பட்டு மறைக்கின்றது, பிராணன் இப்படி விகாரப்பட்டு மறைக்கின்றது என ஒவ் வொன் றையும் விளக்கி எழுதியும், மநம் என்றால், ஈண்டு மநம் உள்ளம் சித்தம் பஞ்சேந்திரியங்க ளாகிய இவைகளைக் கொள்ளல் வேண்டும், விஞ்ஞானம் என்றால் ஈண்டு, சூடா மணியிற் கூறியது போல, புத்தி அகங்கார ஞானேந்திரிய பஞ்ச மாகிய இவைகளைக் கொள்ளல் வேண்டும். அவித்தையின் சத்துவ குணத்திற் குள்ள '**ஆநந்தத்தை**' அவித்தை யாகிய காரண சரீர மெனக் கொள்ளு மாறு, "**காரண சரீரமே ஆநந்தமயம்**" எனக் கூறியது, பிரதானத் தன்மை யா லாகும். இப்படியே, பிராண மயம், மநோ மயம், விஞ்ஞான மயம் எனக் கூறி யிருத்தலும், பிரதானத்தி னாலாகும் என எழுதி விளக்கங் கூறியும், மறைப்பு, அகர்தா ரூப மறைப்பு, மமதா ரூப

மறைப்பு என இரு விதப்படு மெனக் காட்டி, இப்படி இப்படி மறைக்கின்றன என விளக்கியும், மறைப்பின் நிவிர்த்தியை சுருதி யுக்தி அநுபவ முகத்தான் நன்கனம் காட்டியும், எழுதிச் செல்லல் மாணவருக்குப் பே ருபகார மாகும்.

இனித் தூல சரீரத்தில் சூட்சும சரீர மடங்கி யிருக்கும் நிலையை யாயுங்கால், கர்மேந்திரியங்களும், ஞானேந்திரியங்களும் ஐவ் வைந் தாகப் பத்துத் தானா? கைகள், கால்கள், குதம், குய்யங்கள், காதுகள், கண்கள், நாசிகள் எனக் கோளகங்கள் அவ் வாறாக இருத்தலின் அக் கோளகங்களி னிருக்கும் இந்திரியங் களும் அவ் வாறே யாகுமா? அப்படி யாயின், கர்மேந்திரியங்க ளெட்டு, ஞானேந்திரியங்க ளெட் டாகக் கர்ம ஞானேந்திரியங்கள் பதி னாறே யாகுமா? என ஆயப் புகுந்து, **सप्तप्राणाः प्रभवन्ति तस्मात्सप्तार्चिषः सप्तसमिधः सप्तहोमाः** என்ற முண்டகத்தையும், **किं च सप्तप्राणाः द्वे श्रोत्रे द्वे चक्षुषी द्वे घ्राणे एका वागिति शिरसि स्थितानि सप्तेन्द्रियाणि तस्मात् उक्तपुरुषात् प्रभवन्ति उत्पद्यन्ते** என்ற மணிப் பிரபையையும் கொண்டு, கோளகங்கள் பதி னாறாக விருத்த லின், பதி னாறே தா மிந்திரியங்கள். சுரோத்திரத் தன்மை, சக்ஷுத் தன்மை, கிராணத் தன்மை, பாணித் தன்மை, பாதத் தன்மை, பாயுருத் தன்மைக ளாகிய சாதிகள் ஒவ் வொன்றாக விருத்தலினால், சுரோத்திரம் சக்ஷு கிராணம் பாணி பாதம் பாயுரு என ஒவ் வொன்றாகத் தனித் தனி கருதப்பட்டு மற்றைய நான்கனையுங் கூட்டி நூல்களில் ஞானேந்திரியம் ஐந்து கர்மேந்திரியம் ஐந்து என எண்ணப்படுகின்றன வன்றி வே றில்லை எனச் சில சான்றோர் முடிவு கட்டுகின்றனர்.

இச் சத்தியார்த்தப் பிரகாசிகை யுரை யாசிரிய ராகிய சுவாமிகள் **सप्तप्राणाः प्रभवन्ति तस्मात्सप्तार्चिषः सप्तसमिधः सप्तहोमाः** என்ற முண்டகமும், **किं च सप्तप्राणाः द्वे श्रोत्रे द्वे चक्षुषी द्वे घ्राणे एका वागिति**



**शिरसि स्थितानि सप्तेन्द्रियाणि तस्मात् उक्तपुरुषात् प्रभवन्ति उत्पद्यन्ते** என்ற மணிப் பிரபையும், கோளகங்களைக் கொண்டு சுரோத்திர முதலிய இந்திரியங்களை யிவ் விரண் டெனக் கொண்ட தன்றி, சுரோத்திர முதலிய இந்திரியங்களை இவ் விரண்டே யென வரை யறுக்க வர வில்லை. நியாய சாத்திரக்காரரும், இந்திரிய வாதப் பிரசங்கத்தில், சுரோத்திர முதலிய இந்திரியங்களை ஒவ் வொன் றாகக் கொண்டன ரன்றி, இவ் விரண் டாகக் கொள்ள வில்லை. மனிதர்களுக் கமைந்த கோளகங்களைக் கொண்டு இந்திரியங்களைக் கணக்கிடின், அட்டைக் காயிரங்கா லிருத்தலின், ஆயிரம் பாத விந்திரிய மாக எண்ணல் வேண்டும். ஒரு கோளகத்தில் பல இந்திரிய மிருத்தலும், பல கோளகங்களில் ஒரு இந்திரிய மிருத்தலு மமையும். கரணங்கள் மத்திம பரிமாண முடையன வாகலின், அகங்காரம் வியாநன் துவக்கு இவைகள் சரீர அள வாக இருந்து கொண்டு தந் தந் தொழில்களைச் செய்தல் போலச், சுரோத்திர முதலிய இந்திரியங்களும், தங் கோளகங்களி னள வாக இருந்து கொண்டு, தந் தொழில்களைச் செய்தல் சாலும். அதே முண்டகோப நிடதத்தில், இரண்டாவது முண்டகத்தில், முதலாவது கண்டம் மூன் றாவது மந்திரத்தில், “**सर्वेन्द्रियाणि**” என்பதனை விளக்க வந்த மணிப் பிரபை யுரையில், “**श्रोत्रादि ज्ञानेन्द्रियाणि पञ्च वागादि कर्मेन्द्रियाणि पञ्च**” என ஞான கர்மேந்திரியங்க ளிரண்டும் ஐந் தைந் தாகப் பத்தே யெனக் கூறப்பட்டுள்ளன. இனிச் சீவர்களின் இந்திரியங்களே ஈசுரனுக்கு மிந்திரிய மாகு மென்பது நூல்களின் சம்மத மாகும். அங்ஙன மாக, ஜீவர்களுக்கு மூன்று நேத்திர கோளகங்கள், நான்கு பாணிக் கோளகங்க ளின்மையினாலும், ஈசுரனுக் கவை யுண்மையாலும், விரோதமும் வரும். ஆகலின், கோளகங்களைக் கொண்டு இந்திரியங்களைக் கணக்கிடாமல், கோளகங்களின் அள வாக நின்று தம் தொழில் களைச் செய்யு மிந்திரியங்களை மட்டுந் தொழில் கொண்டு கணக்

கிடல் பொருந்து மன்றிக், கோளகங் கொண்டு கணக்கிடப் போதல் நன்றாகாது என மறுத் துரைத்திருக்கின்றார்கள். இன்னும், பல நியாயமுங் காட்டி யுள்ளார்கள். உரையிற் பரக்கக் காணலாம்.

சுவாமிகள் இந்திரியத்தைப் பற்றி எல்லா நூற்கு மொப்ப முரண்படாது ஆய்ந் துரைத்த இவ் வுரை (இந்திரிய வாத வுரை) சாலப் பொருந்துவ தாகும்.

இனி, மூலத்தில் ஒவ் வொரு பகுதியும் இன்ன இன்ன பொருளை யுணர்த்துகின்றன என வுணருமாறு அவ் வப் பகுதி களின் முகப்பில் தக்க மகுட வுரை எழுதியும், எழுதிய வுரைகட்குத் தக்க சான்று காட்டியும், நாநா சீவ வாதம் என்னு மிடத்தில், 'வாதம்', 'தடஸ்தம்', சொற்பந கற்பிதன்' என்பன போன்ற சொற்களுக்கு ஐய மகல, சொல்வது, இடையி லிருப்பது, சொற் பனத்தால் கற்பிக்கப்பட்டவன் என்பன போலத் துணிந் துரைத்து விளக்கியும், அத்தியாசங்களைப் புலங் கொள விளக்கியும், தத்துவ லயங் கூறும் பகுதியில், ஆவரண விக்ஷேப சக்தி யிரண்டும் தோன்றிய முறைப்படி மூலப் பிரகிருதியின் தமோ குண மாகாமல், மூலப் பிரகிருதியின் சத்துவ ரசோ குணங்களி லொடுங்கு மெனல், இன்ன பற்றி யெனக் காரணங் காட்டியும், இப்படியே காரணங் காட்ட வேண்டிய மற்றைய பகுதிகளிலுங் காரணங் காட்டியும், தன் னுரையாலும், பிற நூலாலும், ஐய மகல வுரை வகுத்திருத்தல் புல னுடையவர்கட்குப் பெரு மகிழ் வூட்டு மென்பதி லைய மில்லை.

இங் ஙனம்,

கோயி லூர் மரபு,

**பண்டித-சித. நாராயண சாமி,**

அறு பத்து மூவர் மடம்,

திரு வை யாறு.

திரிச் சிராப் பள்ளி - குன்றி மணிச் சாமி மடம்,

ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகர் மாணாக்கர்,

## அத்வைதாநந்த சுவாமிகள் இயற்றியன.

### சிக்க லாண்டவர் துதி.

எழு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

திங்கணற் கங்கை திருநுதற் றீவெங் திகழ மதிவிழி காந்து,
தெங்கமிர் சோலைச் சிகிநகர் திகழத் தேவருங் காணுதற் கரிய,
பங்கமில் பாத பதுமம தளித்துப் பார்வையாற் பவமது தொலைத்து,
மங்கல முதவு முகந்தனே சிகன்றன் மலரடி முடிமிசை வைப்பாம். (1)

### ஸ்வர்ண புரீசுவரர் துதி.

பாதக னெனினும் பாரினி லுனைநான் பற்றினேன் மற்றிது கண்டாய், சாதக மிலாத சேயெனி லவனைச் சாவெனச் சீயெனத் தள்ளார், மோதகக் கையை மூவிரு முகத்தான் முழுமிட மிளிர் நகை முகத்தாய், சோதனை செயாமற் சொர்ணபு ரீசா சோகநீங் கிடவருள் செய்வாய். (2)

### சௌந்தரிய நாயகி துதி.

சாதந நான்குஞ் சார்ந்துளோர் தமக்குச் சாத்திர சொரூபி யாய்ச் சரிப்பாய், கோதந மாதி குறித்துவேண் டினர்க்குக் குறைவின்றிக் கொடுப்பதற் குரியாய், ஓதந மாதி யொழிந்திடா துன்னை யோதுவார் தமக்குநன் களிப்பாய், சீதந மாதி திருவரு டருவாய் சீர்சௌந் தரியநா யகியே. (3)

### கோவி லூர் ஆண்டவர் துதி.

அறு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

மானிலத்தோர் மங்களமாம் மாமறையுள் மறைந்தபொருண் மகிமை தோன்ற, மேனிலத்தோ ரெவர்வரினு மேழ்நிலமெய் திடக்கீழேழ் நிலமுங் காட்டத், தேனிலம்பாய் கழநிகர்த் தேவர் புகழ் திருநெல்லை தேட வந்தோய், ஊனிலந்தோய்ந் திடவுதித்த வுயர்முத்தி ராமனடி வுளத்தில் வைப்பாம். (4)

## துற வாண்டவர் துதி.

### எழு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

ஆண்டவ ரடியா ரனைவரு ளருணா சலமுநி யெனும்பெய ரிருவர், பூண்டநற் றுறவோ ரிருவருண் மிக்க பெரியநற் றுறவெனும் பேரான், காண்டகு மடியா ருளங்கொளக் கருணைக் கடலென வுணர்வினை யளிக்கும், மாண்டநற் றுறவோன் மாசிலா மநத்தின் மலரடி முடிமிசை வைப்பாம். (5)

## கருணா நிதி துதி.

கருணையே வடிவாய்க் கழநியம் பதிவாழ் கார்நிற மேகமே யனையாய், தருணமுந் தாமுந் தாழ்நிலை யெனவுந் தள்ளிடா தருளிடுந் தருவே, மருவிய மதமும் மாயையா மிருளும் மடிந்திட மநத்துதி மதியே, இருநிதி யுளதென் றியம்புவர் கருணா நிதியினை யெண்ணுறு தவரே. (6)

## கொற்ற வா ளீசுவரர் துதி.

அறியொணாப் பொருளை யநுபவ மதனி லறியென வருமறை கூறப், பொறியினா லறியப் புகுந்திடப் புந்தி பொய்ப்பொருட் போதமாய் நிற்கக், குறியினா லுணர்த்தக் கோவிலூர் தன்னிற் கொற்றவாள் கரங்கொண்டு நின்ற, செறிகுழ னெல்லைத் தேவியை மணந்தோன் றிருவடி நிதம்பணி குவமே. (7)

## திரு நெல்லை அம்மன் துதி.

கரிமுகன் கந்தன் வலம்வரக் கனியைக் காணவே கணபதிக் களித்து, எரிகட லுடுத்த புவநமீ ரேழு மெவையுமா யிருக்கின்றே னென்றான், விரிதரு வதநம் வேதனைப் படவே வேலநீ பழமென வுரைத்துத், திரியெனத் தேற்றுந் திருநெல்லைத் தேவி திருவடி நிதந் துதித் திடுவாம். (8)



## திருக் களர் ஆண்டவர் துதி.

### எண் சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

தானானென் றுடலாதி தன்னிற் றாழ்ந்து தளராதே தனைத் தருவான் றாழ்வி னெஞ்சே, பூநாற்றம் பொலியுநறை பாரி ஜாதம் பூவிலுயர் வநத்திருந்தான் பாத நண்ணி, வானான வாசகத்தான் வாய்மை பூண்ட வள்ளல்வீ ரேசனடி வாழ்த்து வாயேற், கூனான குறைகளெல்லாங் குறியா துன்னைக் கோதில்பதங் கூட்டுவிப்பான் குறையு மின்றே. (9)

## பாரிஜாத வநேசர் துதி.

### எழு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

சத்திய ஞானஞ் சார்வதற் கிசைந்து சற்குரு சரண்புகுந் திதயம், பத்தியாய்ப் பாரி ஜாதவீச் சுரன்றன் பாதபங் கயத்தினைப் பணிந்து, நத்திய நாத தத்துவ மீறாய் நானென னவிலுதல் விடுத்துச், சத்தியா மமிர்த வல்லியைச் சார்ந்து சஞ்சலந் தவிர்ந்துவாழ் குவமே. (10)

## அமிர்த வல்லி அம்பாள் - கணபதி - சுப்பிரமணியர் துதி.

அருக்கனே முதலா யட்டமூர்த் தியுமா யகம்புற மானதோ ரன்பைக், குருக்களாங் குகனைக் கோமளக் கூந்தற் குமரியா மமிர்தவல் லியினை, எருக்கணி பாரி ஜாதவீச் சுரனை யெந்தையாம் வலம்புரி யிறையைத், திருக்கள ருகந்து தேடியே வருவோர் தீவினை தேய்ந்துதீய்ந் திடுமே. (11)

## திருப் பூவண நாதர் துதி.

பொன்னையே யனையாள் பொழுதுபோ மளவிற் பொருளுடைப் புருடரைப் பொருந்தித், தன்னினு மினிய தலைவனல் லுருவஞ் சமைத்திடத் தன்னுளத் தெண்ணி, மன்னிய தொருநாட் சித்தனாய்ப் புகுந்து மாற்றுயர் பொன்னையே தந்த, நன்னலமார்ந்த பூவணப் புநித னாண்மல ரடிபணிந் திடுவாம். (12)

### சௌந்தரிய தடித் தம்பாள் துதி.

தாழ்விலாத் தாக வேட்கையைத் தணிக்கத் தயவுடன் தந்த நல் வைகை, சூழ்நிலம் பரவுஞ் சோலைப்பூ வணத்திற் சோகநீங் கிடவருள் சுரக்கும், பாழ்பிணிப் பிறப்பேழ் படுதுயர் நீங்கப் பற்றினூர்க் கபயம தளிக்கும், மீழ்விலாத் துரிய பதமின்னும் பிகையின் மிளிர் துணை மலரடி தரிப்பாம். (13)

**உரை யாசிரியர் ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் புகழ்ப் பா.**

வேண்டுவார்க் கினிய விருப்புட னுதவும் வீரசே கரனடி முடிமேல், பூண்டுபார் மீதிற் புகழ்மிகு முபய பாஷையிற் போதக குருவாய், மீண்டுமோர் ஹிந்தி மேவிட மூன்று புலமைசேர் மணியென மிளிர்ந்தே, ஈண்டுயர் சமய கரியென விசைப்பி னிளவரி யேறென வெதிர்ப்பான். (14)

திருந்துநல் வேதச் சிரப்பொருள் தெரியத் திருப்புவ நத்தினிற் சிறந்த, அருந்தமி ழாய்ந்த வரியநற் றலமா மாலவா யமர்ந்தரு ளண்ணல், குருந்தின்றண் ணிழற்கீழ் குருகுல மமைத்த கொள்கை போற் பூவண மதனிற், பொருந்தவே தாந்த மடந்தனை நாட்டிப் பொலிவுறுங் குலபதி யானேன். (15)

திருமறை நான்குந் தெள்ளிதி னுணர்ந்து திகழ்திருப் பூவண மதனிற், றிருவருங் கடற்போன் மும்மொழிப் புலமை தேக்கிநல் லுரைகவி யாற்றன், மருவுநல் லறிவான் மறுபிறப் படையா மருந்தென நூறுநூ றந்தான், குருமுறை மரபு குறிக்கொளுங் காசி காநந்தக் கோமுனி யவனே. (16)

இன்னமு மவன்ற னியல்பினை யிசைப்பி லிணையிலாப் பிரசங்க மொழிவோன், நன்னலப் பாஷை வடமொழி ஹிந்தி நற்சுவை யுடன்மொழி பெயர்ப்போன், சொன்னலக் கவியோ டுரைநடை வரைவோன் சொன்னநா லாற்றலு முடையோன், தன்னிலந் தனிலே சதுர்வித சக்த சாகர ரெனவுமே யுரைப்பர். (17)



சொன்னநல் லுரையைத் தொடர்புறு போது சொல்லுவே னின்னுமோர் மகுடம், நன்னிலந் தனிலே குரவனாய் விளங்கு நன்மையைக் கண்டுமே பெரியோர், மன்னிலந் தனிலே மண்டலே சுவரர் மாண்புறு பெயரையு மீந்தார், இன்னிலந் தனிலே யித்தனை பெயரு மியல்புட னிலங்கிடு வோனே. (18)

நலமுறு நாநா ஜீவனை நவின்ற நாகமா மலைச்சிவன் னூலை, உலகினி லுகந்த தேசிக னுதவ வுயர்முத்தி ராமனுட் கொண்டு, தலமிதி லுயர்ந்த சமிவநந் தன்னிற் சார்ந்தசற் சீடனுக் குதவ, வலமொடு மிளிரு மற்றிது தனக்கோர் மாசறு முரைவகுத் தனனே. (19)

தெருளுடைத் துருவா சமுநிநற் றவற்குத் திநந்திநந் திருநடங் காட்டி, மருளுடை மநத்தார் மாசுநீங் கிடவே மன்னுவீ ரேச்சுர முநியாய்க், கருவிடைக் காலைக் கதிரவ னெனவே காசினி தனி லுதித் தருளுங், குருவடி யடைந்த காசிகா நந்தக் குருவுரை யினைக்குறித் திடுவாம். (20)

கட்டளை யநேகங் காரிய பேதங் கண்டிடக் கணக்கற்ற சத்தி, இட்டளைக் கின்ற தாயினு மிந்நூ லுரைத்தநல் லுரைதனக் கொப்பாச், சிட்டனைத் தேற்றுஞ் சிற்றுரை தனக்குச் சீர்மிகு சுருதிகள் காட்டி, இட்டம தாக விரண்டிலை யொன்றே யென்றன னிவ்வுரை வல்லோன். (21)

பாரினி னின்னூல் பயின்றிடா திருப்பின் பரைமுதற் பிறந்ததத் துவங்கள், சாரினி துற்ற சாத்திர மறியார் சற்குரு சரண்பணிந் துத்தி, சேரினிச் சத்யார்த் தப்ரகா சிகையாந் தெளி வுரை சிறப்புட னமைத்தான், காரினி துதவுங் கணக்கெனக் காசி காநந்த குணக்கட லனையான். (22)

பெறலரும் பிரமம் பேசிய விடத்துப் பேதமா யபேதமா விரண்டு, தாமது தோன்றத் தகைம துடைய தணலெனச் சத்திதா னுண்டு, திரமது வன்று மெனக்கண்டு சீவன் சிவனெனத் தெளிந்ததன் னிலையில், மாமது கான மறைந்தநற் கரிபோன் மாயையு மன்னினின் றிடுமால். (23)

தோன்றுறு மூலப் பகுதிதான் பாத்திற் சுத்திகா ரசதமே யனைத்தாய், மூன்றுட னிரண்டு சத்திமுக் குணத்தான் மூவித முதித்தசத் தைகளாய், மூன்றுபத் தாறுய் முறையினி லொடுங்க முத்தனு நிலையினிற் றணிந்தே, ஊன்றுமெய் யொன்று மிரண் டெனிற் பொய்யென் றேதின னுரையினிற் றணிந்தே. (24)

பரமதிற் றேன்று முலகது பாம்பு தாம்பெனும் பான்மைய தாகக், காறுனி காட்டிக் குறைமதி காணுங் கருத்தெனக் கட்டளை யுரையைத், திரமதி யில்லார்க் குரைத்துத்தி விரர்க்குத் திருட்டியே சிருட்டியென் றுரைத்தார், குரவணி வீர சேகரன் றுணைத்தாள் குறைவின்றிக் கொளமுடி தரித்தோன். (25)

காசினி தன்னிற் காசிகா நந்தன் கழறிய கருத்துரை முதலாய், பேசிய வுரைக்குப் பெரியநற் றவத்தோர் பெரிதுநன் காய்வுரை யொன்றும், மாசிலா நன்னூற் கோவைநன் மணியு மன்னிடு முகவுரை மாண்பும், பூசித மிருநற் பாயிரம் புகழ்ப்பாப் பொருந்தவா றுய்ப்பொலி தருமே. (26)

1. வீர சேகர ஞான தேசிகர் மாணுக்கர். 2. உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாச்சாரியர். 3. திரி பாஷா பண்டித மணி. 4. பர சமய கோளரியார். 5. திருப் பூவண வேதாந்த ஸ்தாபகர். 6. சத சாஸ்திர கர்த்தர். 7. சதுர் வித சக்த மடாகரர். 8. மண்டலேசுவரர் என என்வித நாமம் வழங்குவர்.



சிதம்பரம் - ஸ்ரீ மௌந தேசிக ராதீநம்,

## ஸ்ரீமத் - சபா பதிச் சுவாமிகள் இயற்றிய

## சிறப்புப் பாயிரம்.

அறு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருத்தம்.

திருவளருங் கமலமுறை யயன்முதலா மவர்வணங்குந் தேவ தேவன், அருள்வளருந் திருக்கோவில் புண்ணியநன் னதிகள்பல அமைத லாலே, பெருவளஞ்சேர் பாரதநற் றிருநாடே பீடுடைத் தாம் பெருக வாழும், தெருள்வளரு மாந்தர்களே சிறப்புடையர் அவர்விரும்புஞ் செவ்வித் தாய. (1)

அறமொடுநற் பொருளின்பம் அந்தமிலின் பந்தருஞ்சீ ரழிவில் வீடே, உறுதியுடைப் பொருளென்ப உவமையிலாத் தனிவீட்டிற் குயர்ஞா நந்தான், பெறுவழியா மதுபெறுவோர் வியாசர்சங் கரர்முதலாம் பெரியோர் தந்த, மறுவறுசுத் திரம்பாடி யம்முத னூல் பலகற்று வருந்தா வண்ணம். (2)

வாடாத தவநலங்கொள் சேடாத்ரி சிவனுர்தாம் வகுத்தார் செய்ய, நாடாத வுயர்வுறுநா நாசிவ வாதக்கட் டளையங் நன்னூல், பீடாரும் பிரமத்தை அதத்துவா விருத்தியினுற் பிறங்கப் பேசி, கூடார்த்தங் களைவிள்க்கித் தைத்திரிய சாரமெனக் குலவா நிற்கும். (3)

கமலவரு குருதகூஷி ணுமூர்த்தி திருமரபு கவின வந்த, அமலமுகி சிவாநந்த அறிஞன்முத லாமைவர் அரிதாய்ச் செய்தார், விமலமுறு பேருரைக ளவைகளினு னனிசிறந்து விளங்கு மாறு, எமதுளங்கொ ணல்லுரைசெய் திடுகவென அன்பர்பலர் இசைத்த லாலே. (4)

பொன்பூத்த பெருஞ்சிகாப் பொதியவரை யதனில்வரு பொருநை வைகை, மின்பூத்த புனல்வழத்தோ டமிழ்துறழ்செந் தமிழ்வளமு மேவு பாண்டி, மன்பூத்த திருநாட்டுப் பூவணமாந் திருத்தலத்து மடந்தா பித்துக், கொன்பூத்த நெடியவரைக் குறுமுனிவ னெனவிளங்குங் குரிசி லாவான். (5)

கருக்கடக்க விறைவனருள் திருக்கோலங் குருவடிவே யென்னக் கண்டு, திருக்களராண் டவரென்னுங் கோவிலூர்க் குரு வீர சேக ரன்றன், மருக்கமழ்மென் மலர்ப்பாத சேகரனாய் வருவீரன் மலர்க டுவி, உருக்கமுட னவன்றனையே நாடொறும்பூ சித்துவரு முறுதி கொண்டோன். (6)

இருமொழியின் கணுகிலவும் இலக்கியமும் இலக்கணமும் எளிதிற் றேர்ந்தோன், மருவிடுநற் றருக்கமுதல் மற்றைய நூல் பற்பலவும் மநதிற் கொண்டோன், கருகலற மெய்ப்பொருணூல் அனைத்தினையும் முறைப்படியே கற்ற சீலன், பொருவுதலில் அநுபூதிச் செல்வனெனப் பூவுலகு புகழத் தக்கோன். (7)

நிலவுலகந் தனியியற்கை திருவேறு தெள்ளியராம் நிலைமை வேறென், றலகில்புகழ் வள்ளுவனார் அறைந்திடுகூற் றினைமறுப் பான் அவனி மீதிற், பலகலைகண் முழுதுணர்ந்தும் பாராளு நிதி படைத்தும் பலரு மெச்ச, இலகுமிகு பெருந்திருவா ளன்னெனவே யிவ்வுலகி லிலங்கா நின்றோன். (8)

சாதுசங்க மாரூரிற் றோன்றியநாண் முதலதற்குத் தலைவ னாவோன், ஆதுலர்கட் கறுசுவையோ டினியவுண வளிக்கமிகு மார்வங் கொண்டோன், சேதுமுத லிமயம்வரைச் சிறந்தொளிர்நற் றிருத்தலயாத் திரைகள் செய்தே, மாதுமிளிர் கூறவனை வழி பட்டிங் கெதிவானாய் வயங்கா நின்றோன். (9)



சீரியவாம் வேதாந்த பரிபாஷை நைஷ்க்கர்ம்ய சித்தி முன்னாங், கூரியநல் லறிவுதரு மொழிபெயர்ப்பு நூல்களொடு குறைவில் பத்திக், கேரியைதோத் திரநூலு முரைபலவும் தமிழ் மொழியி லியற்றிப் பின்னும், நேரியவாஞ் சொற்பொழிவு பல விடங்க ணிகழ்த்தியிசை நிறுவிக் கொண்டோன். (10)

மொழிசுருங்கல் பொருள்விளங்கல் முறைப்படவைத் திடுத லிவை முதல வாய, எழிலமையச் சத்தியின்வி சாரமே இந்திரிய விசார மேயும், பொழிதருநல் ஐங்கோச விசாரமிவை முன்னுன புதிதாய்ச் சேர்த்தே, வழிவழியே வந்திடுசம் பிரதாய வழக்கு களும் வயங்கச் செய்தே. (11)

கற்பவர்கள் எளிமைநலங் கண்டுவப்பக் கற்றவர்கள் கவின் கொண் டாட, விற்பனர்நுண் பொருணுகர்ந்து மனங்களிப்பச் சிரமசைத்து வியந்து போற்றப், பொற்பமைமெய்ப் பொருள் விளக்க மெனும்பெயரிட் டுரையொன்று பொலியச் செய்தான், சற்குணவா னுங்காசி காநந்த ஞானவா சார்யன் றானே. (12)

---

# உதாஹரண நூல் 25.

3. जगत् 1-15 87
4. पञ्चश्रम 1-15 ,,
5. स्पटिक 1-15 ,,
6. रज्जु 1-15 88
7. तमेव धीरा 1-37 124

19. வாாக உபநிஷத்.

1. சரீரத்தில் 5-4 91
2. चतु 1-1 93
3. तेषां 1-2 ,,
4. कर्मे 1-3 ,,
5. मनो 1-4 ,,
6. एतैर 1-5 ,,
7. देहत्रयं 1-6 ,,
8. आहत्य 1-7 ,,
9. षड्भाव 1-8 ,,
10. अशना 1-9 ,,
11. त्वक् 1-10 94
12. एते 1-11 ,,
13. प्रारब्ध 1-12 ,,
14. संकल्पो 1-13 ,,
15. दिग्वा 1-14 ,,
16. आहत्य 1-14½ ,,

20. திரு மந்திரம்.

1. ஆகின்றதொண்ணூ 2-79 96

21. மஹா உபநிஷத்.

1. आदौ 5-104 108
2. अज्ञस्य 5-105 109

22. பகவற் கீதை.

1. இவ்வகை 2-48 112
2. அறிவினிற் 2-49 ,,
3. ஆமைதன் 2-50 ,,
4. குறையுமா 2-51 113
5. ஆதலாற் 2-52 ,,
6. எரிகிகர் 2-53 ,,
7. வேண்டல் 2-54 ,,
8. அடுத்தலம் 2-55 ,,
9. ஆறுசெல் 2-56 ,,
10. யாதொரு 2-57 114
11. நீரினல் 2-58 ,,
12. யானென 2-59 ,,
13. கண்ணிய 14-19 119
14. வாய்மைய 14-20 ,,
15. மாசமவமாசம் 14-21 ,,
16. இப்பசி 14-22 ,,



17. ஒழியாதென்று 14-23 120
18. எயகானெதி 12-1 121
19. மன்னகீ 12-2 ,,
20. உரைசெயற் 12 3 ,,
21. காரண மிறந் 12-4 122

23. சூத சம்ஹிதை
முக்தி கண்டம்
5-வது அத்தியாயம்.

1. எந்த மனிதன் 32 117
2. ஆத்மா தேகம் 33-34 ,,
3. அதிவர்ணுசிரமி 14 ,,
4. அதிவர்ணுசிரமி 15 118

24. நாரத பரிவிராஜக உபநிஷத்.

1. எவன் 9 118
2. பாதத்துவத்தை 10 ,,
3. போத ரூப 11 ,,
4. எவனுக்கு 12 ,,
5. எந்தப் புருஷன் 13 ,,

25. ஸ்மிருதி.

1. अनुत्तरीय 123
2. येनकेनचित् ,,
3. कन्याकौपीन ,,
4. निराशिष ,,
5. याडहेरिव 124
6. येन पूर्णमिवा ,,

உதாரண நூல் தொகை 25.

1. யோக சூடாமணி உபநிஷத் 1
2. முண்டக உபநிஷத் 1
3. மகா நாராயண உபநிஷத் 2
4. சுவேத அசுவதர உபநிஷத் 1
5. சுபால உபநிஷத் 1
6. அன்னபூர்ணு உபநிஷத் 7
7. வாாக உபநிஷத் 16
8. நியாய சூத்ரம் 1
9. மஹா உபநிஷத் 2
10. சூத சம்ஹிதை 4
11. நாரத பரிவிராஜக உபநிஷத் 5
12. ஸ்மிருதி 6

47

13. ஸ்வாராஜ்ய சித்தி 1
14. தத்துவா நுசந்தானம் 1
15. விசார சாகரம் 2

4

16. லகூஷண விருத்தி 6
17. பஞ்ச தசி 2
18. கைவல்ய நவநீதம் 6
19. வைராக்ய தீபம் 2
20. வாசிட்டம் 19
21. பிரஹ்ம கீதை 3
22. வேதாந்த சூடாமணி 14
23. சிவ ஞான வள்ளலார் 4
24. திரு மந்திரம் 1
25. பகவற் கீதை 21

78

ஆக 129

# உரை விஷய அட்டவணை.

உ

# விஞ்ஞாபனம்.

நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும், சக்தி விவேசநமும் என்னும் பெய ருடைய நூல் சீக்கிரம் வெளி வரும்.

அதில், நாநா ஜீவ வாதக் கட்டளையில் கூறப்பட்ட கிரமங்கள், ஐக்கிய வாத சைவக் கலப்போடு வேதாந்த சித்தாந்தத்தை முடிவாகக் கூறப்படுகின்றன என்றும், அதில், கூறப்பட்ட அபிந்நா சக்தி பிந்நா சக்திகள் ஐக்கிய வாத சைவ தாந்திரிக நூலைப் பற்றிய கருத்தைக் கோண்டு கூறி, வேதாந்தத்தில் கூறும் சக்தியையே பரிபாஷையாக மோழிந்தனர் என்றும், விரிவான கடா விடைகளால், பூர்வ பக்ஷ சித்தாந்த ரூப மாக அறிவோ ருணருமாறு எழுதப்பட்டிருக்கின்றது.

அதில், பின்னும் சிலர் எழுதிய பூர்வ பக்ஷத்தைப் பார்த்தே கண்டந ரூப சித்தாந்தம் எழுதப்படுகின்றது.

திருப் பூவண மடம்,
காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்.

உ

# பாயிரம், ஸ்தோத்திரம்.

குணமிகு வைகைக் கரைக்கண பதியைக்
குமரவே டிருவடி களைத்தீ,
வணமொடு திகழும் பூவண விறையின்
வண்பதத் தினைப்பவத் தினைப்போ,
வணமருள் செய்யு மழகிமின் னனையாள்
வலியுறு பதத்தினைத் திருப்பூ,
வணமட வயின்வாழ் கணபதி கழலை
வணங்கிவாழ்த் திடரொழித் திடுவாம்.

அருப்புநேர் முலையா ரல்குலை விரும்பி
யநேகநா ளலைந்திடு மநதைக்,
கருப்பமார் துயரைக் காவினுங் கருதாக்
கயவனு மென்னுள மதனைத்,
திருப்பிமா வீட்டின் றன்மையை யுணர்த்தித்
திருவடி களைக்கொடுத் தாண்ட,
விருப்பமா யெவரும் போற்றிவந் தடையும்
வீரஞா நேசனைப் பணிவாம்.

கோவிலூர் வாழும் வந்நிமா முகனைக்
குமரனைக் கொற்றவா ளிறையை,
நாவலர் போற்று நெல்லைநா யகியை
நம்பன்முத் திராமலிங் கத்தைத்,
தாவரம் போலுந் துறவிறை யவனைத்
தண்ணளி சிதம்பரா சானைச்,
சோலர் பரவுந் திருக்களர் வீர
சேகர விறையினைப் பணிவாம்.

அருக்கனல் லொளியாம் வலம்புரிக் களிற்றை
யருடரு மாறுமா முகனை,
மருக்கமழ் பாரி ஜாதக்காட் டிறையை
மாவுடை யமுதவல் லியினைக்,
கருத்தினிற் கருணை பத்திநல் விராகங்
களையுடைப் பக்குவர்க் கருளுந்,
திருக்களர் வீர சேகா விறைவன்
றிருவடி களைத்திநம் பணிவாம்.

மந்தமதி யினர்தமக்குப் போத மாக்க
மதித்துலகைப் பிரஹ்மத்தி னிடத்திற் றேற்றி,
இந்துமதிச் சாகையென்ன வறிவித் தாரு
மின்புறவே தத்துவத்தின் விவேகஞ் செய்யு,
நந்தலில்நா நாஜீவ வாதக்கட் டளையை
நவின்றனர்கா சிகாநந்த னெனுந்துறவோ னதற்குச்,
சந்ததஞ்சத் தியார்த்தப்ர காசிகையென் னுரையைத்
தந்தனனியா வருங்கண்டு சிந்தைமகிழ் வுறவே.



சிவமயம்.

# நாநா ஜீவ வாதக் கட்டளை மூலமும்,

## சத்யார்த்தப் பிரகாசிகை என்னும் வியாக்யாநமும்.

வாதம் என்பது சொல்லுவ தாம்.

வாதம், அஜாத வாதம் - ஜாத வாதம் என இரு திறப்படும்.

**1.** அவற்றுள், அஜாத வாதம் ஆவது:- (பிரஹ்மத்தி னிடத்தில், ஜாதம் - பிரபஞ்சம் சத்ய மாக உண்டானது) அஜாதம் - உண்டான தில்லை (என்பதை), வாதம் - சொல்வது, என்பது பதப் பொருள். பிரஹ்மத்தி னிடத்தில் பிரபஞ்சம் சத்ய மாக உண்டான தில்லை என்பதைச் சொல்லுவது என்பது திரண்ட பொரு ளாம். இதனை ஏக சத்தா வாதம் என்றும், பாரமார்த்திக சத்தா வாதம் என்றும் கூறுவர்.

2. ஜாத வாதம் ஆவது:- ஏக ஜீவ வாதம், நாநா ஜீவ வாதம் என இரு வகைப்படும். அவற்றுள்,

3. ஏக ஜீவ வாதம் ஆவது:- (பிரஹ்மத்தி னிடத்தில்) ஏக ஜீவன் - ஒரே ஜீவன் (கற்பிதன் என்பதை), வாதம் - சொல்வது, என்பது பதப் பொரு ளாம். பிரஹ்மத்தி னிடத்தில் ஒரே ஜீவக் கற்பிதன் என்பதைச் சொல்வது என்பது திரண்ட பொரு ளாம்.

இதனை, திருஷ்டி சிருஷ்டி வாதம் என்றும், பாரமார்த்திகம் - பிராதிபாசிகம் என்னும் இரண்டு சத்தா வாதம் என்றும் சொல்வர்.

**4.** திருஷ்டி சிருஷ்டி வாதம் ஆவது:- திருஷ்டியே - ஞாநமே, சிருஷ்டி - (பிரபஞ்ச) உற்பத்தி என்றும், திருஷ்டி - சம காலம் - பிரபஞ்ச உற்பத்தி என்றும், திருஷ்டி, அநந்தரம் - ஞாநத்தின் பின், சிருஷ்டி - பிரபஞ்ச உற்பத்தி என்றும், அநேக வேறுபா டுடைய தாம்.

இவற்றின் விரிவை, நாம் மொழி பெயர்த்த, வேதாந்த சித்தாந்த முக்தாவலி என்னும் நூலில் பரக்கக் காண்க.

5. நாநா ஜீவ வாதம் ஆவது:- நாநா - (பிரஹ்மத்தி னிடத்தில்) அநேகம், ஜீவ - ஜீவர்கள் (அநாதி கற்பித ராக இருக்கின்றார்கள் என்பதை), வாதம் - சொல்வது என்பது பதப் பொரு ளாம்.

பிரஹ்மத்தி னிடத்தில் அநேக ஜீவர்கள் அநாதி கற்பித ராக இருக்கின்றார்கள் என்பதைச் சொல்வது என்பது திரண்ட பொரு ளாம்.

இதனை, சிருஷ்டி - திருஷ்டி வாதம் என்றும், பாரமார்த்திக சத்தை, வியாவகாரிக சத்தை; பிராதிபாசிக சத்தை என்னும் மூன்று சத்தா வாதம் என்றும் கூறுவர்.

இதில், ஆபாச வாதம், அவச் சேத வாதம், பிம்பப் பிரதிபிம்ப வாதம் எனப் பல வேறுபாடுகள் இருக்கின்றன. ஆபாசன் சத்தியம் என்றும், மித்தை என்றும், பிரதிபிம்பம் சத்தியம் என்றும், மித்தை என்றும், பிம்பமே பிரதிபிம்பம் என்றும், பிம்பத்துக்கு வேறாய்ப் பிரதிபிம்பம் உண்டு என்றும், பல பாகுபாடுகள் இருக்கின்றன. இவற்றின், விரிவை "வேதாந்த சித்தாந்த முக்தாவலி" என்னும் நூலில் காண்க.

கட்டளை முறை. ஈண்டுக் கட்டளை என்பது உவமை ஆகு பெய ராய், முறை யாகச் சொல்லும் நூலுக்கு ஆயிற்று. இஃது ஒரு சொல் நீர்மைத்து ஆகும். கட்டு அளை எனப் பிரித்து, கட்டு - உறுதி யாய, அளை - வளை - சக்கரம், உறுதி யான ஆஞ்ஞா சக்கரம் போன்று நிரை நிரை யாக பிரஹ்ம முதல், சிருஷ்டி, திதி, சம்மாரம், திரோபவம், அநுக்கிரகம் என்பவற்றைத் தடஸ்த மாகக் கொண்டு, தோற்றம் நிலை ஒடுக்கம் கூறி, பந்த மோக்ஷ விவஸ்தை



யினைச் செய்தலின், உவமை ஆகு பெய ராய் நூலுக்குக் கட்டளை என ஆயிற்று எனினும் ஆம். இஃது இரு சொல் நீர் மைத்து ஆகும்.

வாதம் என்னும் சொல்லுக்கு, பாதம் - நாசம் - நிவிர்த்தி எனப் பொருள் கூறுதல் பொருத்த முடைய தன்று.

வாதம் என்னும் சம்ஸ்கிருதச் சொல்லை, பாதம் என்னும் சொல் போலக் கருதி, தீபம் தீவம் என்பன போன்று மயங்கி, நாசம் எனப் பொருள் கூறுதல் பாஷையின் ஞானம் இல்லார் கூற்றும். அங்ஙனம் இன்றி, வாதம் என்னும் சம்ஸ்கிருதச் சொல்லைத் தமிழ்ச் சொல் லாகக் கருதி, வாதம் என்பதற்கு, நாசம் என்றே பொருள் கூறுவா ராயின், சத் கியாதி வாதம், அசத் கியாதி வாதம், அந்யதாக் கியாதி வாதம், அக்யாதி வாதம், அநிர் வசநீயக் கியாதி வாதம், ஆபாச வாதம், அவச்சேத வாதம், பிம்பப் பிரதிபிம்ப வாதம், விருத்தி வாதம், பரிணம வாதம், ஆரம்ப வாதம், விவர்த்த வாதம், ஸ்யாத் வாதம், சாமாநாதிகரண்ய வாதம், பக்ஷதா வாதம்; வியாப்தி வாதம், ஹேத்வாபாச வாதம், க்ஷணிக விஞ்ஞாந வாதம், நித்திய விஞ்ஞாந வாதம், பிரபுடி வாதம், நாஸ்திக வாதம், ஆஸ்திக வாதம், நிரீசுவர சாங்கிய வாதம், சேசுவர சாங்கிய வாதம், ஞாத வாதம், அஞ்ஞாத வாதம், அத்வைத வாதம், த்வைத வாதம், சாமாந்ய வாதம், விசேஷ வாதம், என்னும் 30 இடங்களில் நாசம் என்னும் பொருளை அங்கீகரிப்பரா? அங்கீகரியார். ஆகவே, பாஷைச் சொல்லை உணர்ந்து காலம் தேசம் இடம் நோக்கிப் பொருள் கொள்ளல் வேண்டும். (எ-று).

[ஆக்கியோன் பெயர் - நூன் முறை - பயன், கூறப்படுகின்றது.]

## சிறப்புப் பாயிரம்.

இப்பியி னிடையே யெழுமிர சதம்போ லென்றுமா யிலகியின் பாகி, யொப்பிட வேது மின்றிய பிரமத் துற்றிடும் பகுதிமுன் னாய, அப்பிர பஞ்ச முறைமையைத் தூல வருந்ததி நியாயமே யென்னச், செப்பினன் யாருந் தெளிவுறச் சேஷாத் திரிசிவ னென்னுமா தவனே.

இதன் பொருள்:— சேஷ அத்திரி சிவன் - சேஷாத்திரி (நாக மலை) சிவன், என்னும் - என்னும் (பெயரை யுடைய), மா தவன் - பெருந் தவத்தினை யுடையவன், யாரும் - எல்லா அதிகாரிகளும், தெளிவு - ஞானத்தினை, உற - அடையும் பொருட்டு, இப்பியின் இடை - (வியாவகாரிக) கிளிஞ்சிலின் இடத்து, எழும் - (அநிர்வசநீய மாகத் தூல அவித்தையின் காரிய மாகப் பிராதி பாஸிக மாக) உண்டாகாநின்ற, இரசதம் - வெள்ளியை, போல் - போல, என்றும் ஆய் - சத் தாய், இலகி - சித் தாய், இன்பு ஆகி - ஆநந்தம் ஆகி (விளங்கும்), ஒப்பிட - உவமை கூறுவதற்கு, ஏதும் - ஒன்றும், இன்றிய - இல்லாத, பிரமத்து - பிரமத்தி னிடத்து, உற்றிடும் - (அத்தியாச மாகப்) பொருந்தி யிருக்கின்ற, பகுதி - (மூலப்) பிரகிருதி, முன் ஆய - முதலியன வாகப் பொருந்திய, அ - அந்த, பிரபஞ்ச - பிரபஞ்சத்தினது, முறைமையை - கிரமத்தினை, தூல - தூல மான (வசிட்ட நக்ஷத்திரத்தினை அறிவித்து), அருந்ததி - (சூக்ஷ்ம மான) அருந்ததி (நக்ஷத்திரத்தினை அறிவிக்கும்), நியாயம் - திருஷ்டாந்தம், என்ன - போல, செப்பினன் - கூறினன், (எ-று).

ஏ - ஏ - ஏ - அசை.



தூல மான பிரபஞ்சத்தைக் காட்டிச் சூக்ஷ்ம மான பிரஹ்மத்தை அறிவித்த தாம்.

[தான் எடுத்துக் கொண்ட கிரந்தம் நிர்விக்கின மாக நிறைவேறும் பொருட்டுச் சகுண ரூப ஷட் வித தெய்வ வணக்கம் கூறப்படுகின்றது.]

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொ னம்பலவன்,
ஞானகுரு வாணியையுண் ணாடு.

(இ—ள்.) ஆனை முகன் - கஜ முகக் கடவுளையும், ஆறு முகன் - ஷண் முகக் கடவுளையும், அம்பிகை - சிவ காம சௌந்தரி யையும், பொன் அம்பலவன் - கநக சபைக் கடவுளையும், ஞாந - ஞாந, குரு - ஆசாரியரையும், வாணியை - சரஸ்வதி தேவியையும், உள் - மநத்தின்கண், நாடு - (நீ) தியாநிப்பாயாக, (எ-று).

[பஞ்ச சக்தியோடு கூடிய அபிந்நா சக்தி விசிட்டப் பிரஹ்மத்தை அறிவிக்கும் வாயி லாகச் சுத்தப் பிரஹ்மத்தினை அறிவித்தல் கூறப்படுகின்றது.]

(மூலம்)

சுத்தப் பிரமமா யிருக்கின்ற சர்வ சாக்ஷியி னிடத்திலே அக்கினியிற் சூடு போல, அபிந்ந மாக ஒரு சத்தி உண்டு. அந்தச் சத்தி அவ் வதீதப் பிரஹ்மத்தில் அடங்கி யிருக்கும் போது அதற்குச் சுத்தப் பிரமம் என்று பெயர். இந்தச் சத்தி விசிரிம்பித்துச் சுத்தப் பிரஹ்மத்தை வியாபிக்கும் போது, அப் பிரஹ்மம் பரை வியாபகத்துக்குள் இருந்த படியினலே, அதற்குப் பரைப் பிரமம் என்று பெய ராம். இலக்ஷண சூந்யமா யிருக்கின்ற இந்தச் சத்திக்குப்

பிரமத்தி னுடைய சந்நிதானத்தில், புருட சமூகத்திலே ஸ்திரீக்கு இன்பஞ் சநித்தாற் போல, அவிகிர்த சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் உண்டாயின. இவற்றில், சுத்த சத்துவத்திற்கு ஆநந்த ரூப சத்தி யென்று பெயர். சுத்த ரஜஸிற்குச் சித் ரூப சத்தி யென்று பெயர். சுத்த தமசிற்குச் சத் ரூப சத்தி யென்று பெயர். இவற்றில், காரண மான ஆநந்த ரூப சத்தியுடனே பரை பிரஹ்மங் கூடிச் சர்வாநந்தம் என்னுஞ் சுழுத்தி யவஸ்தையை யடைகின்ற போது, பரைப் பிரஹ்மம் என்கின்ற பெயர் போய்ப், பரமாநந்தர் என்கிற பெயர் வந்தது. இந்தப் பரமாநந்தர் சித் ரூப சத்தியுடனே கூடிச் சர்வப் பிரகாசம் என்னுஞ் சொப்பநாவஸ்தையை யடைகின்ற போது, பரமாநந்தர் என்னும் பெயர் போய்த் தேஜோமயர் என்னும் பெயர் வந்தது. இந்தத் தேஜோமயர் சத் ரூப சத்தியுடனே கூடிச் சர்வ வியாபகம் என்னுஞ் சாக்கிரா வஸ்தையை யடைகின்ற போது, தேஜோமயர் என்னும் பெயர் போய்ப் பரிபூரணர் என்னும் பெயர் வந்தது.

(இ—ள்.) சுத்தம் - அசுத்தம், மலம், மலிநம், கலங்கல், அற்றது.

தத்துவம் - சுத்தம் - அசுத்தம் என இரு வகைப்படும். அசுத்தம் 35 தத்துவங்களும் ஆம். அவற்றுள்ளும், 35 தத்துவங் களுக்கு உள்ள அசுத்தம் அற்றது என்ப தாம்.

ஈசன், மாயை, ஜீவன், அவித்தை, ஆகாயம், வாயு, அக்கிநி, அப்பு, பிருதிவி, உள்ளம், மநம், புத்தி, சித்தம், அகங்காரம், சுரோத்திரம், த்வக், சக்ஷு, சிங்ஙுவை, கிராணம், வியாநன், பிராணன்,



அபாநன், சமாநன், உதாநன், வாக், பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம், சர்மம், உதிரம், மாம்சம், சநாயு, அஸ்தி, மஜ்ஜை என்பன 35 தத்துவங்க ளாம்.

1. அவற்றுள், ஈசனுக்கு அசுத்தம், சிருஷ்டி - திதி - சம்மாரம் - திரோபவம் - அநுக்கிரகம் - என்னும் பஞ்ச கிருத்தியம். கிருபை - அவதாரம் - மாற்சரியம் ஆம்.

2. மாயைக்கு அசுத்தம், அநிர்வாச்சியம் - அகடித கடநம் - நாம ரூப பரிணமம் - ஞாந நிவிர்த்தியம் - சங்கோச விகாச தருமம் - காரணம் இன்றியது ஆம்.

3. ஜீவனுக்கு அசுத்தம், ஞாந அஞ்ஞாநம் - கருத்திருத்வம் - போக்திருத்வம் - ஞாதிருத்வம் - ஜாதி - வர்ணம் - ஆசிரமம் - விகித நிஷித்த கருமப் பிரவிருத்தி - தர்மம் - அதர்மம் - அதன் பல மான சுவர்க்கம் நரகம் அதன் சேஷ மான அநந்தங் கோடி ஜநந மரணம் ஆம்.

4. அவித்தைக்கு அசுத்தம், அதிஷ்டாநத்தை மறைப்பது - தத்வ ஞாநத்தினல் நாசம் அடைவது ஆம்.

5. ஆகாயத்துக்கு அசுத்தம், இடி - காற்று - வெய்யில் - மேக படலம் - குமுறல் - மின்னல் - விக்ஷேப சத்தியில் தோன்றுதல் - சத்த குணத்தோடு கூடியிருத்தல் ஆம்.

6. வாயுவுக்கு அசுத்தம், புளுதி - துர்க் கந்தம் - மிசிர கந்தம் முதலியவற்றை இழுத்தல் - சலித்தல் - ஆகாயத்திற் றோன்றிக் கெடுதல் - பரிச குணத்தோடு கூடியிருத்தல் ஆம்.

7. அக்கிநிக்கு அசுத்தம், புகை - பொறி - வெப்பம் - வாயுவிற் றோன்றிக் கெடுதல் - ரூப குணத்தோடு கூடியிருத்தல் ஆம்.

8. அப்புவுக்கு அசுத்தம், கலங்கல் - அலை - திவலை - நுரை - சேறு - பாசி - குமிழி - அக்கியிற் ரூேன்றிக் கெடுதல் - ரஜ குணத்தோடு கூடியிருத்தல் ஆம்.

9. பிருதிவிக்கு அசுத்தம், மலம் - மூத்திரம் - குப்பை - (சேறு) சுடலை - சேரி - அப்புவிற் ரூேன்றிக் கெடுதல் - கந்த குணத்தோடு கூடியிருத்தல் ஆம்.

10. உள்ளத்துக்கு அசுத்தம், பொருளைக் கவராமை ஆம்.

11. மநத்துக்கு அசுத்தம், இச்சை ஆம்.

12. புத்திக்கு அசுத்தம், மந்தத் தன்மை ஆம்.

13. சித்தத்திற்கு அசுத்தம், சிந்தித்தல் இன்மை ஆம்.

14. அஹங்காரத்திற்கு அசுத்தம், தன்னை யறிதல் இன்மை ஆம்.

15. சுரோத்திரத்திற்கு அசுத்தம், மந்தத் தன்மை (செவிட்டுத் தன்மை) ஆம்.

16. த்வக்கிற்கு அசுத்தம், நரை - திரை ஆம்.

17. சக்ஷுவுக்கு அசுத்தம், பீழை - அந்தத் தன்மை - (குருட்டுத் தன்மை) ஆம்.

18. சிங்ஙுவைக்கு அசுத்தம், அருசிப்படுதல் ஆம்.

19. கிராணத்துக்கு அசுத்தம், சழி ஆம்.

20. வியாந வாயுவுக்கு அசுத்தம், பலம் இன்மை - நேரே நிற்கச் செய்யாமை ஆம்.

21. பிராண வாயுவுக்கு அசுத்தம், உசுவாச நிசுவாசம் இன்மை ஆம்.

22. அபாந வாயுவுக்கு அசுத்தம், தீ நாற்றம் - மல சலங்களைத் தள்ளாமை ஆம்.



23. சமாந வாயுவுக்கு அசுத்தம், ரசத்தை நாடி நரம்புகளில் சேர்க்காமை ஆம்.

24. உதாந வாயுவுக்கு அசுத்தம், உண்ட அந்நத்தைக் கடைத லின்மை ஆம்.

25. வாக்குக்கு அசுத்தம், பொய் சொல்லல், பிறர் நிந்தை - கடுஞ் சொல் - வீண் பேச்சு - ஊழல் நாற்றம் ஆம்.

26. பாணிக்கு அசுத்தம், கொடாமை - வாங்காமை ஆம்.

27. பாதத்துக்கு அசுத்தம், நடவாமை ஆம்.

28. பாயுவுக்கு அசுத்தம், சீ - நாற்றம் ஆம்.

29. உபஸ்தத்துக்கு அசுத்தம், அழல் நாற்றம் ஆம்.

30. சர்மத்துக்கு அசுத்தம், திரை ஆம்.

31. உதிரத்துக்கு அசுத்தம், கரு நிறம் ஆம்.

32. மாம்சத்துக்கு அசுத்தம், தீ நாற்றம் - முடை நாற்றம் ஆம்.

33. சநாயுவுக்கு அசுத்தம், சிலந்தி ஆம்.

34. அஸ்திக்கு அசுத்தம், முறிதல் ஆம்.

35. மஜ்ஜைக்கு அசுத்தம், உளறல் - அதிக வார்த்தை பேசுதல் ஆம்.

வேறு வகைத் தாக அசுத்தத்தைப் பிரித்துக் கூறுதல்.

1. காரண சரீரத்துக்கு அசுத்தம், ஞாந அஞ்ஞாந மாம்.

2. சூக்ஷ்ம சரீரத்துக்கு அசுத்தம், காசம் - படலம் - குரோதம் - காமம் - லோபம் - மோஹம் - மதம் - மாத்சரியம் - இராகம் -

துவேஷம் - டம்பம் - தர்ப்பம் - அஹங்காரம் - ஈரிஷை - அசூயை என்னும் 13 குணங்கள், தாங்கல் - சலித்தல் - காண்டல் - கேட்டல் - வசநித்தல் - பரிசித்தல் - உசுவாச நிசுவாச மாம்.

3. தூல சரீரத்துக்கு அசுத்தம், கோழை - சளி - பித்தம் - மலம் - மூத்திரம் - திருட்டு - வியபிசாரம் - ஜீவ ஹிம்சை - மூன்றரைக் கோடி ரோமத் துவாரங்களினூலும், நவத் துவாரங்களினூலும், மலம் ஒழுகிக் கொண்டிருப்பது - பிண வெடி ஆம்.

4. ஜீவனுக்கு அசுத்தம், ஜாதி - வர்ணம் - ஆச்சிரமம் - தர்மம் - அதர்மம் - ஸ்வர்க்கம் - நரகம் - ஜநநம் - மரண மாம்.

5. ஈசுவரனுக்கு அசுத்தம், கிருபை - அவதாரம் - மாற்சரியம் - சிருஷ்டி - திதி - சம்ஹாரம் - திரோபவம் - அநுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்திய மாம்.

6. மாயைக்கு அசுத்தம், அநிர்வாச்சியம் முதலியன ஆம்.

7. பஞ்ச பூதங்கட்கு அசுத்தம், இடி - புளுதி - புகை - கலங்கல் - மலம் முதலியன. இவைக ளாம்.

பிரஹ்மம் - பேரிது, விபு, மகத் என்பன ஒரு பொருளன.

1. ஜீவன் பெரிது. 2. சூக்ஷ்ம சரீரம் பெரிது. 3. தூல சரீரம் பெரிது. 4. பூமி பெரிது. 5. ஜல பூதம் பெரிது. 6. அக்நி பூதம் பெரிது. 7. வாயு பூதம் பெரிது. 8. ஆகாய பூதம் பெரிது. 9. ஹிரண்ய கர்ப்பன் பெரிது. 10. அவ்வியாகிருதம் பெரிது. 11. அவ்வியக்தம் பெரிது. 12. மாயை பெரிது. 13. மாயா விசிட்ட ஈசுவரன் பெரிது. 14. (அதனினும்) பிரஹ்மம் பெரிது.



### இலக்ஷணவிருத்தி கவி 79.

இதமறுவி சிட்டனினும் விபுசூக்க வுடலிதனி னிழிதூல வுடலம்விபுவா - மிதுதனினும் விரிவுபா ரிதனினும் விரிவுநீரிதுதனினும் விரிவுகனலா, மிதனினுங் காற்றுவிரி விதனினுங் ககநம்விரி விதுதனி னிரணியகருப்ப - மெய்தும்விரி விதனினவ் வியாகிருதம் விரிவாகு மிதனினவ் வியத்தம்விபுவா, மிதனினுஞ் சுத்தம்விரி விவைகடம் மாலுமட் டிடவொணு தேவிரிந்த - வெழின்மாயை யுறுவீச ரவாலு மட்டிடவு மியலாத நந்தவிரிவா, யிதமதுறு மத்திபா திப்பிரிய மாநமிலு மெய்தமற் றென்று பெரிதா - யெம்மைமட் டுக்கட்ட வொன்றுமில் லாததா லென்று நாம் விபுவதாமே.

1. தாவரத்தைப் பார்க்கிலும் அறிவால், மிருகாதி பெரிது. 2. அதினும், நீசர் ஆதியோர் பெரியவர். 3. அவர்களினும், பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வர்ணத்தவர் பெரியவர். 4. அவர்களினும், கன்மி பெரியவர். 5. அவர்களினும், தீக்ஷிதர் பெரியவர். 6. அவர்களினும், உபாசகர் பெரியவர். 7. அவர்களினும், ரிஷிகள் பெரியவர். 8. அவர்களினும், பிதிர் தேவர் பெரியவர். 9. அவர்களினும், உலக பாலர் பெரியவர். 10. அவர்களினும், பூத பதி பெரியவர். 11. அவர்களினும், வைசுவாநரன் ஆதியர் பெரியவர். 12. அவர்களினும், புருஷர் பெரியவர். 13. அவர்களினும், குமார் பெரியவர். 14. அவர்களினும், அம்பிகையும், தேவனும், பெரியவர். 15. அவர்களினும், பிரஹ்மம் பெரிது.

### இலக்ஷணவிருத்தி கவி 80.

அவதாவ ரத்தினறி வான்மகத் தானமிரு காதியதி னீசாதி - யவர்களினு நான்குவன் னத்தாவ ரிற்கன்மி யவரினிற் றீக்ஷிதர்

களா, மவரினிலு பாசகர்க ளவரில்ரிஷி யவரில்பிதி ரவர்தமிலு முலகபால - ரவரினிற் பூதபதி யவரின்வை சுவாநா னுதியவ ரிற்புருஷரா, மவரினிற் குமாரவ ரியாவரின் மேமகத் தாகுநற் றேவிதேவ - னவர்களிரு வர்க்கும்பி ராணபூ தமதாகி யவர்களாற் பத்திபண்ண, வவமறும கத்துவம துறுமெமக் கதிகசம னும்வஸ்தி லாமனுமே - யமர்கின்ற யாவையினு மதிசயித் தவனுத லான்மகத் தாகுநாமே.

1. இந்திரியம். 2. அதினும், தேகம் பெரிது. 3. அதினும், கிரகம் பெரிது. 4. அதினும், ஊர்கள் பெரிது. 5. அதினும், தேசங்கள் பெரிது. 6. அதினும், உலகங்கள் பெரிது. 7. அதினும், பிருதிவி பெரிது. 8. அதினும், அப்பு பெரிது. 9. அதினும், அக்நி பெரிது. 10. அதினும், வாயு பெரிது. 11. அதினும், ஆகாயம் பெரிது. 12. அதினும், விராட (ஜாக்ரம்) பெரிது. 13. அதினும், ஹிரண்ய கர்ப்பன் (ஸ்வப்நம்) பெரிது. 14. அதினும், அந்தர்யாமி (சுழுத்தி) பெரிது. 15. அதினும், மகாதேவன் (துரியம்) பெரிது. 16. அதினும், சதாசிவன் (துரியாதீதம்) பெரிது. 17. அதினும், மாயை பெரிது. 18. அதினும், மாயாப் பிரதிபிம்ப ஈசுவரன் பெரிது. 19. அதனினும், பிரஹ்மம் பெரிது.

இலக்ஷணவிருத்தி கவி 74.

திதசாக்ஷி தனிலேக தேசகற் பிதமதாய்ச் செறிமாயை யீசரிவரிற் - றிகழேக தேசகற் பிதமாம்வி ராட்டாதி சேர்கின்ற வைந்தவத்தை, யிதிலேக தேசகற் பிதமைந்து பூதங்க ளிதிலேக தேசமுலக - மிதிலேக தேசகற் பிதமதாந் தேசங்க ளிதிலேக தேசமூர்க, ளிதிலேக தேசமாங் கிரகங்க ளிக்கிரக மிதிலேக தேசமுடல்க - ளிதிலேக தேசமா மிந்திரிய மிவிதமா யெணு



மொன்றொ டொன்றுகூடாச், சுதவுலக முழுதினையு மறிகின்ற வறிவதே சொருபமா யெங்குநிறைவாய்ச் - சூழ்ந்துஎறத லாவி யாஞ் சர்வகத னுமெனத் துணிவாக வெண்ணுவாயே.

1. வேதம். 2. பிராஹ்மணன். 3. அரசு. 4. பசு. 5. பிரஹ்மா. 6. விஷ்ணு. 7. ருத்ரன் என்னும் சப்தப் (எழு) பிரஹ்மங்களிலும், பெரி தாக இருப்பதால், பிரஹ்மம் என்று பெயர் வைக்கப்பட்டது.

அக்நியில் - நெருப்பி னிடத்தில், சூடு - உஷ்ணம், போல் - (அபிந்ந மாக இருப்பது) போல, அபிந்நம் ஆக - (அநிர்வசநீய) அபேத மாக, ஒரு சத்தி உண்டு - ஒரு சக்தி இருக்கின்றது.

அதீதப் பிரஹ்மத்தில் - அதி இதம் - அதீதம், இதம் - இது (என்று வாக்கால் மநத்தால் கூறவும் நினைக்கவும் கூடியது), அங்ஙனம் வாக்காலும், மநத்தாலும், கூறவும், நினைக்கவும், முடியாதது அதீத மாம். (அதீத:- அதி - இத:- கடந்தது என்பது பொரு ளாம்.)

விசிரிம்பித்து - வெளிப்பட்டு, பரப் பிரஹ்மம் என்று - பரைப் பிரஹ்மம் என்று, லக்ஷண சூந்ய மாய் இருக்கின்ற இந்தச் சத்திக்கு - லக்ஷணம் - சத் - அசத் - சதசத், சாவயவம் - நிரவயவம் - சாவயவ நிரவயவம், பிந்நம் - அபிந்நம் - பிந்நாபிந்நம், என்று ஒன்பது விதத்தும் நிர்ணயிக்கக் கூடியது, அங்ஙனம் இன்மையது லக்ஷண சூந்ய மாம்.

அவிகிர்த - (விகிர்தம் - வெளிப்படல்) வெளிப்படாத.

சுத்தப் பிரஹ்மம், (1) அபிந்நா சக்தி விசிஷ்டப் பிராஹ்ம மாகிய பரைப் பிரஹ்மம், (2) பரமாநந்தர், (3) தேஜோமயர்,

(4) பரிபூரணர், (5) (பிந்நா சத்தி யாகிய) மூலப் பிரகிருதி விசிஷ்டப் பிரஹ்மம் என, அபிந்நா சத்தி என்னும் பரையாலும், பிந்நா சத்தி என்னும் அபரை யாகிய மாயையாலும், ஐ வகைப் பெயர்களை யடைகின்றது.

பரா என்னும் அபிந்நா சத்தி - சத் தாயின், ரஜ்ஜுவைப் போலக் காலத் திரயத்திலும் கெடாம லிருக்க வேண்டும். ஆத்ம தத்வ ஞானத்தினால், நாசம் ஆகிறபடியால், சத்தும் அன்று. அசத் தாயின், மலடி மகன் - முயற் கொம்பு போலக் காலத் திரயத்திலும் இல்லாமற் போக வேண்டும். நான் அஞ்ஞானி என்று, இருப்ப தாக அநுபவம் இருப்பதால், அசத்தும் அன்று. சதசத் தாயின், ஆதித்தனும், அந்தகாரமும், ஒன்றாக ஓரிடத் திருப்பது என்பது போல, பரஸ்பரம் விரோதம் ஆவதால், சதசத்தும் அன்று. சாவயவம் ஆயின், அவயவம் உடைய தாக இருக்க வேண்டும். அவயவம் உடைய தாயின், ஆதி யாகும். ஆதி யாயின், மாயை அநாதி என்பதற்கு விரோத மாம். அன்றியும், அதில், பிரதி பிம்பித்த சைதந்யமும் ஆதி யாகும். அநாதி என்னும் பெயர் சைதந்யத்துக்கு நீங்கும். ஆதலால், சாவயவமும் அன்று. நிரவயவம் ஆயின், ககந அரவிந்தம் போல, ஜகத் காரண மாதல் பொருந் தாது. நிரவயவம் ஒரு காரியத்திற்கும் காரணம் ஆவ தில்லை. ஜகத் தாகிய காரியத்திற்குக் காரணமா யிருப்பதால், நிரவயவமும் அன்று. சாவயவ நிரவயவம் ஆயின், ஸ்திரீ புருஷர் போல, பரஸ்பர விரோத முடைமையின், ஓரிடத் திருத்தல் பொருந் தாமையின், சாவயவ நிரவயவமும் அன்று. பிந்நம் ஆயின், பிதா புத்திரன் போல வேறா யிருக்க வேண்டும். பிரஹ்மத்துக்குப் பிந்நம் ஆன பிரபஞ்சம் முழுமையும் மித்தை யாக இருப்பதாலும், சத்திக்கு ஸ்வதந்தர மாக விருக்குந் தன்மை யின்மையினாலும் பிந்நம் அன்று. அபிந்நம் ஆயின், வேப் பிலையும் கசப்பும் போல, சைதந்யமும், ஜடமும், ஒன்றா யிருக்க வேண்டும். அங்ஙனம் இன்மையின், அபிந்ந



மும் அன்று. பிந்ந அபிந்நம் ஆயின், விரோத தர்மம் உடைய இரண்டு தர்மங்கள் ஓரிடத் திராமையின், பிந்ந அபிந்நமும் அன்று. இவ் வாறு ஒன்பது விதத்தும் நிர்ணயம் செய்ய முடியாதது அநிர் வசநீய மாம்.

### வைராக்ய தீபம் கவி 2.

“ துன்னியா ணவப்பாம் பெமதறி வெனுமோர் சுடர்கெழு பூரண மதியை, முன்னமே தீண்டிற் றொளிவெளிப் படலான் மோசக காலமெய் தியதால், தன்னிடத் தீசன் முதற்புவி முடி வெண் டருநரை யாதிவந் தொடுங்கப், பின்னைய பிணையாந் திரைகள்வீ சிடுமோர் பிரமவே லையிலினிப் படிவாம்.”

என்னும் செய்யுளில், அபிந்நா சத்தி, பிந்நா சத்திகளைக் கூறியிருப்பது உணரற் பாற்று.

“ திருவளர் கமலத்து ” என்னும் வைராக்ய தீப முதற் செய் யுளின் பொழிப் புரையில், திருப் போரூர் சிதம்பர சுவாமிகள், “ஜீவ னும், ஈசுவரனும், பிந்நா சத்தியில் இருத்தலினாலும், அப் பிந்நா சத்தி பொய் யாய்த் தோன்றுதலினாலும், அபிந்நா சத்தி சிவனது பிரகாசம் ஆதலினாலும், இச் சிவ னாகிய சத்திமானை விட. அச் சத்திகள் வே றல்லாமையாலும், பொருள் ஒன்று என்பதும் கண்டு கொள்க” என்று கூறியிருத்தல் கொண்டு, சத்திகள் நித்தியம் இல்லை என்று உணர்க. மற்றும், மேற் காட்டிய “ துன்னியாணவப் பாம்பு ” என்னும் செய்யுளின் கருத் துரையில், “ பிந்நா சத்தியால், அநேக மாகக் காண்குதல், அபிந்நா சத்தியால் ஏக மாகக் காண் குதல், இங்ஙனம் ஏக மாகக் காண்குதலும் ஓ ரசை வாகலின், இச் சத்தியையும் அலை யாகக் கூறினர் என்க” என்று கூறியிருத்தல் கொண்டும் உணர்க. சத்திமான் நித்தியம் ஆயின், சத்திகள் நித்தியம் என்பது நியமம் இல்லை. சத்திகளுக்கு, மணி மந்தர

ஔஷதாதிகளினல், காரியம் செய்யாதிருத்தல் காணப்படலின், லய ரூப நிவிர்த்தியோ, அத்தியந்த நிவிர்த்தியோ அங்கீகரிக்க வேண்டும். சக்தி வாதம் முதலிய நூல்களில் சக்திகளின், நித்திய அநித்திய விசாரம், ஏகத் தன்மை, அநேகத் தன்மைகள் முதலியன விரி வாக இருத்தலின் ஆண்டுக் காண்க. அபிந்நம் என்பது ஒன்று பட்டு இருத்தற்குப் பொரு ளாம். அநாதி என்ற மாத்திரையால், ஆதி யற்றது என்பது பொரு ளாவ தன்றி, நித்தியம் என்பது கொள்ள இடம் இல்லாது போல, அபிந்நம் என்ற மாத்திரையால் பிந்நம் இல்லாதது என்பது பொரு ளாவ தன்றி, நித்தியம் எனக் கொள்ளல் பொரு ளன்று. அக்கியில் சூடு நித்தியம் என்பது பொரு ளன்று. அநாதி சாந்தம் (உத்பத்தி யின்றி அழிவுபா டுடையது) எனப் பிராகபாவத்துக்கு லக்ஷணம் தார்க்கிகர் கூறு கின்றமையின். அவ் வாறே, உத்பத்தி யுடைய தாய் நாசம் இன்றி யிருப்பது எனப் பிரத்தொம்ச அபாவத்துக்கு லக்ஷணம் கூறுகின்ற மையினுலும், அகண்ட பிரஹ்மாகார விருத்தி ஞாநம், உத்பத்தி யுடைய தாய் நாசம் இன்றியிருக்கின்றமையினுலும் என்க. ஆதி எல்லாம் அநித்தியம் என்பதும் நியமம் இல்லை. அநாதியிலும், நித்திய அநித்தியம் என இரு விதம் உண்டு. ஆதியிலும், நித்தியம் அநித்தியம் என இரு வகை உண்டு. பிரஹ்மம் அநாதியும், நித்திய மும் ஆம். ஜீவ ஈசுவர செகத்து (பரா அபரா என்னும் மாயா சக்தி) அநாதி யாயினும், அநித்திய மாம். அக்கியில் சூடு தாக சக்தியே யன்றி சொரூப சக்தி யன்று. இக் கருத்துக்கொண்டே "அக்கியில் சூடு போல" என்று ஏழாம் வேற்றுமை கொடுத்து, ஆதார ஆதேய பாவம் கூறினர்.

### பக்தி (வைராக்ய) சதகம் கவி 25.

"புகல ரும்பரப் பிரமமாங் கடறனிற் புணர்பரைத் திரை யீசன், சகமொ டாருயி ரெனுநுரை யாதிக டந்துமாற் றிடு மென்றே, பகரு நான்மறை யெனினதி லெதையெதைப் பற்று வாம் விடுகிற்பாம், சுகசொ ரூபமே யனைத்துமென் றகற்றுதி துவிதபா வனைநெஞ்சே." என்ற கவியிலும், பரை திரை எனவும், ஈசன் செகம் உயிர் நுரை ஆதிகள் எனவும், தந்து மாற்றிடும் என வும், அதாவது, உத்பத்தி நாசம் உடையன எனவும், கூறிச் சத்தி அநித்திய மென்றே கூறுகின்றனர்.



### சிவ ஞாந வள்ளலார் - சிவ ஞாநப் பிரகாச வெண்பா.

"பாலொடு சேர்ந்தநீர் பாலாகு மாங்கதுபோல்,
வாலறிவ னைச்சேர்ந்த மன்னுயிர்கள் - வாலறிவன்,
ருனுகி நிற்பதல்லாற் றண்டாத வைம்பாச,
வூனுகி நில்லாரு வந்து."

"ஆயிழையைக் காமுற்றே யாலிங்க நஞ்செய்தே,
ஞயிழையே தானுன வாதரம்போன் - மாயையைவிட்,
டையனொடு சேர்ந்தபினு மாங்கிரண்டுண் டேயென்ரு,
லுய்யுநெறி யில்லையு வந்து."

"பாவனா தீதப்ப தியேறிப் பின்னுநாஞ்,
சீவனென்றுஞ் சிந்திப்பா ருண்டோசொல் - சீவ,
மகன்றபுழுப் பின்புழுநா னென்றறைத லுண்டோ,
சுகமறிந்த துண்டோசு கம்."

என்ப வாதிச் செய்யுட்களில், சீவன் - ஈசன் - சிவன் - ஒன்று என்றும், சக்தி - மாயை - பஞ்ச பாசம் - அத்தியந்தம் நாச மாம் என்றும், கூறி யிருப்பதனை உய்த் துணர்க.

பிந்நா சத்தி, அபிந்நா சத்தி, யிரண்டினையும், திரை என்றும், ஈசன் - சீவன் - செகத்துக்களை நுரை ஆதி என்றும் கூறுகின்றபடி யால், பிந்நா சத்தி போல், அபிந்நா சத்தியும் நாசம் உடையதே ஆம்.

"பிரஹ்மம் பரமார்த்தம் ஈசன் புவி முடிவு வியாவகாரிகம். பிந்நா சத்தியும், அபிந்நா சத்தியும் வியாவகாரிகம், "யத் சத்வே யத் சத்வம்", "யதபாவே யதபாவ:" என்னும் வாக்கியத்துக்குப் பொருள், இஃ தாம்:- யத் சத்வே - ஈசுவரன் இருக்கில், யத் சத்வம் - ஜகத்தின் இருப் பாம். யத் அபாவே - ஈசுவரன் இல்லா விடில், யத் அபாவ: - ஜகத்தின் அபாவ மாம், என்னும் அந்வய வியதிரேக யுக்தியினல், மாயா உபகித ஈசுவரனுகிய வியாவகாரிகம் அழியவே, அவனை நிமித்த மாகக் கொண்டதும், அபிந்நா சக்தி பிந்நா சக்தி நிமித்த மாகக் கொண்ட வியாவகாரிகப் பிரபஞ்சமும், அபிந்நா சக்தி, பிந்நா சக்திகளும் அந்தியந்தாபாவம் உடையனவே யாம் என உணர்க." என்று, இவ் வாறு நைஷ்க்கர்ம்ய சித்தி நான் காவது அத்தியாயம் 32-வது சுலோகப் பொருள் கூறி யிருப் பதனையும் கூர்ந்து நோக்குக.

பிந்நா சக்தியில் ஜீவேசுவர ஜெகத் துண்டாவன போல, அபிந்நா சக்தியிலும், சத் ரூப சக்தி - சித் ரூப சக்தி - ஆநந்த ரூப சக்திகளும், பரமாநந்தர் - தேஜோமயர் - பரிபூர்ணர் என்னும் சைதந்யங்களும், ஜாக்ர - ஸ்வப்ந - சுழுத்தி யவஸ்தைகளும், "அந்தச் சத்தி அவ் வதிதப் பிரஹ்மத்தில் அடங்கி யிருக்கும் போது" என்றும், "இந்தச் சத்தி விசிரிம்பித்துச் சுத்தப் பிரஹ்மத்தை வியாபிக்கும் போது" என்றும் கூறி, லய ரூப நிவிர்த்தியும், ஆவிர்ப்பாவ ரூப உத்பத்தியும், சேஷாத்திரி சிவனுர் வாக்கால், இதன்கண் இதே பாராவில், கூறுகின்றபடியாலும், "அந்தப் பிந்துவும் பாம் பென்கின்ற பெயர் போய்ப் பழுதையாய்க் கண்டாற் போலத் தனக்கு அதிஷ்டாந மான பிரஹ்ம சைதந்ய மாத்திர மாக ஒடுங்கும், இப்படிப் பொய் எல்லாம் மெய்ப் பொருள் ஒன்று ஆகக் கண்டு" என்று வே நிடத்து இதே நூலில் கூறுகிறபடி யாலும், சித் சக்தி - ஜட சக்தி - பஞ்ச பாசம் முதலியனவும், பிந்நா சக்தி, அபிந்நா சக்திகள் என்பனவும், அத்தியந்தாபாவம் உடை



யனவே யாம். விரிப்பில் பெருகு மெனுங் கருத்தால் உரைக்கிலம். விசார சாகரம் 6-வது தரங்கம் 411-வது, 413-வது பிரசங்கத்தில், நெருப்பில் தாக சக்தியே கூறி, சக்தி நித்தியத் தன்மையைக் கண்டித்திருக்கிறதை உணரற் பாற்று.

பஞ்ச தசியின் 13-வது அத்வைதாநந்தப் பிரகரணத்தில், 11-வது சுலோகம் முதல், 26-வது சுலோகம் வரை 16 சுலோகங் களால், அபிந்நா சக்தி, பிந்நா சக்திகளின் நித்தியத் தன்மையைக் கண்டித்து, வாசிட்டம் 3-வது உத்பத்திப் பிரகரணம் 7-வது பாலன் கதை திருஷ்டாந்த மாகக் கூறப்பட்டிருக்கிறது.

[அது வரு மாறு.]

### பஞ்ச தசி 13 அத்வைதாநந்தம்:-

"இவ்வமிச மிலததினு மியையுநப தலமலிந மிலகறனி ஞலதனி ஞல், செவ்வமிச மிலவிதினில் விவர்தசகங் கோடலாஞ் செறி மாயை கற்பிகையதாம், எவ்வணம தைந்த்ரஜா லிகவாற்ற லாகுமோ வெழிலாற்றல் சத்தனயலன், றவ்வணமொண் புல னுறலி னபேதமில தடைகாணு மாற்றலிலி னஃதெதற்கே." (5)

"சத்தி காரி யானு மேய மாத லால காரியந் தடைய தாகு மெரிய ழற்கண் டாக மற்ற காலேயின், மொத்த மந்தி ராதி யான பிரதி பந்த மாகுமான் - முனிவர் தங்கு ணங்க ளான்ம றைந்த தேவ வாரமாற், சத்தி யையு ணர்வ ரீதி னுச்ச சத்தி பல்விதந் - தக்க ஞாந கிரியை யிச்சை வடிவ தாகு மெனமறை, சத்த மாடு நித்த பூன்ற வத்வ யச்ச ரூவமா - சத்தி மாப ரப்பி ரம்மெ னவ சிட்டர் சாற்றினர்."

(6)

வாசிட்டம் 3-வது உத்பத்திப் பிரகரணம் 7-வது பாலன் கதை.

"முழுதுசத் தியுமாய்ப் பூரணமா யென்று முடிவறு பிரம்மா வாவதுதான், பழுதின்ஞா னிகடம் மநமலா தில்லைப் பரமமா மிதிலிலா தில்லை, யெழுதருஞ் சத்தி யாவுமா யிலங்கு மிவை களோர் காலமொன் றுளதாம், வழுவிலாப் பிரம முடையசிற் சத்தி மறிதரு முடற்களிற் றோன்றும்." (1)

"காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங் கனலிலே சூடும்வான் றனிலே, தோற்றலா மையுநன் னீரிலே நெகிழ்வுந் தொலைவுறு மாய்விலே மாய்வு, மூற்றமாம் விதையின் மரங்களும் போல வுள்ளுறை பிரமசத் திகடா, மாற்றல்சால் கால தேசசித் திரத்தா லவனியிற் சாலிபோற் றோன்றும்." (2)

"பரமமே யெங்கு மென்றுமுண் டாகும் பயின்மந னத்தினுன் மநமாங், தரமறு பந்த முத்திபே றுலகாஞ் சத்திக ளனைத்துமாய் நிற்குந், திரமறு தனையற் கன்னைசொற் கதைபோற் செப்பிய விவையெலாந் திரமாங், காமலர் முகிலே யென்றலு மந்தக் கதையினை யிராகவன் வினவ." (3)

"சித்தவஞ் சனையின் மூலமாங் கதையைச் செல்வனுக் கருந்தவ னுரைப்பான், மெய்த்தக விலாதோர் சிறுவனீ யன்னை விரும்பி யோர் கதைவிளம் பென்னச், சத்தியம் போல வெறும்பொய்யே யுரைப்பா டாணிபன் குமரரோர் மூவர், சுத்தவீ ரமுநற் குணங் களுஞ் சிறந்தோர் சூநிய நகரிலே யுறைவோர்." (4)

"மூவரி லிருவர் பிறந்தில ரொருவன் மூலமாங் கருவினு மில்லை, யாவதுங் கருதித் திரிபவர் விண்ணி லளவறு பழமரச் சோலை, மேவலு மதனிற் செழுங்கனி துய்த்து வெம்பசி தணித்து மேற் சென்றூர், காவரு காக மூன்றுநன் னதிகள் கரைபொரு திரையொடுங் கண்டார்." (5)



"ஓடுநன் னதியி லிரண்டுநீ ரில்லை யொன்றுவெண் மணலதா மிதனி, லாடிநீர் துளைந்து பருகினு ரந்தி யாகிமேல் வருநக ரடைந்தார், வீடுமூன் றெதிர்ந்தா ரதிலிரண் டில்லை மேன்மரஞ் சுவரிலா தொன்று, கூடிய வவற்றிற் சுவரிலா வீட்டிற் குடிபுகுந் திருந்தனர் குமரர்." (6)

"ஒருவருங் காணு நகரிலே வெளிவீட் டுறைபவர் கநகபாத் திரமூன், றருகுறக் கண்டா ரதிலிரண் டோடா மறவிலுந் தூளியா மொன்ற, சொருபமில் கடத்திற் றுரோணமூன் றதனிற் றுரோணமூன் றகன்றுமிக் கிருந்த, பருவரி சியைத்தாஞ் சமைத் துவா யில்லாப் பநவரெண் ணிலர்க்குமுன் படைத்தார்." (7)

"அவரெலா நிரம்ப வுண்டுபின் மிகுந்த தருந்தினர் வேட்டைக ளாடி, யிவர்கண்மூ வருமங் கிருந்தன ரென்ன விளமையா னம்பினன் சிறுவன், புவநமு மிவ்வா றறிவிலோர் காண்பர் புகன்மந விரிவுசங் கற்பம், விவரமா மிதனு லுலகமா மிதனை விடு நிரு விகற்பமா யிடுநீ." (8)

என்று கூறியிருக்கின்றதைக் கூர்ந்து நோக்குக.

"பிந்நம் இன்றிய அபிந்ந வஸ்துவில் தோற்றம் பேதமும், வெவ் வேறு யிருக்கும் பிந்ந வஸ்துவில் தோற்றம் அபேதமும், சந்திர னிடத்துத் தோற்றும் அநேகத் தன்மை போன்றும், தூரத் துள்ள மரங்களி னிடத்துத் தோற்றும் ஏகத் தன்மை போன்றும், பொய்யே யாம்" என்று ஸ்வாராஜ்ய சித்தி இரண்டாவது பிரகரணத் தின் நான்காவது சுலோகத்தில் கூறியிருக்கிறபடியால், தர்மங் களால் தர்மி வேறுபடாது. இரு சக்திகளும் ஒரு தன்மைத்தே யாகும்.

கைவல்ய நவநீதம், 1. தத்துவ விளக்கப் படலம் 83-வது கவி.

"அக்கினி கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட் டாது" என்றும்,

2-வது சந்தேகந் தெளிதற் படலம்.

"அருவ மாகுமா யாவிவித் தைகள்விளை யாடுமுன் தெரியாவே,
உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாகும்,
பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே;
பரவு பூதங்கள் கண்டறு மாநத்தாற் பலருக்கும் வெளியாமே." (96)

"காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்,
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்,
வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலப்,
பேரி யற்பிர மத்துக்கு முலகுக்கும் பிறிதுசத் திகளுண்டே." (97)

"சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி,
வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்போலப்,
புத்தி மைந்தனே சத்திமா னகிய பூரண வாந்மாவின், வத்தி
நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே."(98)

"இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்
கேட்கில், புல்லை யாதியா மசேதநப் பொருளெலாம் பூத்துக்காய்ப்
பனபாராய், நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்
கால், தொல்லை யாய்வருஞ் சாசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள்
வேறுமே." (99)

என்றும் கூறுவது கொண்டு, அபிந்நா சத்தி, பிந்நா சத்தி, காரண சத்தி, காரிய சக்தி, உத்பத்தி சக்தி, திதி சக்தி, சம்ஹார சக்தி, நியாமக சக்தி, திரோபவ சக்தி, அநுக்கிரக சக்தி, ஜட சக்தி, சித் சக்தி, சுக சக்தி, துக்க சக்தி எனப் பல பிரிவாகக்



கூறும் சக்திகள் யாவும் தோற்றம் ஒடுக்கம் உடையன என்றும், அவை சாபேக்ஷ நித்தியமே யன்றி, நிரபேக்ஷ நித்தியம் அல என்றும், உணரற்பாற்று.

யோக சூடாமணி உபநிஷத் 72.

"ओं नित्यं शुद्धं निर्विकल्पं निरञ्जनं निराख्यातमनादिनिध नमेकं तुरीयं यद्भूतं भवद्भविष्यत् परिवर्तमानं सर्वदाऽनवच्छिन्नं परं ब्रह्म तस्माज्जाता परा शक्तिः स्वयं ज्योतिरात्मिका ॥"

"ஓம், நித்யம், சுத்தம், நிர்விகற்பம், நிரஞ்சநம், நிராக்யாதம் (வரலாறு அற்றது), அநாதி நிதநம் (பிறப் பிறப் பற்றது), ஏகம், துரீயம், எது இறந்தது, நிகழ்வது, எதிர் காலத்தது, வர்த்தமாநம், எப்போதும் அநவச்சிந்நம், பரம் பிரஹ்மம், அதனிடத்து நின்றும் ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபி பரா சக்தி உண்டாயிற்று." என்று, பரா சக்தி பிரஹ்மத்தி னின்றும் உண்டாயிற்று என்று யோக சூடாமணி உபநிஷத் கூறுகிறது.

"அக்கியிற் சூடு போல" பரா சக்தியும், "கிளிஞ்சிலில் வெள்ளி போல" மூலப் பிரகிருதி என்ற அபரா சக்தியும் சொல்லப் படுகிறது. இன்னும், பரா சக்திக்கு, "புருட சமூகத்திலே ஸ்திரீக்கு இன்பஞ் செகித்தாற் போல" என்று சங்கோச விகாசம் சுக துக்கம் என்பன கூறப்படுகின்றன. பிரஹ்மம் ஏக சக்தி யுடையதா? அநேக சக்தியுடையதா? என்று வினு வந்துழி, ஏக சக்தி யாயின் ஜல அட்டை போன்று குவிதல் விரிதல் பொருந்தும். அநேக சக்திக ளாயின், ஒரு சக்தியே குவிந்து விரிந்து தொழில் செய்வதால், ஏனைச் சக்திகள் நிஷ்க்கிரிய மாகும். அநந்த சக்தி வாதத்தில் சக்திகள் நித்திய மாதல் பொருந்தாது. அபிந்நா சக்தி யாகிய பரை பிரஹ்மத்தோடு அபேத மாதல், முக்கிய சமாநாதி காரணத்தினுல்

இன்றிப், பாத சமாநாதிகரணத்தினலேயே ஆகும். கிளிஞ்சிலில் வெள்ளியின் அபேதமும், கட்டையில் கள்ளனது அபேதமும், கானலில் ஜலத்தின் அபேதமும், கயிற்றில் பாம்பின் அபேதமும், பிம்பத்தில் பிரதிபிம்பத்தின் அபேதமும் போல, பிரஹ்மத்தினிடத்தில் பரை அபரை யாகிய சத்திகள் காரியப் பிரபஞ்சம் யாவும் பாத சமாநாதிகரணத்தினலேயே அபேத மாகின்றது. இவ் வாறு அன்றாயின், பொய்யும், மெய்யும் கலந்து, சத்து சித்து ஆநந்தம் - நாமம் - ரூபம் என விளங்கும். விளங்கவே, பிரஹ்மமே சத்தியம் நாம ரூபப் பிரபஞ்சம் மித்தை என்னும் சுருதிக்கு விரோதம் வரும். பாத சமாநாதிகரணத்தினல் அன்றி வேறு வகை எனின், அது குடம் கிணற்றில் அத்தியாச ஐக்கியமா யிருப்பது போல, அத்தியாச ஐக்கிய மாம், அது உண்மை யாகாது. அத்தியாச ஐக்கியம் என்பதன் பொருள் பொய் யாக ஒன்றுபட்டதே அன்றி, உண்மை யாக ஒன்று பட வில்லைச் சில நாளில் பிரிந்து வேறு படும் என்பது பொரு ளாம். அது இந் நூற் கர்த்தா சேஷாத்திரி சிவனரின் கருத் தன்று என உணர்க.

[பிந்நா சக்தி கூறப்படுகின்றது.]

[மூலப் பிரகிருதியின் சத்துவ குண கற்பனை கூறப்படுகின்றது.]

(மூலம்)

இந்த அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்தப் பிரஹ்மத்தினிடத்திலே, சுத்தியில் ரஜதம் போல, மூலப் பிரகிருதி என்னும் ஒரு சத்தி உண்டு. அந்த மூலப் பிரகிருதியும், விகிர்த குண மாகிய முக் குணத்தோடு கூடி யிருக்கும். அந்தப் பிரகிருதியின் சத்துவ குணம் மாயை என்றும், சர்வஞ்ஞ வுபாதி என்றும், ஈசுர காரண சரீரம் என்றும்





சொல்லப்படும். இந்த மாயையி னிடத்திலே, நிர்மல சலப் பிரதிவிம்பம் போலப் பிரமம் சுலக்ஷண மாகப் பிரதி விம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதந்யம் சர்வஞ்ஞ ஞகிய ஈசுரன் என்று சொல்லப்படும். இந்தச் சத்துவ குண மாயையி னிடத்திலே, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸ், சத்துவத்தில் தமஸ் என மூன்று குணங்கள் உண்டு. இவைகளில், சத்துவத்தில் சத்துவம் பிரதாநம் ஆகும் போது, அதில் பிரதிபிம்பித்த ஈசுரன் சகத்தை இரக்ஷிக்கையினல், விஷ்ணு என்றும், சத்துவத்தில் ரஜஸ் பிரதாநம் ஆகும் போது, அதில் பிரதிபிம்பித்த ஈசுரன், சகத்தைச் சிருஷ்டிக்கையினல், பிரமா என்றும், சத்துவத்தில் தமஸ் பிரதாநம் ஆகும் போது, அதில் பிரதி பிம்பித்த ஈசுரன், சகத்தை உபசம்மாரம் பண்ணுகையினல், உருத்திரன் என்றும் சொல்லப்படுவன்.

இப்படி மூலப் பிரகிருதியின் சத்துவ குண கற்பனை சொல்லப் பட்டது.

(இ—ள்.) அகண்டம் - கண்டிக்கப் படாதது, பரிபூரணம் - பரிச்சிந்நம் அற்றது, அல்லது, நிறைப்பது, சத் - சித் - ஆநந்தம் - இருப்பு விளக்க இன்பம் ஆம்.

பிரஹ்மத்துக்கு, ஸ்வரூப லக்ஷணம் - தடஸ்த லக்ஷணம் என இரு வகை லக்ஷணங்கள் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. ஜகத் ஜந்மாதி காரணத்வம் தடஸ்த லக்ஷண மாம். தட - மத்தியில், ஸ்தம் - இருத்தல் என்பது பொரு ளாம். சொரூப லக்ஷணம் - சொரூபமே - லக்ஷணம் - ஸ்வரூப லக்ஷண மாம். ஈண்டு அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்தம் ஸ்வரூப லக்ஷண மாம். பரிபூர்ணம் -

சத் சித் ஆநந்தம் - விதி முகமும், அகண்டம் நிஷேத முகமும் உடைய லக்ஷண மாம்.

தேச கால வஸ்துக்களால் கண்டிக்கப்பட்டது, கண்டிதம் என்னும் கண்ட மாம்.

தேச கால வஸ்துக்களால் கண்டிக்கப் படாதது - அகண்டிதம் என்னும் அகண்ட மாம்.

1. உலகர் நிர்ணயம், 2. புத்த ஆகமத்தாலும், அது 3. தேவர் ஆகமத்தாலும், அது 4. பிரஹ்மா ஆகமத்தாலும், அது 5. ஹரி ஆகமத்தாலும், அது 6. ஈசுவர ஆகமத்தாலும், அது 7. புராணத்தாலும், அது 8. பாரதத்தாலும், அது 9. நீதி சாரத்தாலும், அது 10. கர்ம காண்டத்தாலும், அது 11. உபாசநா காண்டத்தாலும், அது 12. உபநிஷத்தாலும், கண்டிக்கப் படுதலால், இவை யாதி யான எவற்றாலும் கண்டிக்கப் படாததால் பிரஹ்மம் அகண்ட மாம்.

கண்டம் - பரிச்சிந்நம் என்பன ஒரு பொருட் சொற்கள்.

### இலக்ஷணாவிருத்தி கவி 90.

"நவைகால மாதியாற் கண்டிதமு ருதவறி வானநா மேய கண்ட - னவிலுமற் றொருயுத்தி யுலகர்நிர் ணயமருகர் நணுபுத்த ராகமத்து, மவைதேவ ராகமத் தவைபிரம னரியீச ராகமத் தவை புராணத் - தவைபார தத்தவையு நீதிசா ரத்தவையு மறைகின்ற கன்மகாண்டத், தவையுபா சநகாண்ட மவையாவு முபநிடத மவைகளாற் கண்டித்தலா - மவைநிர்ண யஞ்செயறி யெமை யொன்று கண்டிக்க வாகாத தாலுமாக, வெவமிலுப நிடதத்தி னதிதபிர மாணம்வே றில்லாத படியினாலு - மியாவுபிர மாணத்தி னுக்குமவை முடியாத லாலும்யா மேயகண்டன்."



பரிபூர்ணம் - நன்கு நிறைந்தது - பரிச்சிந்நம் அற்றது.

1. ஜலத்தினால் குடம் நிறைதல் போல, அந்ந மய கோசம்.
2. பிராண மய கோசத்தினால் பூரண மாம்.
3. பிராண மய கோசம், மந மய கோசத்தினால் பூரண மாம்.
4. மந மய கோசம், விஞ்ஞாந மய கோசத்தினால் பூரண மாம்.
5. விஞ்ஞாந மய கோசம், ஆநந்த மய கோசத்தினால் பூரண மாம்.
6. ஆநந்த மய கோசம், ஜீவனால் பூரண மாம்.
7. பஞ்ச கோசம், பஞ்ச பூதங்களால் பூரண மாம்.
8. பஞ்ச பூதங்கள், ஜகத்தால் பூரண மாம்.
9. ஜகத், மாயா விசிட்ட ஈசுரனால் பூரண மாம்.
10. மாயா விசிட்ட ஈசுரன், பிரஹ்மத்தினால் பூரண மாம்.

### இலக்ஷணாவிருத்தி கவி 86.

"அப்பினாற் கடமது பூரித்தல் போலவே யநமயம் பிராண னதனா - லதுமநோ கோசத்தி னாலதுவி ஞாநமய மாங்கோச மதனாலதுஞ், செப்புமா நந்தமய மதனினாற் பூரித்தல் சேர்ந்துநற் சீவனதனாற் - சேர்பூரி தம்பஞ்ச கோசங்க ளவையினாற் றிகழ்பஞ்ச பூதநிறைவாந், தப்பவில் லவையினாற் பூரித்த லுறுசகஞ் சகமதினு மெங்குநிறைவாய்ச் - சார்கின்ற மாயாவி சிட்டருந மான்மிகத் தாழ்வில்பூ ரித்தலுற்றுத், துப்புடைய நம்மினும் வேறுபரி பூரணந் தோன்றுதலி லாதவதனாற் - சொல்லுபரி பூரண நாமென்ன வேநிதஞ் சுகமுடன நிந்துகொள்ளே."

தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும், பரிச்சிந்நம் அற்றது பரிபூர்ண மாம்.

குடம், தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும், பரிச்சிந்ந மாம்.

பிரஹ்மம், தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவாலும், பரிச்சிந்நம் அற்ற பரிபூர்ண மாம்.

தேச கால வஸ்து பரிச்சேதங்கள் ஆவன.

அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகித் தன்மை தேச பரிச்சேதம் எனப்படும். அது கடத் தன்மை முதலிய தர்மங்கட்குப் பட முதலியவற்றில், அத்தியந்தாபாவம் உளது. அவ் வந்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகித் தன்மை, அக் கடத் தன்மை முதலிய தர்மங்களில் உளதாதல் போல ஆம். இதுவே, அக் கடத் தன்மை முதலிய தர்மங்களில் இருக்கும் தேச பரிச்சேதம் ஆம்.

பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்கட்குப் பிரதியோகித் தன்மை கால பரிச்சேதம் எனப்படும். அது கடம் தனது உத்பத்திக்குப் பூர்வம், தனது உபாதாந காரணம் ஆகிய கபாலங்களில் உள்ள, பிராகபாவத்தைப் போலவும், தனது நாசத்திற்குப் பிறகு, அக் கபாலங்களில் உள்ள பிரத்துவம்சாபாவத்தைப் போலவும் ஆம். பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்கட்குப் பிரதியோகித் தன்மை அக் கடத்தின்கண் இருக்கின்றது. இதுவே, அக் கடத்தில் உள்ள கால பரிச்சேதம் ஆம்.

அந்யோந்யாபாவத்திற்குப் பிரதியோகியா யிருக்குந் தன்மை வஸ்து பரிச்சேதம் எனப்படும். அது கடத்தின் பேதம் படத்திலும், படத்தின் பேதம், கடத்திலும் இருத்தல் போல ஆம். இதுவே அக் கட பட முதலியவற்றி லுள்ள வஸ்து பரிச்சேதம் ஆம்.



இவ் வாறு தேச கால வஸ்து பரிச்சேத இலக் கணங்கள் தத்துவாநுசந்தாநம் என்னும் நூலின், அத்வைத சிந்தா கௌஸ்துபம் என்னும் உரையில், மகா தேவாநந்த சரஸ்வதி ஸ்வாமிகளால் எழுதப்பட்டிருக்கின்றது.

ஆனதால், அநாத்ம பதார்த்தங்கள் யாவும் மூன்று பரிச்சேதங்கள் உடையன ஆம்.

பிரஹ்மம் விபு எனச் சுருதி கூறுவதால், விபு திரவியத்திற்கு அத்தியந்தாபாவம் உண்டாவ தில்லை. அதனுல் பிரஹ்மம் தேச பரிச்சேதம் அற்ற தாம். பிரஹ்மம் நித்தியம் எனச் சுருதி கூறுவதால், நித்திய வஸ்துவிற்குப் பிராகபாவப் பிரத்தொம்சாபாவங்கள் உண்டாவது இல்லை. அதனுல், பிரஹ்மத்தி னிடத்தில் கால பரிச்சேதமும் இல்லை. கநாப் பொருள் போன்று, சர்வ ஜகத்தும் பிரஹ்மத்தி னிடத்தில் ஆரோபிக்கப் படுவதால் மித்தை யாம். ஆரோபிக்கப்பட்ட மித்தையா வஸ்து, அதிஷ்டாநத்தினும் பிந்ந சத்தை யுடைய தாகாது. ஆதலால், அதிஷ்டாநம் பிரஹ்மமே சர்வ ஜகத்துக்கும் ஆத்ம வடிவம் ஆகும். இக் காரணத்தால் பிரஹ்மத்தி னிடத்து வஸ்து பரிச்சேதம் இல்லை. என உணர்க.

வேதாந்த சூடாமணி கவி 32-33.

" பூரணத்து முருதனமூன் றுகும் "
" உரைத்தவைதா மியாவையெனி னொருகாலத் துண்டின்
னொருகாலத் தெனுங்கால பரிச்சேத முடனே,
தெரித்தவொரு தேயத்துண் டொருதேயத் திலையென்
றேயபரிச் சேதமுமொன் றுமாகா தென்னுங்,
கருத்தில்வரு வத்துபரிச் சேதமுமா மென்னக் கருதிடுக "
என்னுங் கவியால் உணர்க.

பரிச்சிந்நம் அற்றது - பரிபூர்ண மாகிய அபரிச்சிந்நம் என்றது.

## இலக்ஷணவிருத்தி கவி 91.

“ ஒருவருக் கொருவர்தாம் பரிச்சிந்ந மாய்ப்பிரிவொ டொளிர் சீவ ஞென்றினுக்கொன் - றுறுபரிச் சிந்நமாய் நாலைந்து தத்துவத் துடன்மிகத் தோற்றுசுக்க, சரிரங்க ளாமிவைக ளைக்குறித் தபரிச்சிந் நமாய்த்த னக்குளாறு - தத்வமா கப்பரிச் சிந்நமாந் தூலத்த நுக்களிவை யைக்குறித்துப், பரிச்சிந்ந மின்றியொளிர் பூதங்க ளிவைகளைப் பற்றியப ரிச்சிந்நமாய்ப் - பனுமாயை யுறு வீச னுஞ்சாட்சி யாகவே பகருநம் மைக்குறித்துப், பரிச்சிந்ந மானவத ஞலுமே நம்மிலும் பரிச்சிந்ந மற்றதொன்று - பன்னவில தாலுமப ரிச்சிந்ந ஞமெனப் பரிவிஞெடு மறிகுவாயே.

சுத்தியில் - (வியாவகாரிக சத்தை யுடைய) கிளிஞ்சிலி னிடத்தில், ரஜதம் - (பிராதிபாஸிக சத்தை யுடைய தூலாவித்தை யின் காரிய அநிர்வசநீய) வெள்ளி, போல - (அத்தியஸ்த மாகத் தோற்றுவது) போல, மூலப் பிரகிருதி - மூலம் - காரணம், பிர - சத்துவகுணம், கிரு - ரஜோ குணம், தி - தமோ குணம் ஆம், என்னும் - ஆகிய, ஒரு சத்தி உண்டு - (பிந்ந மாக அநிர்வசநீய) ஒரு சத்தி யிருக்கின்றது.

விகிருதம் - வெளிப்பட்டது.

மூலப் பிரகிருதியின் சத்துவ குணத்துக்கு, மாயை - சர்வஞ்ஞ உபாதி - ஈசுர காரண சரீரம் என மூன்று பெயர் கூறப்படும்.

ஸ்வ லக்ஷணம் - சர்வஞ்ஞத் தன்மை முதலியவற்ருேடு கூடிய, தன் ஸ்வரூப மறைப் பின்றிய தாக இருப்பது.

இந்தப் பிரதிபிம்ப சைதந்யம் சர்வஞ்ஞ ஞகிய ஈசுவரன் என்று சொல்லப்படும் - என்பது, கேவலம் பிரதிபிம்பம் மாத்திரம் ஈசுவரன் என்பது கருத் தன்று, அதிஷ்டாநம் ஆபாசன் ஆசிரயம்



என்னும் மூன்றும் சேர்ந்தே ஈசுவர வாசகம் ஆம். அதிஷ்டாநமும், ஆசிரயமும், இன்றி ஆபாச ஞகிய பிரதிபிம்பம் தனித் திரா தாகலின்.

மூலப் பிரகிருதியின் சத்துவ குணத்துக்கு, மாயை என்றும், மூலப் பிரகிருதியின் ரஜோ குணத்திற்கு, அவித்தை என்றும், மூலப் பிரகிருதியின் தமோ குணத்திற்கு, தமப் பிரதாநப் பிரகிருதி என்றும் பெயர்.

மாயைக்கு, சத்துவம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்கள் உண்டு.

அவித்தைக்கு, சத்துவம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்கள் உண்டு.

தமப் பிரதாநப் பிரகிருதிக்கு, ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சத்திகள் உண்டு. ஆவரண சத்திக்கு, சத்துவம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்கள் உண்டு. விக்ஷேப சத்திக்கு, சத்துவம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்கள் உண்டு, (எ-று).

[மூலப் பிரகிருதியின் ரஜோ குண கற்பனை கூறப்படு கின்றது.]

(மூலம்)

இனி, மூலப் பிரகிருதியின் ரஜோ குணம் அநேக ரூப மாகப் பிரிந்து, அவித்தைகள் என்றும், ஜீவ காரண சரீரங்கள் என்றும், ஒன்றற் கொன்று தார தம்மிய மாகச் சொல்லப்படும். இந்த அவித்தைக ளிடத்திலும், மலிந ஜலப் பிரதிபிம்பம் போலப் பிரஹ்ம சைதந்யம் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்ப சைதந்யங்கள் கிஞ் சிக்ஞர் என்றும், ஜீவ சிதாபாசர் என்றும், பிராக்ஞர்

என்றும் சொல்லப்படும். இந்த அவித்தைக ளிடத்திலே யும், ரஜஸில் சத்துவம், ரஜஸில் ரஜஸ், ரஜஸில் தமஸ் என மூன்று குணங்கள் உண்டு. இரஜஸில் சத்துவம் பிரதான மாகும் போது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன், தத்வ க்ஞாந நிஷ்ட னுவன். இரஜஸில் ரஜஸ் பிரதாந மாகும் போது, அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன், காமக் குரோதபர னுய்க் கர்ம நிஷ்ட னுவன். இரஜஸில் தமஸ் பிரதாந மாகும் போது, அதில் பிரதிபிம்பித்த சிதா பாசன், சோம்பல் நித்திரை மயக்கம் ஆகிய இவைகளை யடைவன்.

[இப்படி மூலப் பிரகிருதியின் இராஜோ குண கற்பனை சொல்லப்பட்டது.]

(இ—ள்.) அநேக ரூபம் - பல ரூபம், அவித்தைகள் - (வித்தையினுல் நாசம் அடைவதால்) அவித்தைகள், ஜீவ காரண சரீரங்கள் - ஜீவனது (ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கட்குக் காரணமா யிருக்கிற படியால்) காரண சரீரங்கள், ஒன்றற்கு - ஒரு (அவித்தை யாகிய காரண) சரீரத்துக்கு, ஒன்று - வேறு (அவித்தை யாகிய காரண) சரீரம், தார - தாழ்வு, தம்மியம் - உயர்வு, அவித்தைக ளிடத்திலும் என்றதில் உள்ள உம்மை, இறந்தது தழீஇய எச்ச உம்மை. மலிந ஜலம் - கலங்கல் நீர், பிரதிபிம்பம் - எதிர்த் தோற்றம், சைதந்யம் - அறிவுத் தன்மை, கிஞ்சிக்ஞர் - கிஞ்சித் - அல்ப, க்ஞர் - அறிவினர், சித் - சித், ஆபாசர் - போன்றவர், பிராக்ஞர் - மிகுந்த அறிவுடையோர், பிரதாநம் - முக்கியம், தத்வ - (ஆத்ம) தத்வ, க்ஞாநம் - அறிவு, நிஷ்டன் - அழுந்தி யிருப்போன், காமம் - விருப்பு, குரோதம் - வெறுப்பு, பரன் ஆய் - அழுந்தியவன் ஆய், கர்ம - தொழிலில், நிஷ்டன் ஆவன் - மூழ்கினவன் ஆவன், (எ-று).



“ இந்தப் பிரதிபிம்ப சைதந்யங்கள் கிஞ்சிக்ஞர் என்றும், சீவ சிதாபாசர் என்றும், பிராக்ஞர் என்றும் சொல்லப்படும்” என்பது கேவலம் பிரதிபிம்பம் மாத்திரம் ஜீவன் என்பது கருத் தன்று. அதிஷ்டாநம் ஆபாசன் ஆசிரமம் மூன்றும் சேர்ந்தே ஜீவ வாசகம் ஆம். அதிஷ்டாநமும், ஆசிரயமும், இன்றி ஆபாச னுகிய பிரதி பிம்பம் தனித் திரா தாகலின்.

[மூலப் பிரகிருதியின் தமோ குண கற்பனை கூறப்படு கின்றது.]

[அவற்றில், ஆவரண சக்தியின் கற்பனை கூறப்படு கின்றது.]

(மூலம்)

இனி, மூலப் பிரகிருதியின் தமோ குணத்திற்கு, ஆவரணம் விக்ஷேபம் என இரண்டு சத்திகள் உண்டு. இவ் விரண்டில், ஆவரண சத்தி யானது, தத்துவ ஞானியை யும், ஈசுரனையுந் தவிர, மற்றைச் சீவருக் கெல்லாம் சரீரத் திரயம், சிதாபாசன், சாக்ஷி சைதந்யம் என்னும் இவை களின் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரிய வொட் டாமல் மறைக்கும். இதனுல் மறைபட்ட சீவர், இரு பத் தொன்பது தத்துவங்களையும் ஒருமைப் பாடாக நான் என்று அபிமானிப்பர். இந்த அபிமானம் அகங்காரக் கிரந்தி என்றும், சம்சார பந்தம் என்றும் சொல்லப்படும். சற்குரு கடாக்ஷத்தினுலே இந்த ஆவரணம் நீங்கி இரு பத் தொன்பது தத்துவங்களின் ஒன்றற் கொன் றுள்ள பேதந் தெரிகின்றதே முத்தி.

[இப்படி ஆவரண சத்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.]

(இ—ள்.) ஆவரணம் - மறைப்பு, விக்ஷேபம் - தோற்றம், சீரம் - கெட்டுப் போவது, திரயம் - மூன்று (அதாவது ஸ்தூல சூக்ஷ்ம காரண 27 தத்துவங்களுடையது), சாக்ஷி - சாக்ஷிபத்தை (அறிபடு பொருளை) விளக்குவது, இவைகளின் - 29 தத்துவங்களின், ஒன்றற்கு ஒன்று - ஒன்று ஒன்றுக்கு, ஒருமைப் பாடு ஆக - அபேதம் ஆக, நான் - அகம், அபிமானம் - கவர்ச்சி, அகம் - நான் (என்பதை), காரம் - செய்கின்ற, கிரந்தி - முடிச்சு, சம்சாரம் - விரிந்த, பந்தம் - கட்டு, சத் - (உண்மைப் பொருளை உபதேசிக்கும்) நல்ல, குரு - (கு. என்னும் அஞ்ஞானத்தினை, ரு. என்னும், ஞானத்தினால் போக்கிப் பிரஹ்மத்தினை உபதேசிக்கும்) தேசிகனது, கட அக்ஷம் - கடைக் கண், ஆவரணம் - மறைப்பு, ஒன்றற்கு ஒன்று - ஒன்று ஒன்றுக்கு, பேதம் - வேறுபாடு, தெரிகின்றதே - அறிகின்றதனால் உண்டாவதே, முத்தி - (அநர்த்த நிவிர்த்தி - ஆநந்த அவாப்தி யாகிய நித்திய) வீடாம். (எ-று).

[விக்ஷேப சத்தியின் காரியம் சொல்லப்படுகின்றது.]

(மூலம்)

இனி, விக்ஷேப சத்தியி னின்றும் சத்த தந் மாத்திரை யான ஆகாசம் தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிச தந் மாத்திரை யான வாயு தோன்றிற்று. வாயுவி னின்றும் ரூப தந் மாத்திரை யான அக்நி தோன்றிற்று. அக்கிநியி னின்றும் ரஸ தந் மாத்திரை யான அப்பு தோன்றிற்று. அப்புவி னின்றும் கந்த தந் மாத்திரை யான பிருதிவி தோன்றிற்று. இந்தச் சூக்ஷ்ம பஞ்ச பூதத்திற்குக் காரண மாயிருக்கின்ற விக்ஷேப சத்தியி னிடத்திலே, தமசில் சத்துவம், தமசில் ரஜஸ், தமசில் தமஸ் என்னும் இவை அற்பங் கருவா யிருந்தபடியால், அதன் காரிய மாகிய



இந்தத் தந் மாத்திரைக ளான பஞ்ச பூதங்களும் முக் குணங்களுடனே பிறந்தன. இந்தப் பஞ்ச பூதங்கட்குத் தந் மாத்திரைகள் என்றும், அபஞ்சீகிருத பூதங்கள் என்றும், சூக்ஷ்ம பூதங்கள் என்றும், முக் குண பூதங்கள் என்றும், சாஸ்திரங்களில் நாமம் சொல்லப்படும்.

(இ—ள்.) விக்ஷேப சத்தி - (மூலப் பிரகிருதியின் தமோ குணத்தின்) தோற்றல் சத்தி, சத்த தந் மாத்திரை - சத்த (ஒலி) அவ் வளவு, பரிச - ஊறு, ரூப - நிற, ரஸ - சுவை, கந்தம் - நாற்றம், அற்பம் கரு ஆய் - கொஞ்சம் விதை ஆக, முக் குணங்கள் - சத்துவ - ரஜஸ் - தமஸ் என்னும் குணங்கள், பஞ்சீ கரணம் - கலப்புச் செய்தல், பஞ்சீகிருத பூதங்கள் - கலப்புச் செய்த பூதங்கள், அபஞ்சீகிருத பூதங்கள், கலப்புச் செய்யப் படாத பூதங்கள், சூக்ஷ்ம பூதங்கள் - இந்திரியங்கட்கு விஷயம் ஆகாத பூதங்கள், சூக்ஷ்மம் - நுண்மை - நொய்மை, எனக் கூறப் படும். முக் குண பூதங்கள் - சத்வம் - ரஜஸ் - தமஸ் ஆகிய குணங்களே ஸ்வரூப மான பூதங்கள்; நாமம் - பெயர், (எ-று).

[சூக்ஷ்ம பூதங்களி னின்றும், சூக்ஷ்ம சரீர, தூல பூத உத்பத்தி கூறப்படுகின்றது.]

[சமஷ்டி அந்தக் கரண உத்பத்தி கூறப்படுகின்றது.]

(மூலம்)

இந்தச் சூக்ஷ்ம பூதங்களி னின்றும் சூக்ஷ்ம சரீரங் களும், ஸ்தூல பூதங்களும் தோன்றும். அஃதெங்ஙன மெனின்:- ஆகாச முதலான பஞ்ச பூதங்களின் சத்து வாம்சத்திலே, பூதத்திற்கு ஒவ் வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது அந்தக் கரணம். இந்த அந்தக்

கரணத்தில், ஆகாசத்தின் அம்சம் கூடினதற் கடையாளம், இந்த அந்தக் கரணமும் ஆகாசத்தைப் போலச் சகல மான கேள்விக்கும் இடங் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு, உள்ளம் என்று பெயர். இந்த அந்தக் கரணத்தில், வாயுவின் அம்சம் கூடினதற் கடையாளம், இந்த அந்தக் கரணமும் வாயுவைப் போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு, மநம் என்று பெயர். இந்த அந்தக் கரணத்தில், அக்நியின் அம்சம் கூடினதற் கடையாளம், இந்த அந்தக் கரணமும் அக்நியைப் போல ஈ தின்னதென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப், புத்தி யென்று பெயர். இந்த அந்தக் கரணத்தில், அப்புவின் அம்சம் கூடினதற் கடையாளம் இந்த அந்தக் கரணமும் அப்புவைப் போல விஷயங்களிற் பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்குச், சித்தம் என்று பெயர். இந்த அந்தக் கரணத்தில், பிருதிவியின் அம்சம் கூடினதற் கடையாளம், இந்த அந்தக் கரணமும் பிருதிவியைப் போலக் கடிந மாக நின்று நான் என்று அபிமாநிக்கின்றது. இந்த அபிமாந விருத்திக்கு, அகங்காரம் என்று பெயர்.

(இ—ள்.) பஞ்ச - ஐந்து, ஒன் ருக - சமஷ்டி யாக, அந்த : - உள், காணம் - சாதநம், அம்சம் - பிரிவு, உள்ளம் - தேஜஸ், மநம் - சங்கல்ப விகல்ப ரூப விருத்தி, புத்தி - நிச்சய ரூப விருத்தி, சித்தம் - சிந்தநா ரூப விருத்தி, அகங்காரம் - அபிமாந ரூப விருத்தி, (எ-று).



[ஞாந இந்திரிய பஞ்சகம் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இன்னும், ஆகாச முத லான பஞ்ச பூதங்களினுடைய சத்வாம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித் தனியே வைத்தது சுரோத்திராதி ஞாநேந்திரிய மென்று சொல்லப்படும். இவைகளில், சுரோத்திரம் ஆகாசத்தின் அம்ச மானபடியால், ஆகாசத்தின் குண மான சத்த மாத்திரத்தை அறியும். துவக்கு வாயுவின் அம்ச மானபடியால், வாயுவின் குண மான பரிச மாத்திரத்தை அறியும். சக்ஷு அக்நியின் அம்ச மானபடியால், அக்நியின் குண மான ரூப மாத்திரத்தை அறியும். சிங்குவை அப்புவின் அம்ச மானபடியால், அப்புவின் குண மான ரஸ மாத்திரத்தை அறியும். கிராணம் பிருதிவியின் அம்ச மானபடியால், பிருதிவியின் குண மான கந்த மாத்திரத்தை யறியும். இப்படி ஐந்தும் ஒன்ருே டொன்று கூடாதபடியால், ஒன்று மற்ருென்றின் குணத்தைக் கிரகிக்க அறியாது. அந்தக் கரணத்தில், ஐந்து மாத்திரையும் ஒன் ருய்க் கூடினது கொண்டு, ஐந்து இந்திரியங்களினுலும், ஐந்து விஷயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்தில் உண்டான அந்தக் கரணம் ஐந்தும், ஞாநேந்திரியம் ஐந்தும், ஆகப் பத்தும் சத்துவாம்சம் ஆனபடியால், ஞாந சாதநம் ஆயின.

(இ—ள்.) சுரோத்திர ஆதி - காது முதலிய, இந்திரியம் - இந்திரஸ்ய - இதம், இந்திர ளுகிய ஆத்மாவிற்கு விஷயங்களைக் கொண்டு போய்ச் சேர்ப்பித்தலின், சாதந மானவற்றி(கரணத்தி)ற்கு

இந்திரியம் என்பது பொருள். சிங்குவை - நாக்கு, கிராணம் - மூக்கு, கந்தம் - நாற்றம், ஐந்தும் - பஞ்ச இந்திரியங்களும், ஒன்றோடு ஒன்று கூடாதபடியால் - பரஸ்பரம் சேர்க்கை யில்லாது வியஷ்டி யானபடியால், ஒன்று - ஒரு இந்திரியம், மற்று ஒன்றின் - வேறு ஒரு இந்திரியத்தின், குணத்தை - சப்த - ஸ்பரிச - ரூப - ரஸ - கந்தம் ஆகிய குணத்தை, கிரகிக்க - கவர, அறியாது - உணராது. ஐந்து மாத்திரையும் - ஆகாசம் - வாயு - அக்கி - அப்பு - பிருதிவி பூதத்தின் - சத்துவ குண ஐந்து பாகங்களும், ஒன்று ஆய் கூடினது கொண்டு - சமஷ்டி யாக இருந்தது கொண்டு, ஞாந சாதநம் - அறி கருவி, (எ-று).

[சமஷ்டி பஞ்ச வாயுக்கள் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இன்னும், ஐந்து பூதங்களி னுடைய இரஜோம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்ருகக் கூட்டி வைத்தது வியாநாதி பஞ்ச வாயுக்கள். இவைகளில், வியாந வாயு ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால், ஆகாசத்தைப் போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராண வாயு வாயுவின் அம்சம் ஆனபடியால், வாயுவைப் போல இருதயத்தில் இருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். அபாந வாயு அக்கியின் அம்சம் ஆனபடியால், அக்கியைப் போலச் சாடராக்கிநி யாக உஷ்ணித்துக் கொண்டு குதத்தைப் பற்றி நின்று உண்ட அந்ந பாநாதிகளைச் சீரணிப்பிக்கும். சமாந வாயு அப்புவின் அம்சம் ஆனபடியால், சரீர நடு வான நாபித் தாநத்தி னின்று உண்ட அந்ந ரஸங்களை அப்புவைப் போல இழுக்கும். உதாந வாயு பிருதிவியின் அம்சம் ஆனபடியால்,



கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப் போலக் கடிந மாக நின்று உண்ட அந்ந பாநாதிகளைக் கடையும். இந்தப் பஞ்ச வாயுக்களையும் அல்லாமல், வாந்தி பண்ணுவிக்கின்றது, நாகன் என்றும், இமைத்து விழிப்பிக்கின்றது, கூர்மன் என்றும், குறு குறுத்துத் தும்மச் செய்கின்றது, கிரிகரன் என்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றது, தேவ தத்தன் என்றும், வீங்கச் செய்கின்றது, தநஞ்செயன் என்றும், வேறே ஐந்து வாயுக்கள் உண் டென்று சிலர் சொல்லுவார், இவ் வைந்தும் பிராணன் உடைய தொழில் ஆனபடியால் வே றல்ல.

(இ—ள்.) சர்வ அங்கமும் - எல்லா அவயவங்களிலும், இருதயத்தில் இருந்து - இருதயத்தினை இட மாகப் பொருந்தி இருந்து, நாசிகா ஆதி பரியந்தம் - மூக்கு நுனி வரை, அலையும் - உசுவாச நிசுவாச ரூப மாக உள் தூல வாயுவை வெளியில் தள்ளும், அபாநம் - கீழ் நோக்கிச் செல்வது, ஜாடர அக்கிநி யாக - ஜடர - அக்கி - வயிற்றில் உள்ள அக்கி, குதத்தைப் பற்றி நின்று - மலக் குழியை இட மாகப் பொருந்தி யிருந்து, உண்ட அந்ந பாந ஆதிகளை - புசித்த (குடித்த) சோறு நீர் முதலியவற்றை, சீர்ணிப்பிக்கும் - பாகம் பண்ணும், நாபி - தொப்புள், ரசம் - சுவை, அப்பு - நீர், கண்டம் - கழுத்து, பிருதிவி - நிலம், (எ-று).

வாயுக்கள்:- வியாநன், பிராணன், அபாநன், சமாநன், உதாநன், நாகன், கூர்மன், கிருகலன், தேவ தத்தன், தநஞ்செயன், வயிரம்பன், முக்கியன், பிரபஞ்சநன், அந்தரியாமி, மஹாப் பிராணன் எனப் பதினைந்து (வாயுக்கள்) ஆகவும் சில நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. அவை யாவும் ஐந்து வாயுக்களில் அடங்கும் என உணர வேண்டும்.

[வியஷ்டி வாக்கு முதலிய கர்மேந்திரிய பஞ்சகம் கூறப் படுகின்றது.]

(மூலம்)

இன்னும், ஆகாச முதலிய பஞ்ச பூதங்களி னுடைய இரஜோம்சத்திலே, பூதத்திற்கு ஒவ் வொரு மாத்திரை எடுத்துத் தனித் தனியே வைத்தது, வாக் காதி கர்மேந் திரியம் என்று சொல்லப்படும். இவைகளில், ஆகாசத்தின் இடம் ஆக வாக்கு வசநிக்கும். வாயுவின் இடம் ஆகப் பாணி இடுதல் ஏற்றல் செய்யும். அக்நியின் இடம் ஆகப் பாதம் நடக்கும். அப்புவின் இடம் ஆகப் பாயுரு மல சலாதிகளை வெளியிலே தள்ளும். பிருதிவியின் இடம் ஆக உபஸ்தம் சுகத்தைப் பண்ணும். இந்த ஐந்தும் தனித் தனியே யிருந்தது கொண்டு மறு தொழில் செய்யமாட் டாது. வியாநாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும் ஒன் ருய்க் கூடினது கொண்டு, கர்மேந்திரியம் ஐந்தின் வழியி னுலும், ஐந்து தொழில்களையும் செய்து முடிக்கும். இந்த வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகப் பத்தும் இரஜோம்சம் ஆனபடியினுல், கிரியா சாதகம் ஆயின. அந்தக் கரணம் 5, ஞாநேந்திரியம் 5, வாயுக் கள் 5, கர்மேந்திரியம் 5 ஆக இரு பது தத்வமும் சூக்ஷ்ம சரீரம் என்று சொல்லப்படும். இந்தச் சூக்ஷ்ம சரீரத்தை மாயாப் பிரதிவிம்ப ஞக இருக்கின்ற ஈசுவரன், அவித்யாப் பிரதிவிம்ப ராகிய ஜீவர்கள் அநேகர் ஆகை யால், ஒவ் வொருவருக்கு ஒவ் வொரு சரீர மாகச் சிருஷ்டித் தளித்தான்.

[இப்படிச் சூக்ஷ்ம சரீர கற்பனை சொல்லப்பட்டது.]



(இ—ள்.) தனித் தனியே - (வியஷ்டி யாக) வேறு வேறு இடங்களில், வாக்கு ஆதி - சொல் முதலிய, கர்ம இந்திரியம் - தொழில் கருவி, பாணி - கை, இடுதல் - கொடுத்தல், ஏற்றல் - வாங்குதல், பாதம் - கால், பாயுரு - குதத்தில் இருக்கும் இந்திரியம், மல ஜல ஆதிகளை - அமேத்தியம் நீர் முதலியவற்றை, உபஸ்தம் - எரு வாய்க்கு இரு விரல் மேல் ஏறு உண்டு இருக்கும் இந்திரியம், மறு தொழில் - (ஒன்று) வேறு (ஒன்றன்) தொழிலை, தத் தம் தொழிலை மாத்திரம் செய்யும் என்றபடி. ஒன்று ஆய் கூடினது கொண்டு - சமஷ்டி யாக இருந்து கொண்டு, அநேகர் ஆகையால் - பல ஜீவர்கள் இருக்கின்றபடியால், (எ-று).

உப - சமீபத்தில், ஸ்தம் - இருப்பது, என்பது பதப் பொருள்.

**கைவல்ய நவநீதம் தத்வ விளக்கப் படலம் கவி 41.**

"ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நங்நான் காக்கி,
நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்குங் கூட்ட,
வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றும்,
தந்தன நான்காந் தூல தநுவண்ட புவந போகம்."

**பிரஹ்ம கீதை 5-38.**

"தன்மாத் திரைக ளைந்தினையு மோரோன் றிரண்டாய்ப் பகுத் தொன்றை, நன்னா லாக்கித் தன்பாதி யொழிந்த நாலி னுடன் கூட்டி, யின்னே யல்லா தவைநான்கி னியல்பிற் கூட்ட வானுதி, பின்னே தூல பூதமெனப் பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான்."
என வருவனவற்ருல் உணர்க.

[ஸ்தூல பூத பஞ்சக உத்பத்தி கூறப்படுகின்றது.]

(மூலம்)

இனி, ஸ்தூல பூத வுற்பத்தி சொல்லுகின்ருேம். அஃ தெங்ஙனம் எனின்:- தமோம்சமா யிருக்கின்ற ஐந்து

பூதங்களையும், ஒவ் வொன்றை இரண் டிரண் டாகப் பகுத்து, முதற் பாதி ஐந்தையும், ஒவ் வொன்றை நான்கு நான் காகப் பகுத்து, இரண்டாம் பாதி ஐந்தில் தன் அம்சத்துடனே கூட்டாமல், மற்றை நான்கு பூதங்க ளுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரை யாகக் கொடுக்கின்றது பஞ்சீகரணம் என்று சொல்லப்படும். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூல பூதங்களிலே, ஆகாசத்திலே, பரிச, ரூப, ரஸ, கந்தம் ஆகிய நான்கு குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால், அதிருசிய மாய்ப் போக, நிஜ குணம் ஆகிய சத்தம் திருசியம் ஆம். வாயுவிலே, ரூப, ரஸ, கந்தம் ஆகிய மூன்று குணங்களும் வியாப்பியம் ஆனபடியினால், அதிருசிய மாய்ப் போகக், காரண குணம் ஆகிய சத்தமும், நிச குணம் ஆகிய பரிசமும், திருசியம் ஆம். அக்கினியிலே, ரஸ, கந்தம் ஆகிய இரண்டு குணங்களும் வியாப்பியம் ஆனபடி யினால், அதிருசிய மாய்ப் போகக், காரண குணங்க ளாகிய சத்த பரிசமும், நிச குணம் ஆகிய ரூபமும், திருசியம் ஆம். அப்புவிலே, கந்த குணம் வியாப்பியம் ஆனபடியினால், அதிருசிய மாய்ப் போகக் காரண குணங்க ளாகிய சத்த பரிச ரூபமும், நிச குணம் ஆகிய ரஸமும், திருசியம் ஆம். பிருதிவியிலே, காரண குணங்க ளாகிய சத்த பரிச ரூப ரஸமும், நிச குணம் ஆகிய கந்தமும், திருசியம் ஆம்.

(இ—ள்.) தம அம்சம் - தம குணம் மாத்திரம், முதல் பாதி - முதல் பிரிவு, இரண்டு ஆம் பாதி - இரண்டாவது பிரிவு, அரைக் கால் - காலில் பாதிப் பிரிவு, தூலம் - பெரிது, அதிருசியம் - தோற்றம் இன்மை, திருசியம் - தோற்றம், (எ-று).



பிருதிவியில் ஐந்தும், அப்புவில் நான்கும், அக்கினியில் மூன் றும், வாயுவில் இரண்டும், ஆகாசத்தில் ஒரு குணமும் வெளிப் படை யாகத் தோற்றும் என உணர்க.

பஞ்சீகரணத்தை வேறு வகைத் தாகவும் கூறுகின்றனர். தூல சரீரத்தில், அஸ்தி, மாம்ஸம், த்வக், நாடி, ரோமம் ஐந்தும் பிருதிவி பூதத்தின் குணங்கள். கபம், மூத்திரம், வியர்வை, சுக்ரம், சோணிதம் ஐந்தும் ஜல பூதத்தின் குணங்கள். பசி, ஆசை, நித்திரை, ஆலஸ்யம், சங்கம் ஐந்தும் அக்கி பூதத்தின் குணங்கள். ஓடுதல், நடத்தல், சுருங்குதல், விரிதல், தனிமை யாகுதல் ஐந்தும் வாயு பூதத்தின் குணங்கள். ராகம், துவேஷம், பயம், லஜ்ஜை, மோஹம் ஐந்தும் ஆகாச பூதத்தின் குணங்கள் என்றும், அம்சம் என்றும், கூறப்படுகின்றபடியால், பிருதிவிக்கு சப்த ஸ்பரிச ரூப ரச கந்த ஸ்வரூப ஐந்து குண முடைமையின், சப்தம் முதலிய ஐந்து குண முடைய பிருதிவி பூதத்தின்கண் இரு பத் தைந்து குணங்கள் பிராப்த மாம்; ஒவ் வொரு சப்த குண முதலியவற் றிற்கு ஐந்து விசேஷ குணத் தன்மை கூறி யிருத்தலின். அங்ஙனமே ஜல பூதத்திற்கு இரு பது குணங்க ளாம். அக்கி பூதத்திற்குப் பதி னைந்து குணங்க ளாம். அங்ஙனமே, வாயு பூதத்திற்குப் பத்துக் குணங்க ளாம். ஆகாச பூதத்திற்கு ஐந்து குணங்க ளாம். இவ் வாறு, இரு பத் தைந்து, இரு பது, பதி னைந்து, பத்து, ஐந்து, என ஐந்து வகை யாக எழு பத் தைந்து, குண ரூப மாகப் பஞ்சீகரணம் ஆகின்றது என்றும் கூறுகின்றனர்.

வேறு வகைத் தாகவும் கூறுகின்றனர்.

விசார சாகரம் ஐந் தாம் தரங்கம் 258 விஷயம்:—

“ஒவ் வொரு பூதம் இரண்டு இரண்டு பாகம் ஆனது. அது சமம் அன்று. ஒரு பாகம் நான்கு அம்சமும், மற் றொரு பாகம் ஐந்து அம்சமு மாம். இவ் வாறு குறைவு மிகுதி யான இரண்டு

இரண்டு பாகங்கள் ஆயின. அவற்றினுள், எல்லாவற்றினும் அதிக மான பாகங்கள் இருந்தபடியே இருக்க, பஞ்ச பூதங்களின் குறை வாகிய ஐந்து பாகங்களின் ஒவ்வொரு பாகத்தினை ஐந்து பாகம் செய்து, தனித் தனியே இருந்த அதிக மாகிய ஐந்து பாகங்களில், ஒவ்வொரு பாகம் சேர்ந்து பஞ்சீகரணம் ஆயின. பஞ்சீ கரணம் செய்ததனால், தன் னம்சம் இரு பத் தொன்றும், மற்றையவற்றின் அம்சம் நான்கும் ஆம். எளி தான ரீதி இதுவாம்:- ஒவ்வொரு பூதமும் இரு பத் தைந்து, இரு பத் தைந்து, பாகங்கள் ஆயின, இரு பத் தொரு, இரு பத் தொரு, பாகங்களும், நான்கு பாகங் களும் வேறு யிருந்தன. நன் நான்கு பாகங்களில், ஒவ்வொரு பாகம், தன் இரு பத் தொரு பாகங்களை யொழித்து, ஏனைய பூதங்களின் இரு பத் தொரு, இரு பத் தொரு பாகங்களில் கூடு கின்றன. ஒவ்வொரு பூதத்தில், ஐந்து ஐந்து பூதங்களைக் கூட்டிச் செய்வதற்குப் பஞ்சீகரணம் என்று பெயர் ஆம்." எனக் கூறுகின்றது.

[தூல பூதங்களி னின்றும், ஸ்தூல சரீர உத்பத்தி கூறப் படுகின்றது.]

(மூலம்)

முன், சூக்ஷ்ம பூதங்களி னின்றும் சூக்ஷ்ம சரீரங் கள் தோன்றினாற் போலப், பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களி னின்றும் ஆறு தத்துவ மாய் நால் வகைப் பிறப் பாய் மூ வகைச் சாதி யா யிருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் தோன்றின. இவற்றுள், ஆறு தத்வங்க ளாவன:- சர்மம், உதிரம், மாம்சம், சநாயு, அத்தி, மஜ்ஜை இவைக ளாம். நால் வகைத் தோற்றங்க ளாவன:- சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜ்ஜம் இவைக ளாம். மூ வகைச் சாதிக ளாவன:- இக லோக பர லோக புத்தி இரு வகையுங் கொடுக்கின்ற மநுட சரீரம் உத்தம சாதி. பர லோக புத்தியை மறைத்து, இக லோக புத்தி மாத்திரம் கொடுக்கின்ற பசு, பக்ஷி முதலானவை மத்திம சாதி. இரண்டு லோக புத்தியையும் மறைத்திருக் கின்ற மரம், கொடி, செடி முதலியவை அதம சாதி. இப்படிப் பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற் போல, அப்பு, அக்கினி, வாயு ஆகாசம் என்னப் பட்ட தத்துவங்க ளாய், நிரை நிரையே யிருக்கின்ற பிதிர் லோகம், தேவ லோகம், யக்ஷ, கந்தர்வ, சித்தர் லோகங்களிலும், நக்ஷத்திர மாகத் தோற்றுகின்ற சந்திரன் முத லான பிதிர்க்கள், சூரியன் முத லான தேவதைகள், கந்தருவர், சித்தர் என்னப்பட்டவர்கள் உத்தம சாதி. காம தேநு, ஐராவதம், அந்நம், கருடன் முத லானவை மத்திம சாதி. கர்ப்பக விருக்ஷம், பாரி ஜாதம் முத லானவை அதம ஜாதி.



(இ—ள்.) சர்மம் - தோல், உதிரம் - ரக்தம், மாம்சம் - சதை, சநாயு - நரம்பு, அத்தி - எலும்பு, மஜ்ஜை - மூளை, ஜராயு - கர்ப்பப் பை, ஜம் - பிறத்தல், (கர்ப்பப் பையில் பிறத்தல்) அண்டம் - முட்டை, ஜம் - பிறத்தல், (முட்டையில் பிறத்தல்) சுவேதம் - வியர்வை, ஜம் - பிறத்தல், (வியர்வையில் பிறத்தல்) உத் - பித் - (பூமியை) மேல் நோக்கிப், பிளத்தல், ஜம் - பிறத் தல், (பூமியை மேல் நோக்கிப் பிளத்தலில் பிறக்கும் மரம், செடி, கொடி முதலியன), அப்பு லோகம் - பிதிர் லோகம் - சந்திரன் நக்ஷத்திரம் முத லான பிதிர்க்கள். அக்கினி லோகம் - தேவ லோகம், சூரியன் முத லான தேவதைகள். வாயு லோகம் - யக்ஷ

லோகம், கந்தருவ லோகம், யக்ஷர் கந்தருவர். ஆகாச லோகம் - சித்தர் லோகம் - சித்தர், (எ-று).

சர்மம், உதிரம், மாமிசம் மூன்றும் பெண்ணின் சுரோணிதத்தால் உண்டாவன ஆம். சநாயு, அஸ்தி, மஜ்ஜை மூன்றும் ஆணின் சுக்கிலத்தால் உண்டாவன ஆம், எனப் பிறித்து உணர்க.

[பஞ்ச கோசங்கள் கூறப்படுகின்றன.]

(மூலம்)

இந்தத் தூல சரீரமே அந்ந மய கோசம். சூக்ஷ்ம சரீரம் மூன்று கோசங்களா யிருக்கும். அஃ தெங்ஙனம் எனின்:- பிராண வாயுவும், கர்மேந்திரியங்களும் கூடிப் பிராண மய கோசம். மநதும், ஞாநேந்திரியங்களும் கூடி மநோ மய கோசம். புத்தியும், ஞாநேந்திரியங்களும் கூடி விஞ்ஞாந மய கோசம். காரண சரீரமே ஆநந்த மய கோசம்.

[இப்படிப் பஞ்ச கோசம் சொல்லப்பட்டன.]

(இ—ள்.) வேதாந்த சூடாமணி திருசிய விவேகம் 99.

"அந்நமொடு பிராணன்மநம் விஞ்ஞாநம் மிக்க வாநந்த மயமாமைங் கோசமுள வவைதாஞ், சொன்னமுறை சுக்கிலசோணிதத்தாகி நின்ற தூலவுடம் பந்நமய கோசஞ்சுக் குமமெய், மன்னலுறும் பிராணனும்வாக் காதியுமே பிராண மயகோச மநமு ஞா நேந்தியமும் புணரிற், பன்னுமநோ மயகோசந் துரியன்சிற் சாயை பதிதலொடு லோகாந்த குந்தமே போன்று."

100 "இருந்தவாங் காரமுஞா நேந்தியமுங் கூடி விசைதலுறும் விஞ்ஞாந மயகோச மாகும், பொருந்துகா ரணதேக ரூபாவித்



தையுந்தாம் புகல்விடய தரிசநசா மிப்பியசை யோகர், தரும்பிரிய மோதமொடு பிரமோத மென்னத் தக்கவையு மாநந்த மயகோசம்." என்று (99-100-வது) செய்யுட்களில் கூறியபடியாலும்,

பிரஹ்ம கீதை 3-வது தைத்திரீய உபநிஷதார்த்தம் கவி 21.

"யாதொன் றெலும்பு நரம்புமுத விந்த வுடம்ப தந்நமயன், ஓது பிராண மயனத்துக் குள்ளாய் வேறு யேயொளிரும், ஓது பிராண மயற்கயலா யுள்ளா யொளிரு மநோமயனன், னீதி யுறவிஞ் ஞாநமய னவனுக் குள்ளாய் நிகழுமால்."

"அந்நியமாய் விஞ்ஞாந மயனுக் குள்ளா மாநந்த மயனந்ந மயன்ற னுள்ளாய், மன்னியவப் பிராணமய னாலே பூர்ணன் மநோமயனாற் பூர்ணன்ம நோம யன்றான், அன்னவகை விஞ்ஞாந மயனாற் பூர்ண னாநந்த மயனாலே யவன்றான் பூர்ணன், றன்னி காற் றனைத்தினுக்கு முள்ளாய் வேறாந் தற்பரத்தாற் பூர்ணனது தானே பூர்ணம்." 22.

என்று கூறியபடி, அந்ந மயத்துக்கு ஆந்தரம், பிராண மயம், பிராண மயத்துக்கு ஆந்தரம், மநோ மயம், மநோ மயத்துக்கு ஆந்தரம், விஞ்ஞாந மயம், விஞ்ஞாந மயத்துக்கு ஆந்தரம், ஆநந்த மயம் என்றும், ஆநந்த மயத்துக்கு ஆந்தரம், பிரஹ்மம் என்றும், அந்ந மயம், பிராண மயத்தாலும், பிராண மயம், மநோ மயத்தாலும், மநோ மயம், விஞ்ஞாந மயத்தாலும், விஞ்ஞாந மயம், ஆநந்த மயத்தாலும், ஆநந்த மயம், பிரஹ்மத்தினாலும் நிரைக்கப்பட்டு, ஒன்றால் ஒன்று பூர்ணம் என்றும், பிரஹ்மம் ஸ்வயம் பூர்ணம் என்றும் கூறியிருப்பதாலும், பஞ்சகோச விசாரம் செய்யப்படுகின்றது.

பஞ்ச கோச விசாரம்.

ஆத்மாவி னிடத்தில், அநாத்மாவினது சொரூபமும், தர்ம மும், தோற்றுவதும், அநாத்மாவி னிடத்தில், ஆத்மாவி னுடைய தர்ம மாத்திரம் தோற்றுவதும், மறைப் பாம்.

இதனைச் சாஸ்திரங்களில் அத்தியாசம் என்றும், ஆரோபம் என்றும், கற்பனை என்றும், கோசம் என்றும் கூறுவர்.

ஈண்டு 27 தத்துவ ரூப பஞ்ச கோசங்களும் தத் தம் சொரூப மாக, எனது தேகம், எனது வியானன், எனது மநம், எனது புத்தி, எனது ஆநந்தம், என்றும், தத் தம் தர்ம மாக நான் பருத்தேன், எனது தேகம் பருத்தது, நான் உசுவாசம் - நிசு வாசம் செய்தேன், எனது பிராணன், உசுவாசம் - நிசுவாசம் செய்தது, நான் சங்கல்பித்தேன், எனது மநம் சங்கல்பித்தது, நான் அறிந்தேன், எனது புத்தி அறிந்தது, நான் சுகித்தேன், எனது அவித்தையின் சத்துவ குணத்தில் ஆநந்த முண்டாயிற்று என்றும், ஆத்மாவின்கண் சொரூப மாகவும், தர்ம மாகவும், தோன்றுதலின், அநாத்மா அத்தியாச மாம். இந்த 27 தத்துவங்க ளோடு ஆத்மாவின் தர்மம், சம்பந்த மாத்திர மாகத் தோன்று தலின், தர்ம ரூப மாக ஆத்மா அத்தியாச மாம்.

இவ்வா றூய பரஸ்பர அத்தியாச மா யுள்ள பஞ்ச கோசங்களை முதலில் நிரூபித்து, பின்னர், பஞ்ச கோச ரூப மான அத்தியாச நிவிர்த்திக் குரிய விசாரத்தினை மந்த முமுக்ஷுக்களின் உபகாரத்தின் பொருட்டுக் கூறு வாம்.

1. அந்ந மய கோசம்.

'ஸ்தூல சரீரமே அந்ந மய கோசம்' என்பது வாக்கியம்.

அந்ந மெனுஞ் சொல் ஷட் ரசங்களோடு கூடிய பதார்த்தங் களை உணர்த்துவ தாம். ஷட் ரசங்களோடு கூடிய பதார்த்தங்



களுக்கு பிரதாநத் தன்மையால், அந்ந மென்னும் பெயர் வந்தது. மயம் என்பது விகாரம், அல்லது, காரியத்திற் காம்.

அந்நம் முதலிய ஷட் ரச பதார்த்தங்களின் விகாரம், அல்லது, காரியம் ஸ்தூல சரீர மாம். அது 6 தத்துவ மாம். கோசம் மறைப் பாம். அந்த மறைப்புத், தா னுக வென்னும் அகந்தா ரூப மாகவும், தனக் கந்நிய மென்னும், மமதா ரூப மாகவும் இரு வகைத் தாம்.

அந்த அகந்தா ரூப மறைப்பும், தர்ம - தர்மி என்னும் பேதத் தால் இரு வகைத்தும், மமதா ரூப மறைப்பும், தர்ம - தர்மி என்னும் பேதத்தால் இரு வகைத்தும் என நான்கு பிரகார மாம். ஆக 24 வித மான மறைப் பாம்.

அவை யாவன: அகந்தா ரூபத்தில், நான் அந்நம், நான் தேகம் என்று உண்டாகாமையின், தர்மி ரூப மாக மறைக்கும் அறு வித அத்தியாச மின்றும்.

அகந்தா ரூபத் தர்மாத்தியாசத்தில் நான் பருத்தேன் இளைத் தே னென்று உண்டாகின்றமையின், அறு வகை மறைப் பாம். எனது அந்நம் என்பன வாதி யாகவும், எனது தேகம் என்பன வாதி யாகவும் உண்டாதலின், தனக் கந்நிய மென்னும் மமதா ரூபத் தர்மி அத்தியாசம் அறு வகைத் தாம். எனது தோல், எனது ரத்தம், எனது மாம்சம், எனது நரம்பு, எனது எலும்பு, எனது மூளை, எனது அந்நம், எனது கறி என்பன வாதி அவற் றிற்கு உதாஹரண மாம்.

தனக் கந்நிய மென்னும் மமதா ரூபத் தர்மாத்தியாசத்தில், எனது சரீரம் பருத்தது, எனது சரீரம் பிறந்தது, எனது சரீர மிறந்தது, எனது ஜாதி, எனது தோல் சிவப்பு, எனது ரத்தம் கருப்பு - சிவப்பு, எனது மாம்சம் நன் றூ யிருக்கிறது, எனது

நரம்பு பெல முடையது, எனது எலும்பு பெரிதா யிருக்கிறது, எனது மூளை அதிகமா யிருக்கிறது, என்பன வாதி யாக அறு வகை யான மறைப்பு உண்டாகிறது.

ஆகப் பிராகாரம் மூன்றுக்கு மறைப்பு 18.

## 2. பிராண மய கோசம்.

"பிராண வாயுவும், கர்மேந்திரியங்களுங் கூடிப் பிராண மய கோச" மென்பது வாக்கியம்.

பிராணன் என்னும் சொல், சூட்சும பூதத்தின் ரஜோ குணத் தின் சமட்டியி லுண்டான வியாநாதி பஞ்ச வாயுக்களும், வியட்டியி லுண்டான வாக் காதி கர்மேந்திரியங்களும், ஆய 10 தத்துவத்தை யுணர்த்துவ தாம். இந்த 10 தத்துவத்திற்குப் பிரதாநத் தன்மை யால், பிராணன் என்னும் பெயர் வந்தது. மயம் - விகாரம், அல்லது, காரியத்திற் காம்.

10 தத்துவங்களின் விகாரங்க ளாவன:- சரீரத்தைத் தாங்கு தல், உசுவாச - நிசுவாசம் செய்தல், உண்ட அந்ந ரசங்களை ஜீரணிப் பித்தல், உண்ட அந்ந ரசங்களை நரம்புகளிற் சேர்த்தல், உண்ட அந்நம் முதலியவற்றைக் கடைந்து தள்ளல், வசநித்தல், கொடுத் தல் - வாங்கல், நடத்தல், மல ஜலங்களை வெளியிற் றள்ளல், சுகம் செய்தல், என்பன வாம்.

கோசம், மறைப் பாம். அந்த மறைப்பும், அகந்தா ரூபத் தர்மி - தர்மம், மமதா ரூபத் தர்மி - தர்மம் என்னும் பேதத்தால் 4 வகைத் தாம்.

அவற்றுள், அகந்தா ரூபத் தர்மி அத்தியாசம், நான் வியாநன், நான் பிராணன், நான் அபாநன், நான் சமாநன், நான் உதாநன்,



நான் வாக்கு, நான் பாணி, நான் பாதம், நான் பாயுரு, நான் உபஸ்தம் என்று உண்டாகாமையின் 10 வித மறைப்பு இன்றும்.

அகந்தா ரூபத் தர்மாத்தியாசம், நான் தாங்கினேன், நான் உசுவாச நிசுவாசம் செய்தேன், நான் ஜீரணிப்பித்தேன், நான் நாடி நரம்புகளிற் செலுத்தினேன், நான் கடைந்து தள்ளினேன், நான் வசநித்தேன், நான் கொடுத்தேன், நான் நடந்தேன், நான் மல ஜலங்களை வெளியிற் றள்ளினேன், நான் சுகஞ் செய்தேன் என்று உண்டாகின்றமையின் 10 வித மறைப் பாம்.

மமதா ரூபத் தர்மி யத்தியாசத்தில், எனது வியாநன், எனது பிராணன், எனது அபாநன், எனது சமாநன், எனது உதாநன், எனது வாக்கு, எனது பாணி, எனது பாதம், எனது பாயுரு, எனது உபஸ்த்தம், என்று உண்டாகின்றமையின் 10 வித மறைப் பாம்.

மமதா ரூபத் தர்மாத்தியாசத்தில், எனது வியாநன் தாங் கிற்று, எனது பிராணன் உசுவாச-நிசுவாசம் செய்தது, எனது அபாநன் ஜீரணிப்பித்தது, எனது சமாநன் நாடி நரம்புகளிற் செலுத்திற்று, எனது உதாநன் கடைந்து தள்ளிற்று, எனது வாக்கு வசநித்தது, எனது கை கொடுத்தது, எனது கால் நடந்தது, எனது பாயுரு மல ஜலங்களை வெளியிற் றள்ளிற்று, எனது உபஸ்தம் சுகத்தைச் செய்தது, என்று உண்டாகின்றமை யின் 10 வித மறைப் பாம்.

ஆக 30 பிரகார மாம்.

ஈண்டு பிராணன் என்னும் பெயரால் கூறப்பட்ட பத்து தத்துவங்கள், அகந்தா, மமதா, ரூபத் தர்மியாகவும், அப் பத்துத் தத்துவங்களின் தொழில்கள் ரூப விகாரங்கள், அகந்தா, மமதா, ரூப தர்ம மாகவும், மறைக்கின்ற தென யூகித் துணர்க.

### 3. மநோ மய கோசம்.

"மநதும், ஞாநேந்திரியங்களுங் கூடி மநோ மய கோச" மென்பது வாக்கியம்.

மநது என்னுஞ் சொல், சூட்சும பூதத்தின் சத்துவ குண சமஷ்டியி லுண்டான மநம், சித்தம், உள்ளம் என்னும் மூன்று தத்துவங்களும், வியஷ்டியி லுண்டான சுரோத்திராதி ஐந்து தத்துவங்களும், ஆக எட்டுத் தத்துவங்களை யுணர்த்துவ தாம்.

இந்த எட்டுத் தத்துவங்கட்கு மநம் என்னும் பெயர் பிரதாநத் தன்மையால் வந்த தாம். மயம் - விகாரம், அல்லது, காரியத்திற் காம்.

அவ் விகாரங்க ளாவன:- சங்கற்பித்தல், சிந்தித்தல், இடங் கொடுத்துத் தரித்தல், கேட்டல், ஸ்பரிசத்தை அறிதல் (தொடுதல்), பார்த்தல், ருசித்தல், முகரல் என எட் டாம்.

கோசம் - மறைப் பாம். அஃதும், அகந்தா ரூபத் தர்மி - தர்மம், மமதா ரூபத் தர்மி - தர்மம் என்னும் பேதத்தால் நான்கு வகை யாம்.

அகந்தா ரூபத் தர்மி யத்தியாசத்தில், நான் உள்ளம், நான் மநம், நான் சித்தம், நான் சுரோத்திரம், நான் த்வக், நான் சக்ஷு, நான் சிங்நுவை, நான் கிராணம் என்று உண்டாகாமையின் எட்டு வித மறைப்பு இன்றும்.

அகந்தா ரூபத் தர்மாத்தியாசத்தில், நான் சங்கற்பித்தேன், நான் சிந்தித்தேன், நான் சகல மான கேள்விகளுக்கும் இடங் கொடுத்துத் தரித்தேன், நான் சத்தத்தைக் கேட்டேன், நான் ஸ்பரிசத்தை யுணர்ந்தேன், நான் ரூபத்தை அறிந்தேன், நான் ரசத்தை ருசித்தேன், நான் கந்தத்தைக் கவர்ந்தேன் என்று உண்டாகின்றமையின் எட்டு வித மறைப் பாம்.



மமதா ரூபத் தர்மி யத்தியாசத்தில், எனது மநம், எனது சித்தம், எனது உள்ளம், எனது சுரோத்திரம், எனது த்வக்கு, எனது கண், எனது நாக்கு, எனது மூக்கு என்று உண்டாகின்ற மையின் எட்டு வித மறைப் பாம்.

மமதா ரூபத் தர்மாத்தியாசத்தில், எனது உள்ளம் சகல மான கேள்விகளுக்கும் இடங் கொடுத்துத் தரித்தது, எனது மநம் சங்கற்பித்தது, எனது சித்தம் சிந்தித்தது, எனது சுரோத்திரம் சத்தத்தைக் கேட்டது, எனது த்வக்கு ஸ்பரிசத்தை யுணர்ந்தது, எனது சக்ஷு உருவத்தை யுணர்ந்தது, எனது சிங்நுவை ரசத்தை யறிந்தது, எனது கிராணம் கந்தத்தை யுணர்ந்தது, என்று உண்டாகின்றமையின் எட்டு வித மறைப் பாம்.

ஆக மூன்று பிரகாரங்க ளாக 24 அத்தியாசங்க ளாம்.

ஈண்டும் மநம் என்னுஞ் சொல்லால் கூறிய எட்டுத் தத்துவங் களும், அகந்தா மமதா ரூபத் தர்மி அத்தியாச மாகவும், அவ் வெட்டுத் தத்துவங்களின் தொழில்க ளாய விகாரங்கள், அகந்தா - மமதா ரூபத் தர்மாத்தியாச மாகவும் இருக்கின்றன என்பதனை யூகித் துணர்க.

### 4. விஞ்ஞாந மய கோசம்

"புத்தியும், ஞாநேந்திரியங்களுங் கூடி விஞ்ஞாந மய கோச" மென்பது வாக்கியம்.

சூட்சும பூத சத்துவ குண சமஷ்டியி லுண்டாய புத்தியும், அகங்காரமும், வியஷ்டியி லுண்டாய சுரோத்திராதி ஞாநேந்திரியங்

களும், ஆய ஏழு தத்துவங்களும் விஞ்ஞான மென்னுஞ் சொல்லுக்குப் பொருளாம்.

இந்த ஏழு தத்துவங்களுக்கு, விஞ்ஞானம் என்னும் பெயர் பிரதானத் தன்மையால் வந்ததாம். மயம் என்பது விகாரம், அல்லது, காரியத்திற்காம்.

முன்னர், மனோ மய கோசத்தில், ஞானேந்திரியம் ஐந்தையும் கூறிவிட்டமையின், ஈண்டு இரண்டு தத்துவங்களை மாத்திரம் கூறுவாம்.

புத்தியின் மயம் பொருளை யறிதலும், அகங்காரத்தின் மயம் கெர்வித்தலும் ஆம்.

கோசம் - மறைப்பாம். அவையும், அகர்தா ரூபத் தர்மி - தர்மம், மமதா ரூபத் தர்மி - தர்மம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்தாம்.

அவற்றுள், அகர்தா ரூபத் தர்மி யத்தியாசத்தில், நான் புத்தி, நான் அகங்காரம் என்று உண்டாகாமையின், இரண்டு அத்தியாசங்கள் இன்றாம்.

அகர்தா ரூபத் தர்மாத்தியாசத்தில், நான் பொருளை யுணர்ந்தேன், நான் கெர்வித்தேன் என்று உண்டாகின்றமையின் இரண்டு வித மறைப்பாம்.

மமதா ரூபத் தர்மி யத்தியாசத்தில், எனது புத்தி, எனது அகங்காரம் என்று உண்டாகின்றமையின் இரண்டு வித மறைப்பாம்.

மமதா ரூபத் தர்மாத்தியாசத்தில், எனது புத்தி பொருளை யறிந்தது, எனது அகங்காரம் கெர்வித்தது என்று உண்டாகின்றமையின் இரண்டு வித மறைப்பாம்.

ஆக மூன்று பிரகாரமாக அறு வகை மறைப்புக்களாம்.



ஈண்டும், புத்தி அகங்காரம் என்னும் இரண்டும், அகந்தா - மமதா ரூபத் தர்மியாகவும், அவற்றின் தொழில்களாய விகாரங்கள், அகந்தா - மமதா ரூபத் தர்மமாகவும் மறைக்கின்றன வென்பதை யூகித் துணர்க.

## 5. ஆநந்த மய கோசம்.

"காரண சரீரமே ஆநந்த மய கோசம்" என்பது வாக்கியம்.

ஈண்டுக், காரண சரீரமாய அவித்தையில், சத்துவ ரஜஸ் தமஸ் என்னும் மூன்று குணங்களில், சத்துவ குணத்திற்கு உள்ள ஆநந்தத்தை, அவித்யா ரூப காரண சரீரத்திற்குக் கூறியது பிரதானத் தன்மையினு லாம். ஆநந்தம் என்பது அவித்தையின் சத்துவ விருத்திக்குப் பொருளாம். மயம் என்பது விகாரம், அல்லது, காரியத்திற்காம்.

ஈண்டு, சுகம், மயமாம். கோசம் - மறைப்பாம்.

அஃதும், அகந்தா ரூபத் தர்மி - தர்மம், மமதா ரூபத் தர்மி தர்மம் என்னும் பேதத்தால் நான்கு வகைத்தாம்.

அவற்றுள், அகந்தா ரூபத் தர்மி யத்தியாசத்தில், நான் அவித்தை என்று உண்டாகாமையின் ஒரு வித மறைப்பு இன்றாம்.

அகந்தா ரூபத் தர்மாத்தியாசத்தில், நான் (சுகி) அறியேன் என்று உண்டாகின்றமையின் ஒரு வித மறைப்பாம்.

மமதா ரூபத் தர்மி யத்தியாசத்தில், எனது அவித்தை என்று உண்டாகின்றமையின் ஒரு வித மறைப்பாம்.

மமதா ரூபத் தர்மாத்தியாசத்தில், எனது அவித்தைக்கு அறிவில்லை என்று உண்டாகின்றமையின் ஒரு வித மறைப்பாம்.

ஆக மூன்று பிரகார மாக, மூன்று வகை மறைப் பாம்.

ஈண்டும், அவித்தையின் சத்துவ விருத்தி யாகிய ஆநந்தம் அகந்தா - மமதா ரூபத் தர்மி யாகவும், அதன் தொழி லாய விகார ரூப சுகம், அறியாமை, அகந்தா - மமதா ரூபத் தர்ம மாகவும் மறைக்கின்ற தென்று யூகித் துணர்க.

ஈண்டு, ஸ்தூல சரீர ஆறு தத்துவமும், சூக்ஷும சரீர இருபது தத்துவமும், காரண சரீர ஒரு தத்துவமும், ஆக இரு பத் தேழு தத்துவங்களும், ஐந்து கோசங்க ளாய்; ஆறு தத்துவ ரூப ஸ்தூல சரீரம், அந்ந மயம் என்றும், பத்து தத்துவ ரூபப் பிராணாதி வாயுக் கள் வாக் காதி கர்மேந்திரியங்கள் பிராணன் எனவும், அவற்றின் விகாரங்கள் மயம் எனவும், எட்டு தத்துவ ரூப உள்ளம் மநம் சித்தம் சுரோத்திராதி ஞாநேந்திரியங்கள் மநம் எனவும், அவற்றின் தொழில்கள் மயம் எனவும், இரண்டு தத்துவ ரூப புத்தி அகங்காரம் இவை, விஞ்ஞாநம் எனவும், அவற்றின் தொழில்கள், மயம் எனவும், ஒரு தத்துவ ரூப அவித்தையின் சத்துவ விருத்தி, ஆநந்த மெனவும், அதன் தொழி லாய சுகம் அறியாமை, மயம் எனவும், பெயர் பெற்று, அந்ந மயம், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம், ஆநந்த மய மென ஐந்து வகை யாய், இரு பத் தேழு தத்து வங்களும், அகந்தா - மமதா ரூபத் தர்மி - தர்ம மறைப்பில், அஷ்டோத்தர சத (108) மறைப் புடையன வாய், அகந்தா ரூபத் தர்மியில் வெளிப்படை யாக மறைப்பு உண்டாகாமையின் இரு பத் தேழு வித மறைப்புக்களை நீக்கி, அகந்தா ரூபத் தர்ம மறைப்பு இரு பத் தேழும், மமதா ரூபத் தர்மி மறைப்பு இரு பத் தேழும், மமதா ரூப தர்ம மறைப்பு இரு பத் தேழும், ஆக மூன்று வகை யில், எண் பத் தொரு வித மாக மறைக்கின்ற தென உணர்க.

இதனைப் பஞ்ச கோச மென்று கூறுவர்.



## 1. அந்ந மய கோச நிவிர்த்தி விசாரம்.

யுக்தி:- அந்நத்தின் காரிய மாய ஸ்தூல சரீரம் நான் என்னும் சொற் பொரு ளாய ஆத்மா வன்று; எதனா லெனின்; உற்பத்தி நாச முடையதனாலும், நேத்திரேந்திரியத்துக்குத் திருசிய மாதலினா லும், பரிச்சிந்நமா யிருத்தலினாலும், ஜடமா யிருத்தலினாலும், கருவில், வருதல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், ஒருங்கல் என்னும் ஷட் பாவ விகார முடையதனாலும், அநித்திய மா யிருத்தலினாலும், அந்நத்தா லுண்டாய சுக்கில சுரோணித உபாதாந காரண மாதலானும், குடம் போல,

ஆத்மா, உற்பத்தி நாசம் இன்றியதனானும், பாகியேந்திரிய அந்தக் கரணங்களின் அதிரிசிய மாதலினானும், பரிபூரணமா யிருத் தலினானும், சேதநமா யிருத்தலினானும், ஷட் பாவ விகாரம் இன்றி யதனானும், நித்தியமா யிருத்தலினானும், தனக்கு உபாதாந காரண மின்றியதனானும், ஸ்தூல சரீர மன்றாம்.

இவ் வாறு, அந்ந மய மான ஸ்தூல சரீரத்தின் தர்மம், ஆத்மாவி னிடத்தில் இன்மையின், ஸ்தூல சரீரம் ஆத்மா வன்றாம். ஆத்மாவின் தர்மம் ஸ்தூல சரீரத்தி னிடத்தில் இன்மையின், ஆத்மா ஸ்தூல சரீரம் அன்றாம்.

இவ் வாறு பரஸ்பரம் விசாரஞ் செய்க.

சுருதி அநுபவம்:- ஆத்மாவை "அசரீரன்" என்று வேதம் கூறுகின்றமையாலும், "இஃதன்று இஃதன்" றென்று ஞாநிகள் ஸ்தூல சரீரத்தை நிஷேதஞ் செய்திருக்கின்றமையாலும் என்க.

## 2. பிராண மய கோச நிவிர்த்தி விசாரம்.

யுக்தி:- ஜல அக்கிநிகளின் காரிய மாய பிராண மயம், ஆத்மா வன்று; எதனா லெனின், உற்பத்தி நாச முடையதனானும், அநு

மாநப் பிரமாணத்திற்கு விஷய மாகலானும், பரிச்சின்னமா யிருத் தலினனும், ஜடமா யிருத்தலினனும், அநித்தியமா யிருத்தலின னும், காணமா யிருத்தலினனும், பாதந்திர மாகலானும், நீல ரூபம் போல,

ஆத்மா, உற்பத்தி நாச மின்றியதனனும், ஹேது இன்மையின் அநுமாநப் பிரமாணத்திற்கு விஷய மாகாமையானும், பரிபூரணமா யிருத்தலினனும், சேதநமா யிருத்தலினனும், நித்தியமா யிருத் தலினனும், ஒன்றற்கும் சாதந மாகாமையினனும், சுதந்தர மாக லானும், பிராண மயம் அன்ரும்.

இவ் வாறு, பிராண மய மாய பிராணுதி வாயுக்கள், வாக்காதி கர்மேந்திரியங்களின் தர்மம், ஆத்மாவி னிடத்தில் இன்மையின், பிராணுதி வாயுக்களும், வாக்காதி கர்மேந்திரியங்களும், ஆத்மா வன்ரும். ஆத்மாவின் தர்மம் பிராண மயத்தில் இன்மையின், ஆத்மா பிராண மய மன்ரும்.

இவ் வாறு பரஸ்பரம் விசாரஞ் செய்க.

சுருதி அநுபவம்:- ஆத்மாவை, "அப்பிராணன், அவாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம்" என்று வேதம் கூறுகின்றமையின னும், "இஃ தன்று இஃ தன்" றென்று பிராண மயத்தை ஞானி கள் நிஷேதஞ் செய்திருக்கின்ற அநுபவத்தினனும் என்க.

### 3. மநோ மய கோச நிவிர்த்தி விசாரம்.

யுக்தி:- அந்நத்தின் காரிய மாய மநோ மயம், ஆத்மா வன்று. எதனு லெனின், உற்பத்தி நாச முடையதனனும், அநுமாநப் பிரமாணத்திற்கு விஷய மாதலினனும், பரிச்சின்னமா யிருத்தலின னும், ஜடமா யிருத்தலினனும், அநித்தியமா யிருத்தலினனும், காரணமா யிருத்தலினனும், பாதந்திர மாகலானும், குணம் போல,



ஆத்மா, உற்பத்தி நாச மின்றியதனனும், ஹேது இன்மை யின் அநுமாநப் பிரமாணத்திற்கு விஷய மாகாமையானும், பரிபூரணமா யிருத்தலினனும், சேதநமா யிருத்தலினனும், நித்திய மா யிருத்தலினனும், ஒன்றற்கும் சாதந மாகாமையினனும், சுதந்தர மாகலானும், மநோ மயம் அன்ரும்.

இவ் வாறு மநம் முதலியவற்றினதும், சுரோத்திராதி ஞானேந் திரியங்களினதும், தர்மம் ஆத்மாவி னிடத்தில் இன்மையின், மநோ மயம் ஆத்மா வன்ரும். ஆத்மாவின் தர்மம் மநோ மயத்தில் இன்மையின், ஆத்மா மநோ மயம் அன்ரும்.

இவ் வாறு பரஸ்பரம் விசாரஞ் செய்க.

சுருதி அநுபவம்:- ஆத்மாவை, "அமநஸ்; அசுரோத்ர: த்வக் - சட்சு - சிங்குவை - கிராணம்" என்று வேதம் கூறுகின்றமையின னும், "இஃ தன்று இஃ தன்" றென்று ஞானிகள் நிஷேதஞ் செய்திருக்கின்ற அநுபவத்தினனு மென்க.

### 4. விஞ்ஞாந மய கோச நிவிர்த்தி விசாரம்.

யுக்தி:- சூட்சும பூத சத்துவ குணத்தின் காரிய மாய விஞ்ஞாந மயம், ஆத்மா வன்று. எதனு லெனின், உற்பத்தி நாச முடையதனனும், அநுமாநப் பிரமாணத்திற்கு விஷயமா யிருத் தலினனும், பரிச்சின்னமா யிருத்தலினனும், ஜடமா யிருத்தலின னும், அநித்தியமா யிருத்தலினனும், காரணமாயும், கருத்தாவாயு மிருத்தலினனும், பாதந்திர மாகலானும், தொழில் போல,

ஆத்மா, உற்பத்தி நாச மின்றியதனனும், ஹேது இன்மையின் அநுமாநப் பிரமாணத்திற்கு விஷய மாகாமையானும், பரிபூரணமா யிருத்தலினனும், சேதநமா யிருத்தலினனும், நித்தியமா யிருத்தலி

னும், ஒன்றற்கும் சாதந மாகாமல் அகர்த்தாவா யிருத்தலி னும், சுதந்தர மாகலானும் விஞ்ஞாந மயம் அன்ரும்.

இவ் வாறு புத்தி அகங்காரம் என்னும் விஞ்ஞாந மயத்தின் தர்மம் ஆத்மாவி னிடத்தில் இன்மையின், விஞ்ஞாந மயம் ஆத்மா வன்ரும். ஆத்மாவின் தர்மம் விஞ்ஞாந மயத்தில் இன்மையின், ஆத்மா, விஞ்ஞாந மயம் அன்ரும்.

இவ் வாறு பரஸ்பரம் விசாரஞ் செய்க.

சுருதி அநுபவம்:- ஆத்மாவை, "ந விக்ஞாநமயோ ஆத்மா. அபுத்தி, அகங்காரம்" என்று வேதங் கூறுகின்றமையினுனும், "இஃ தன்று, இஃ தன்" றென்று, ஞாநிகள் நிஷேதஞ் செய் திருக்கின்ற அநுபவத்தினுனும் என்க.

## 5. ஆநந்த மய கோச நிவிர்த்தி விசாரம்.

யுக்தி:- அவித்தையின் சத்துவ குண விகார ஆநந்த மயம், ஆத்மா வன்ரும்; எதனு லெனின், குணமா யிருத்தலினுனும், விகாரமா யிருத்தலினுனும், ஜடமா யிருத்தலினுனும், அநித்தியமா யிருத்தலினுனும், பரிச்சிந்நமா யிருத்தலினுனும், சாதிசயமா யிருத்தலினுனும், உற்பத்தி யின்றி நாச முடைமையினுனும், அபாவம் போல.

ஆத்மா, குண ரூப மன்ருதலானும், நிர்விகார மாதலி னும், சேதநமா யிருத்தலினுனும், நித்தியமா யிருத்தலினுனும், பரிபூரணமா யிருத்தலினுனும், நிரதிசய மாகலானும், சதோதிதமா யிருத்தலினுனும், ஆநந்த மயம் அன்ரும்.

இவ் வாறு அவித்தையின் சத்துவகுண சுகம் என்னும் ஆநந்த மயத்தின் தர்மம், ஆத்மாவி னிடத்தில் இன்மையின், ஆநந்த மயம் ஆத்மா வன்ரும். ஆத்மாவின் தர்மம் ஆநந்த மயத்தில் இன்மை யின், ஆத்மா ஆநந்த மயம் அன்ரும்.



இவ் வாறு பரஸ்பரம் விசாரஞ் செய்க.

சுருதி அநுபவம்:- ஆத்மாவை, "நாவித்யாவான், அசுகம்" என்று வேதம் கூறுகின்றமையினுனும், "இஃ தன்று, இஃ தன்" றென்று, ஞாநிகள் நிஷேதஞ் செய்திருக்கின்ற அநுபவத்தினு மென்க.

இவ் வாறு, பஞ்ச கோச சொரூபமும், அதன் நிவிர்த்தி விசாரமும் செய்யப்பட்டது.

[ஸ்தூல சரீரத்துக்குள், சூக்ஷ்ம சரீரம் இருப்பது கூறப் படுகின்றது.]

(மூலம்)

ஆறு தத்துவங்களா யிருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே, இரு பது தத்துவங்களா யிருக்கின்ற சூக்ஷ்ம சரீரம் இருக் கின்றது. அஃ தெப்படி எனின்:- கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞாநேந்திரியங்களுள் சிங்குவையும், வாயில் இருக்கும். உதாந வாயுவும், மநதும், கண்டத்திலே யிருக் கும். பிராண வாயுவும், புத்தியும், இருதயத்திலே யிருக் கும். சமாந வாயுவும், சித்தமும், நாபியில் இருக்கும். அபாந வாயுவும், பாயுருவும், குதத்தில் இருக்கும். வியாந வாயுவும், ஞாநேந்திரியங்களுள் துவக்கும், அகங்காரமும், சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே, உள்ளமும், கரு விழி நுனியிலே, சக்ஷுர் இந்திரியமும், காதிற் குள்ளே, சுரோத்திரேந்திரியமும், மூக்கு நுனியிலே, கிரா ணேந்திரியமும், கழுத்திற்கு மேலே தனித் தனியே யிருக்

கும். கழுத்திற்குக் கீழே, கை கால் குய்யங்களில், பாணி பாதம் உபஸ்தம் மூன்றும் தனித் தனியே இருக்கும். இப்படித் தூல சரீர தத்துவங்கள் ஆறு, அதிற் குடி புகுந்த சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் இரு பது, ஆகத் தத்து வங்கள் இரு பத் தாறும் பஞ்ச பூதங்களின் காரியம் ஆன படியினலே, ஒருமைப்பா டாகக் காரிய சரீரம் என்று சொல்லப்படும்.

(இ—ள்.) வாய், கண்டம், ஹிருதயம், நாபி, குதம், சர்வாங் கம், உச்சி, கரு விழி நுனி, காதிற்குள், மூக்கு நுனி, கை, கால், குய்யம் என பதின் மூன்று இடங்களில் இரு பது தத்துவ சூக்ஷ்ம சரீரம் இருக்கின்றது. (எ-று).

அவை யாவன:-

| | | |
|---|---|---|
| 1. | வாய் - வாக்கு, சிங்குவை | 2 |
| 2. | கண்டம் - உதாந வாயு, மநது | 2 |
| 3. | ஹிருதயம் - பிராண வாயு, புத்தி | 2 |
| 4. | நாபி - சமாந வாயு, சித்தம் | 2 |
| 5. | குதம் - அபாந வாயு, பாயுரு | 2 |
| 6. | சர்வாங்கம் - வியாந வாயு, துவக்கு, அகங்காரம் | 3 |
| 7. | உச்சி - உள்ளம் | 1 |
| 8. | கரு விழி நுனி - சக்ஷுர் இந்திரியம் | 1 |
| 9. | காதிற்குள் - சுரோத்திர இந்திரியம் | 1 |
| 10. | மூக்கு நுனி - கிராண இந்திரியம் | 1 |
| 11. | கை - பாணி இந்திரியம் | 1 |
| 12. | கால் - பாத இந்திரியம் | 1 |
| 13. | குய்யம் - உபஸ்த இந்திரியம் | 1 |

என்பன ஆம். ஆக 20.



இரு கரு விழி நுனியும், ஒரு சக்ஷுரிந்திரியம் இருப்பதற்கு இட மாம்.

இரு காதும், ஒரு சுரோத்திரேந்திரியம் இருப்பதற்கு இட மாம்.

இரு நாசித் துளையும் ஒரு கிராணேந்திரியம் இருப்பதற்கு இட மாம்.

இரு கைகளும், ஒரு பாணி இந்திரியம் இருப்பதற்கு இட மாம்.

இரு கால்களும், ஒரு பாத இந்திரியம் இருப்பதற்கு இட மாம். குய்யம் என்னும் ஆண் குறி, பெண் குறியில், பாயுரு இந்திரியம், உபஸ்த இந்திரியம் இரண்டும் இருப்பதற்கு இட மாம். ஆண் குறியில் வீரியம் வருவதற்கு ஒரு வழியும், சிறு நீர் என்னும் மூத்திரம் வருவதற்கு ஒரு வழியும் தனித் தனி உள் ளிருந்து வந்து, குறியின் சமீப இடத்தில் ஒன்று போல் தோற்றுகின்றது. வழி ஒன் றன்று, இரண்டே. பெண்களுக்கு சோணிதம் வரும் வழியும், மூத்திரம் வரும் வழியும், வேறு வேருகவே இருக்கின்றது.

இதனுல் தான் உபநிஷத்துக்களில் இந்திரியங்களின் துவாரங் கள் பதி னென்று என்று கூடச் சொல்லியிருக்கிறது.

பதின் மூன்று இடங்கள் வேறு. அவற்றில் இருக்கும் அந்தக் காரணம் 5, வாயு 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5 ஆக இரு பது தத்துவம் வேறு. தானமும், தானத்தில் இருக்கும் சூக்ஷ்ம சரீர தத்துவங்களும் ஒன் றல்ல. வேறு என யூகித் தறிந்து கொள்க.

உடற் கூறு நூ லாகிய வைத்திய நூல் கொண்டும் ஊகித்து உணரக் கூடும்.

சில நுண்ணறி வுடையோர் சங்கிக்கின்றனர்.

அவர்கள் சங்கை வரும் ஆறு:—

ஞாந இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து என்று சாஸ்திரங்களில் கூறி யிருப்பினும், இந்திரியங்கள் பதினறே ஆகும். வாக்கிந்திரியத்திலும், உபஸ்த இந்திரியத்திலும், சிங்நுவை இந்திரியத்திலும், த்வக் இந்திரியத்திலும், ஒவ்வொரு ஸ்தாநத்தில் இருப்பதால், விவாதம் இல்லை. 1. சுரோத்திர இந்திரியத்திலும், 2. சக்ஷு இந்திரியத்திலும், 3. கிராண இந்திரியத்திலும், 4. பாணி இந்திரியத்திலும், 5. பாத இந்திரியத்திலும், 6. பாயுரு இந்திரியத்திலும், இரண்டு இரண்டு ஸ்தாநத்தில் இருப்பதால் விவாதம் ஆம். ஓர் இந்திரியம் இரண்டிடத்தில் இருந்து கொண்டு ஒரு தொழிலோ, இரு தொழிலோ, செய்ய முடியாது. ப்த்து என்னும் எண்ணிக்கையோ, ஜாதி வசநம் ஆம். சக்ஷுத் தன்மையால், சக்ஷு ஒன்று, சுரோத்திரத் தன்மையால், சுரோத்திரம் ஒன்று, கிராணத் தன்மையால், கிராணம் ஒன்று, பாணித் தன்மையால், பாணி ஒன்று, பாதத் தன்மையால், பாதம் ஒன்று, பாயுருத் தன்மையால், பாயுரு ஒன்று என்று கருதிக் கூறியதே யாகும். ஆனதால், இந்திரியங்கள் பதினறே என்பது சங்கை ஆம்.

சமாதாநம் வரும் ஆறு:-1. சக்ஷு, 2. சுரோத்திரம், 3. கிராணம், 4. பாணி, 5. பாதம், 6. பாயுரு, இந்திரியங்கள் ஆறே யன்றிப் பன்னிரண் டல்ல. ஒரு இந்திரியம் இரு கோளகங்களி லிருந்து கொண்டு ஒரு தொழிலையும், ஒரு இந்திரியம் இரு கோளகங்களில் இருந்து கொண்டு, இரு தொழிலையும் செய்தல் கூடும். வியாந வாயுவும், த்வக் இந்திரியமும், அகங்காரமும், மத்திம பரிமாண மாகலின், நகசிகை பரியந்தம் சரீரத்தின் அள வாக இருக்கின்றன. அது போன்று இந்திரியங்கள், மத்திம பரிமாண முடைய தாகலின், இரு காது - இரு கண் - இரு மூக்கு - இரு கால் - இரு கைகளில், இருந்து



கொண்டு, ஒவ்வொரு தொழிலைச் செய்தல் கூடும். பாயுரு இந்திரியம், குதம் ஆகிய ஓர் இடத்து இருந்து கொண்டு, மலம் ஜலம் என்னும் இரண்டையும் வெளியில் தள்ளுத லாகிய இரு தொழிலைச் செய்யும். காக்கைக் கண் போன்று ஞாநி திருஷ்டி என்று கூறியிருக்கிறதே என்று, ஓர் இந்திரியம் என்பதற்குத் திருஷ்டாந்தம் கூறினல், அது கொண்டு, காக்கைக்குச் சக்ஷு இந்திரியம் ஒன்று என்றும், மநிதர் முதலிய இதர ஜீவ சரீரங்கட்கு, ஈர் இந்திரியம் தான் என்றும், கூறுகின்றனர். இந்திரியங்கள் அணு வாயின் போக்கு வரத்து உடையன வாம். விபு வாயின், சரீரம் முழுமையும் வியாபித்திருக்கும். சிறிய பெரிய சரீரங்களில், ஏக தேசத்திருத்தலும், முழுதும் புகாமையு மாகிய விரோதம் உண்டாம். இதனல் தான் மத்திம பரிமாணம் என்று கூறுகின்றனர்.

மத்திம பரிமாணம் என்பதற்குப் பொருள், எந்த எந்த ஜீவன், எந்த எந்த ஸ்தூல சரீரத்தினை எடுத்ததோ, அந்த அந்த ஸ்தூல சரீரத்துக்குத் தக்க தாகச் சூக்ஷும சரீரம் இருத்த லாம். அதாவது, சிறிய எறும்புச் சரீரத்தில், அதற்குத் தக்க வாறும், மலைப் பாம்புச் சரீரத்தில், அதற்குத் தக்க வாறும், யானைச் சரீரத்தில் அதற்குத் தக்க வாறும், ஆயிரங் கால் அட்டைச் சரீரத்தில், அதற்குத் தக்க வாறும், சூக்ஷும சரீரம் இருப்பது என உணர வேண்டும். அவ்வாறின்றி, ஒவ்வோர் அவயவத்திற்கும், ஒவ்வோர் இந்திரிய மாகக் கொள்ளின், நாற் காற் பிராணிகட்கு, நான்கு பாத இந்திரியம் என்றும், பாணி இந்திரியம் இன்று என்றும், இரு காற் பிராணிகட்கு, பாணி இந்திரியம் இன்று என்றும், பாம்புக்குச் சுரோத்திர இந்திரியம் இன்று என்றும், வவ்வாலுக்கு பாயுரு இந்திரியம் இன்று என்றும், அலிகட்கு உபஸ்த இந்திரியம் இன்று என்றும், கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளின், சூக்ஷ்ம சரீரம் இருபது தத்வம் என்றும், பத்தொன்பது தத்துவம் என்றும், பதின் ஏழு தத்துவம் என்றும் கூறிய நூல்கட்கு விரோதம் வரும். அதனல், தூல சரீர

ரூப கோளகங்கள், அதிக மாயின், விரிந்தும், குவியின் குறைந்தும், கோளகங்கள் இன்றி யிருக்கின், அவ் விந்திரியங்கள் தொழில் செய்யாமலும் இருக்கின்றன. அவை புண்ணிய பாப காரணங்களாம். குருடு, செவிடு, நொண்டி, மூக் கறையன் முதலியவர்கட்கு சூக்ஷ்ம சரீர தத்துவம் கெட்டுவிட்ட தென் றுவது, நாசம் ஆகிவிட்டதென்று ஆவது கொள்ளல் தகுதி யன்றும். பின்னர், அவ் விந்திரியங்கள் இருந்தும், ஸ்தூல சரீர ரூப கோளகங்கள், பாப விசேஷத்தால், குறைந்தோ, தடைப்பட்டோ இருத்தலின், தத் தம் தொழிலைச் செய்ய வில்லை என்று கொள்ளல் வேண்டும். இங்ஙனம் அன்றுயின், இந்திரனுக்கு ஆயிரம் கண் இருக்கின்றமையின், இந்திரியங்கள் அதிக மாக வேண்டும். ஆயிரம் கால் அட்டை (சஹஸ்ரபாதி) க்கு கால் ஆயிரம் இருத்தலின் பாத இந்திரியம் ஆயிரம் ஆக வேண்டும். எழு வகைத் தோற்ற ரூப மான ஸ்தூல சரீரங்கள் யாவும் புண்ணிய பாபங்கள் நிமித்த மாக இறைவனுல் உண்டுபண்ணப்படுதலின், புண்ணிய பாப கர்மங்களும், இறைவன் இச்சையும், காரண மாம். இங்ஙனம் கொள்ளாக்கால், வியாந வாயுவும், த்வக் இந்திரியமும், அகங்காரமும் ஆகிய மூன்றும், ஒரு தன்மையாகவும், மநதும், சக்ஷுஸ் இந்திரியமும், சுரோத்திரேந்திரியமும், ஒரு தன்மையாகவும், பிராணன் - அபாநன் - சமாநன் - உதாநன் - புத்தி - சித்தம் - சிங்ஙுவை - கிராணம் - வாக்கு - பாணி - பாதம் - பாயுரு - உபஸ்தம் - என்னும் பதின் மூன்றும் ஒரு தன்மையாகவும் என மூ வித வேறுபாடு பொருந்தாது. மற்றும், சுரோத்திரம் - சக்ஷுஸ் - கிராணம் - பாணி - பாதம் - பாயுரு - ஆறும் இரண்டு இரண்டு இந்திரியங்களா யிருந்து தொழில் செய்கிறது என்று சங்கிப்பார் கூற்றும் பொருந்தாது. இன்னும், படுத் தன்மை - மந்தத் தன்மை - அந்தத் தன்மை - பலம் - பலம் இன்மை - வேகம் - வேகம் இன்மை - விவேகம் - விவேகம் இன்மை - விசாரம் - விசாரம் இன்மை - கேட்டல் - கேட்காமை -



பார்த்தல் - பார்வை குறைதல் - அறிவு - அறி வின்மை என்பன வாதி சூக்ஷ்ம சரீரத்தில் காணப்படும் வித்தியாசங்களும், தூல சரீர வாயி லாகத் தோன்றுதல் பொருந்தாது எனவும் உணரவேண்டும்.

கௌதமர் இயற்றிய நியாய சூத்ரம் 3-வது அத்தியாயம் 1-வது ஆஹ்நிகம் 7-வது சூத்ரம் முதல் 15-வது சூத்ரம் வரை 9 சூத்ரங்களில், சக்ஷுர் இந்திரியம் இரண்டா? ஒன்று? என்று சங்கித்து, ஒன்று என்று சமாதாநம் கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே, வாஸ்யாயந முநிவர் இயற்றிய பாஷ்யத்திலும், விசுவநாதர் இயற்றிய விருத்தியிலும், ஒன்று என்றே கூறப்பட்டிருக்கின்றது.

வேறு சங்கை :— முண்டக உபநிஷத், இரண்டாவது முண்டகம், முதற் கண்டம், எட்டாவது மந்திரம்.

**सप्तप्राणाः प्रभवंति तस्मात्सप्तार्चिषः सप्तसमिधः सप्त होमाः २-१-८॥**

(எழு பிராணன்கள் உண்டாகின்றன. அதனுல் எழு ஆர்ச்சிஷர் (விளக்கம்) எழு சமித், எழு ஹோமங்கள்.)

அதன் மணிப் பிரவை உரை.

**किंच सप्त प्राणाः - द्वे श्रोत्रे द्वे चक्षुषी द्वे घ्राणे एका वागिति - शिरसि स्थानानि सप्तेंद्रियाणि, तस्मात् - उक्त पुरुषात् - प्रभवंति - उत्पद्यंते ।**

மீண்டும் எழு பிராணன்கள். இரு காது, இரு கண்கள், இரு மூக்குகள், ஒரு வாக் எனச் சிரசில் ஸ்தாநங்கள் எழு இந்திரியங்கள், அந்தக் கூறிய புருஷனிடத்தினின்று உண்டாகின்றன என்றும்,

மகா நாராயண உபநிஷத் எட்டாவது கண்டம் நான் காவது மந்திரம்.

सप्त प्राणाः प्रभवंति तस्मात्सप्तार्चिषः सप्त जिह्वाः ॥ ८ । ४ ॥

(ஏழு பிராணன்கள் உண்டாகின்றன. அதனால் ஏழு ஆர்ச்சிஷர் (விளக்கம்) ஏழு நாக்கு.) என்றும்,

இவ்வாறு முண்டக உபநிஷத் இரண்டாவது முண்டகம் முதற் கண்டம் எட்டாவது மந்திரத்தும், மகா நாராயண உபநிஷத் எட்டாவது கண்டம் நான்காவது மந்திரத்தும், காது இரண்டு, கண் இரண்டு, மூக்கு இரண்டு, வாக் ஒன்று, என்றும், ஏழு என்றும், கூறியிருக்கிறபடியால், ஞாந இந்திரியம் ஐந்து என்று சொல்வது பொருத்த மற்ற தாம். எதனுலெனின், உபநிஷத் பிரமாணத்தை நிராகரிக்க முடியாமையின், எனப் பல மான தடி கொண்டு யுத்தத்திற்கு எழுவது போல, உபநிஷத் பிரமாண மாகிய பலம் கைக் கொண்டு வீறிட்டு விவாதிக்கின்றனர் சிலர்.

அதற்குச் சாந்த மான சமாதாநம் வரும் ஆறு:—

இந்த நாநா ஜீவ வாதக் கட்டளையில், கழுத்திற்கு மேல், தனித் தனியே யிருக்கும் என்று சொன்னது போலவே, கழுத்துக்கு மேல் இருக்கும், இந்திரியங்களையும், இந்திரிய ஸ்தாநங்களையும், கூறுகின்றது இம் மந்திரங்கள். பரமாத்மாவி னின்றும் உண்டானவற்றைச் சொல்லுகின்றன. ஏழு என்னும் எண்ணிக்கை இந்திரியத் தன்மையால் அன்று. ஏழு ஸ்தாநங்களையும் போய் வர இட மாகக் கொண்டிருத்தலின் உருவக அலங்கார மாகச் சொல்லப்பட்டது. அதே மந்திரத்தில், इमे लोकाः- என்று ஸ்தாநங்கள் கூறப்படுகின்றன. இந்திரியங்கள் போய் வரும் ஸ்தாநங்கள் ஏழே அன்றி இந்திரியங்கள் ஏழு அல. முண்டக உபநிஷத்தின் அதே முண்டகத்தின் இரண்டாவது முண்டகம் முதற் கண்டம் மூன்ருவது மந்திரத்தில், सर्वेन्द्रियाणि என்பதற்கு, மணிப் பிரபை உரையில், श्रोत्रादि ज्ञानेंद्रियाणि पंच - वागादि कर्मेन्द्रियाणि पंच



(சுரோத்திராதி ஞாந இந்திரியங்கள் ஐந்து, வாக் ஆதி கர்ம இந்திரியங்கள் ஐந்து) என்று கூறப்பட்டிருக்கிறபடியால், இந்திரியங்கள் மூன்றுக்கு இரட்டிப் பாக ஆறு என்ப தன்று. இவ்வாறு அன்றி, இந்திரியங்கள் மூன்று அன்று, ஆறு எனக் கொள்ளின், சுவேத அசுவத்ர உபநிஷத் மூன்ருவது அத்தியாயம் பதினுருவது மந்திரம்.

"सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरो मुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्यतिष्ठति ॥ १६ ॥"

"எங்கும் கை, எங்கும் கால், எங்கும் கண், எங்கும் தலை, எங்கும் முகம், எங்கும் காது, லோகத்தில் எல்லாவற்றையும் மறைத்துக்கொண்டு இருக்கிறது." என்று கூறுகிறது.

ஜீவர்களின் இந்திரியங்களே ஈசுவரனுக்கும் இந்திரிய மாகலின், ஜீவர்கட்கு மூன்று நேத்திரம், மூன்று கோளகங்கள் இன்மையின், விரோதம் வரும்.

மகா நாராயண உபநிஷத் மூன்ருவது கண்டம் ஐந் தாவது மந்திரம்,

"कृष्णेन शतबाहुना —"

"நூறு கையினை யுடைய கிருஷ்ணனுல்," என்னும் மந்திரத்தில், நூறு கை கூறுகிறபடியால், ஜீவர்கட்கு நூறு பாணி இந்திரியம் இன்மையின், விரோதம் வரும்.

மற்றும், முண்டக உபநிஷத் - மகா நாராயண உபநிஷத்களில், சிரசில், அதாவது, கழுத்திற்கு மேல் இருக்கிற இந்திரியங்களைச் சொன்னது போலவே, இந்த நாநா ஜீவ வாதக் கட்டளையிலும், இரண்டு இரண்டு இந்திரியங்கள் சேர்ந்து ஒவ்வொரு இடத்தில் இருக்கும் ஐந்து ஸ்தாநங்களில் பத்துத் தத்துவங்களையும்,

எங்கும் இருக்கும் மூன்று தத்துவங்களையும் கூறிவிட்டுக் கழுத்திற்கு மேல் வெவ் வேறு இடங்களில் தனித் தனியாக இருக்கும் மூன்று இந்திரியங்களையும், உள்ளம் என்னும் தத்துவத்தையும், கழுத்திற்குக் கீழே வெவ் வேறு இடங்களில் தனித் தனி யாக இருக்கும் மூன்று இந்திரியங்களையும் கூறி, இரு பது தத்துவ சூக்ஷ்ம சரீரத்தைத் தூல சரீரத்தில் குடி புகுந்த தாகக் கூறி யிருப்பதால், குடி யிருக்க இடம் மேல் கீழ் என்று வியவஸ்தை செய்கின்றனரே அன்றி, பதி னறு இந்திரியங்கள் என்று கூறின ரில்லை. அதாவது, கீழ் வீட்டிலும், மேல் வீட்டிலும் குடி யிருப்பது போலத் தூல சரீர மாகிய கட்டிட ரூப வீட்டில், உயர்ந்த ஸ்தாந மாகிய மேல் வீடு போன்ற கழுத்திற்கு மேல், குடி யிருப்பவர்க ளாகிய தத்துவங்களையும், தாழ்ந்த ஸ்தாந மாகிய கீழ் வீடு போன்ற கழுத்திற்குக் கீழ், குடி யிருப்பவர்க ளாகிய தத்துவங்களையும் விளக்கினர். அது கொண்டு இந்திரியங்கள், அதாவது, ஞாந இந்திரியங்கள் எட்டு என்றும், கர்ம இந்திரியங்கள் எட்டு என்றும், ஆக இந்திரியங்கள் பதி னறு என்று கொள்ளல் பொருத்த முடைய தன்றாம்.

(எஞ்சிய உரைத் தொடரைப் புத்தக முடிவில் காண்க.)

[ஜீவனுக்கு மூன்று அவஸ்தைகள் கூறப்படுகின்றன.]

(மூலம்)

அவித்தையிற் பிரதிவிம்பித்த சிதாபாசன், சாக்கிரத்திலே இந்த இரு பத் தாறு தத்துவங்களுடனே கலந்து நின்ற போது, விசுவன் என்றும், வியாவகாரிக சீவன் என்றும், சொல்லப்படுவன். சொப்பநத்திலே, தூல சரீரத்தை விட்டு, அந்தக் கரணத்துடனே கூடி நின்ற போது, தைஜசன் என்றும், பிராதிபாஸிக ஜீவன்



என்றும், சொப்பந கற்பிதன் என்றும் சொல்லப்படுவன். சுழுத்தியிலே, காரிய சரீர தத்துவங்கள் இரு பத் தாறையும் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி யிருக்கும் போது, பிராக்ஞன் என்றும், பாரமார்த்திக ஜீவன் என்றும் சொல்லப்படுவன். பிரஹ்ம சைதந்யமும், சாக்கிரத்திற்குச் சாக்ஷியா யிருக்கும் போது, ஜீவாத்மா என்றும், சொப்பநத்திற்குச் சாக்ஷியா யிருக்கும் போது, அந்தராத்மா என்றும், சுழுத்திக்குச் சாக்ஷியா யிருக்கும் போது, பரமாத்மா என்றும், அவஸ்தாத் திரய சாக்ஷியா யிருக்கும் போது, ஞாநாத்மா என்றும், கூடஸ்தன் என்றும், சொல்லப்படும்.

[இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும் சொல்லப்பட்டன.]

(இ—ள்.) சாக்கிரத்திலே - சாக்கிர அவஸ்தையில், ஜாக்கிர மாவது, வேதாந்த சூடாமணி திருசிய விவேகம் 91 கவி.

“ பெருந்தூல வைம்பூத மீரைந்திந் திரியம்
 பிராணபஞ் சகமொடுநாற் கரணமிவை யுருவா,
மருந்தூல சரீரத்திற் சாத்துவித குணமோ
 டகரவெழுத் தரிதெய்வம் விழியிடமே யாக,
விருந்தாக விதயமல ரட்டதள கதியில்
 விசுவசீ வனும்விராட் டிறையுமொருங் கடைந்து,
வருந்தாவில் விடயங்கள் காணமனைத் தானு
 மருவிநுகர்ந் திடுதல்சா கரணமா மன்றே. ”

என்று கூறுகின்றது.

இருபத்தாறு தத்துவங்களுடனே - ஸ்தூல, சூக்ஷ்ம சரீரங்களோடு, கலந்து நின்ற போது - (காய்ந்த இரும்புத் துண்டம் போல) அபேதப்பட்டு விளங்குகின்ற காலத்தில், விசுவன் - விசுவம் - ஜகத் ரூப ஸ்தூல சூக்ஷ்ம சரீர 26 தத்துவங்கள், அவற்றை நான் என்று அபிமானிப்பவன், விசுவ ஞவன். வியாவகாரிக சீவன் - வியவகாரம் செய்கிற சீவன்.

சொப்பநத்திலே - சொப்பநாவஸ்தையில்,

வேதாந்த சூடாமணி - திருசிய விவேகம் 92 கவி.

" பஞ்சபூ தமுஞ்சித்த புத்தியுமின் ஞெழிந்த
பதினேழின் மயமாஞ்சுக் குமதநுவி னின்றும்,
விஞ்சுராசோ குணமுகர மெழுத்ததிதெய் வந்தான்
விரிஞ்சனிடங் களமாக நல்லிதய மென்னுங்,
கஞ்சமலர்க் கர்ணிகா கதியாற்றை சதனுங்
கநககர்ப் பனுமருவி நநவின்வா தனையை,
நெஞ்சமெனுங் காணத்தா லநுபவிக்கை தானே
நிகழ்ந்திடுஞ்சொப் பநமென்று நிகழ்த்துவர்மூ தறிஞர்."

என்று கூறியபடி,

ஸ்தூல சரீரத்தை விட்டு - ஸ்தூல சரீர ரூப ஆறு தத்துவத்தை நீக்கி, அந்தக் காணத்துடனே - சூக்ஷ்ம சரீரத்தோடு.

ஸ்வப்ந அவஸ்தையில் மநமே பிரதாந மாம். அதனால், அந்தக் காணம் என்று கூறப்படுகின்றது. ஸ்வப்நத்தில் - பார்த்தல் - கேட்டல் - போதல் - வீரிய ஒழிவு முதலிய இந்திரிய வியவகாரங்களும் கற்பித்துக் காணப்படலின், சூக்ஷ்ம சரீர தத்துவம் இருபதும் கொள்ளல் வேண்டும். சித்தம், புத்தி இன்று என்று சொல்லியிருக்கிறபடியால், சாமாந்ய மாக யாவும் இருக்கின்ற தென்றே



கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளாவிடின், சில தத்துவங்களுக்கு சங்கோச விகாசம் அங்கீகரிக்க நேரும். அது வேதாந்தத்தின் கருத்து அன்று.

தைஜசன் - (மிகுந்த) பிரகாச ரூபன், பிராதிபாஸிக ஜீவன் - பிரதிபாசம் - தோற்றம், தோற்றம் மாத்திர மாக விளங்கும் ஜீவன், சொப்பந கற்பிதன் - சொப்பநத்தால் உண்டு பண்ணப்பட்டவன், சொப்பந கற்பிதன் ஆவன். சொப்பநத்தைக் கற்பிப்பவன் என்பது பொரு ளன்று. அங்ஙன மாகு மாயின், சொப்பந கற்பகன் என்று சொல் இருக்க வேண்டும். அங்ஙனம் இன்மையின் அது பொருள் அன்று. பெரு நூல் வழக்கும் அன்று.

சுழுத்தியிலே - சுழுத்தி அவஸ்தையில்,

வேதாந்த சூடாமணி - திருசிய விவேகம் 93 கவி.

" மேய்ந்துதிரி பார்ப்படக்கி யுறங்களகு போல
விரிந்தகா ரியங்களையுட் கொண்டுவா தனையோ,
டாய்ந்தவாங் மாசிரயத் தவத்தையற விருக்கு
மரும்பகுதி மயமாங்கா ரியவுடம்பிற் றமமே,
யேய்ந்தகுண மகரவெழுத் தரன்றெய்வ மிதய
மிடமாகக் கமலமலர்ப் பொகுட்டுறடுக் கதியா,
லோர்ந்தபிராஞ் ஞனும்பானு மாய்ப்பிரமா நந்த
முறுமாயா விருத்தியெனு நுண்காணந் தன்னால்."

" அநுபவித்தல் சுழுத்தியாம் " ( ஷை - ஷை - 94 கவி. )
என்று கூறியபடி,

தூல சூக்ஷ்ம சரீர, காரிய ரூப இருபத்தாறு தத்துவங்க ளாய இரண்டு சரீரங்களையும் விட்டு, காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தி யிருக்கும் போது - மலிந சத்துவப் பிரதாந

அவித்தையை மாத்திரம் கூடி யிருக்கும் காலத்து, பிராக்ஞன் என்றும் - பிராக்ஞன் - மிகுந்த அறிவுடையோன் எனவும்,

சுழுத்தி அவஸ்தையில் மனம் இந்திரியம் முதலிய சாதனங்கள் இன்றி, அவித்தையினையும், அதன் சத்துவ விருத்தியில் உள்ள சோபாதிக க்ஷணிக ஆனந்தத்தினையும் அறிவதால், பிராக்ஞன் எனப்படுகின்றான்.

பாரமார்த்திக ஜீவன் - பாரமார்த்திகம் என்பது யதார்த்தம் ஆம். அதாவது, உண்மை ஆம். சுழுத்தி அவஸ்தையில், அதிஷ்டான ரூப மாக அத்தியாச ஐக்கிய மாகிறபடியால் உண்மைச் சொரூபன். அதாவது, யதார்த்த ரூபன், பாரமார்த்திகன் எனப்படுகின்றான். பிரஹ்ம சைதந்யமும் - என்பதில் உள்ள உம்மை இறந்தது தழிய எச்ச வும்மை ஆம். பிரஹ்ம சைதந்யம் - ஜாக்கிர அவஸ்தையில் விசுவ ஜீவனுக்குச் சாக்ஷியா யிருக்கும் போது,

" காய்ந்துள விரும்பு போலுடம் பாதி
கலந்துறு குடும்பமென் வழக்கிற்
சார்ந்துளன் சீவாந் மாவெனப் படுவான்." என,

வேதாந்த சூடாமணி - திருக்கு விவேகம் 36-வது கவியில் கூறியபடி, ஜீவ ஆத்மா என்றும், ஸ்வப்ந அவஸ்தையில், தைஜசன் - பிராதிபாஸிகன் - ஸ்வப்ந கற்பிதன் என்னும் பெயர் உடைய ஜீவனுக்குச் சாக்ஷியா யிருக்கும் போது,

" ......... தாமரை யிலையினீர் போலத்
தோய்ந்துள குடும்பப் பெருவிவ காரந்
தோய்வில னந்தராந் மாவாம்." என,

வேதாந்த சூடாமணி - திருக்கு விவேகம் 36-வது கவியில் கூறியபடி, அந்தர் ஆத்மா என்றும், சுழுத்தி அவஸ்தையில்,



பிராக்ஞன் - பாரமார்த்திகன் என்னும் பெயரை உடைய ஜீவனுக்குச் சாக்ஷியா யிருக்கும் போது,

" போந்துல கிற்குப் பரிதிபோற் சான்றாய்ப்
பொருந்தினேன் றன்பர மாந்மா." என,

வேதாந்த சூடாமணி - திருக்கு விவேகம் 36-வது கவியில் கூறியபடி, பரம ஆத்மா என்றும், அவஸ்தாத் திரய சாக்ஷியா யிருக்கும் போது - சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளையும் அறிந்து கொண்டிருக்கும் சமயம், ஞான ஆத்மா - அறிவு சொரூபன், கூடஸ்தன் - (கூடம் - ஸ்தன்) கூடம் - கொல்லன் சம்மட்டி (போன்று நிரு விகார மாக), ஸ்தன் - இருப்பவன், என்றும் சொல்லப்படும் - எனவும் சாஸ்திரங்களில் நாமம் கூறப்படும்.

இப்படி - இவ் வாறு, ஜீவனுக்கு - ஜீவனுக்கு, மூன்று சரீரங்களும் - ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும் - சாக்கிர ஸ்வப்ந சுழுத்தி அவஸ்தைகளும், சொல்லப்பட்டன - (நம்மால்) கூறப்பட்டன. (எ-று).

[ஈசுவரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இனி, ஈசுவரனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளும் சொல்லும்படி.

கற்பிதப் பிரபஞ்ச வடிவ மாகத் தோற்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும், அந்தப் பூதங்களிலே தோன்றிய மூன்று சாதியா யிருக்கின்ற தூல சரீர சமஷ்டியுங் கூடி,

ஈசுவர தூல சரீரம் என்றும், விராட் டென்றும் சொல்லப்
படும். இதனுடனே கூடிச் சாக்கிராவஸ்தையைப்
பொருந்துகின்ற ஈசுவரன், வைசுவாநரன் என்றும்,
இந்த இரு வகைக்கும் அதிஷ்டாந சைதந்யம் பிரஹ்மா
என்றும், சொல்லப்படும். சூக்ஷ்ம பூதங்கள் ஐந்தும்,
அந்தப் பூதங்களிலே தோன்றிய சூக்ஷ்ம சரீர சமஷ்டியுங்
கூடி, ஈசுவர சூக்ஷ்ம சரீரம் என்றும், இரண்ய கர்ப்பம்
என்றும் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பநா
வஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுவரன், சூத்திராத்மா
என்றும், இந்த இரு வகைக்கும் அதிஷ்டாந சைதந்யம்,
விஷ்ணு என்றும் சொல்லப்படும். இந்தத் தூலம் சூக்ஷ்மம்
இரண்டின் வாசனையுடனே கூடி யிருக்கின்ற மாயை,
ஈசுவர காரண சரீரம் என்றும், அவ்யாகிருதம் என்றும்,
சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தி யவஸ்தை
யைப் பொருந்துகின்ற ஈசுவரன், அந்தரியாமி என்றும்,
இந்த இரு வகைக்கும் அதிஷ்டாந சைதந்யம், உருத்திரன்
என்றும் சொல்லப்படும். சீவன் தன் மூன் றவஸ்தை
களிலும், தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற இரு பத்
தேழு தத்துவங்களுடனும், "நான்" என்று கலந்து
நிற்கின்றது போல, ஈசுவரனும், தன் மூன் றவஸ்தை
களிலும், தன் மூன்று சரீரங்களா யிருக்கின்ற, முப் பத்
திரண்டு தத்துவங்களுடனும் கலந்து நிற்பன். ஆகையி
னாலே, சீவ சிதாபாசன் தன் சரீர மாத்திரமே கலந்து
நிற்பன். ஈசுவரன், தன் சரீரம் ஆகிய சகல சரீரங்க
ளோடும், சகல பிரபஞ்சங்க ளோடும், கலந்து நிற்பன்.
இந்த இரு வகைக்கும் சாக்ஷியா யிருக்கின்ற பிரஹ்ம



சைதந்யமும், சகல சரீரங்களிலும், சகல பிரபஞ்சங்களி
லும், நிறைந்து அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிர
மித்து எல்லையற் றிருக்கும்.

(இ—ள்.) "இனி, ஈசுவரனுக்கு மூன்று சரீரங்களும்,
மூன்று அவஸ்தைகளும் சொல்லும்படி" என்பது அவதாரிகை
யாகும். ஜீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவஸ்தைகளும்
இருப்பன போல, ஈசுவரனுக்கும் ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்
களும், ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யவஸ்தைகளும் இருக்கின்றன
என்று கூறப்படுகின்றன என்பது பொரு ளாம். கற்பிதப்
பிரபஞ்ச வடிவ மாகத் தோற்றுகின்ற - மித்தை யாகக் காரிய
சொருப மாக விளங்குகின்ற, தூல பஞ்ச பூதங்களும் - பஞ்சீகிருத
பஞ்ச மகா பூதங்களும், மூன்று சாதியா யிருக்கின்ற - உத்தம -
மத்திம - அதம சாதியா யிருக்கின்ற, தூல சரீர சமஷ்டியும் -
எல்லாத் தூல உடம்புகளும், ஈசுவர தூல சரீரம் - "எல்லாவற்றை
யும் தன் வயம் உடையவன்" என்னும் ஈசுவரனது பருத்த ஆக்கை,
விராட் - பெரிது, என்றும் சொல்லப்படும் - எனவும் (சாஸ்திரங்
களில் நாமம்) கூறப்படும்.

ஈசுவரனுக்கும், ஜீவர்கட்குப் போன்று சரீரம் உண்டா
என்னும் சங்கை உண்டாயின், சரீரம் உண்டு என்றே கொள்ளல்
வேண்டும்.

வேதாந்த சூடாமணி - திருக்கு விவேகம் 38-வது கவியில்,

"............ தூலவா கத்துச் சமட்டியா கியவபி மாநி,
விரிவுறும் வைசுவா நரனெனன் முதலா விராட்புரு டன்பெய
ராகும்." எனக் கூறியபடி, தூல சரீர சமஷ்டி யில்லாவிட்டால்,
அவருக்கு சமஷ்டி ஸ்தூல சரீர அபிமாநி என்னும் பெயர் வர
நியாயம் இல்லை. (எ-று).

ஈசுவரனது சரீரம் நின்மல மான மாயா காரியம் என்றும், ஜீவர்களது சரீரம், மலிந மான அவித்தியா காரியம் என்றும் விவேகித்து உணர்க.

[ஜீவனது, ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர ஜீவ சாக்ஷி வியவகார பஞ்சகங்களும், ஈசுவரனது, ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர ஈசுவர பிரஹ்ம வியவகார பஞ்சகங்களும், இந்திரிய வியவகாரமும், மநோ ராஜ்ஜிய வியவகாரமும், (4-12) கூறப்படுகின்றது.]

[நான்கு வகை, பன் னிரண்டு வியவகாரம் விளம்பல்.]

(மூலம்)

ஜீவனுக்குத், தூல சரீர வியவகாரத்திற்கு, அந்ந மயம் ஆன சட் கோச தத்துவங்கள் 6. சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20. ஜீவன் ஈசுவரன் அவித்தை வித்தை பிரஹ்மம் 5. ஆகத் தத்துவங்கள் 31. சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்கு, சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20. ஜீவன் ஈசுவரன் அவித்தை வித்தை பிரஹ்மம் 5. ஆகத் தத்துவங் கள் 25. காரண சரீர வியவகாரத்திற்கு, ஜீவன் ஈசுவரன் அவித்தை வித்தை பிரஹ்மம் 5. ஜீவ வியவகாரத்திற்கு, ஜீவன் ஈசுவரன் பிரஹ்மம் 3. சாக்ஷி வியவகாரத்திற்குச், சாக்ஷி 1.

ஈசுவரனுக்குத், தூல சரீர வியவகாரத்திற்குச், சமஷ்டி அந்ந மய கோச தத்துவங்கள் 6. சமஷ்டி சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20. சமஷ்டி ஜீவன் அவித்தை 2. ஈசுவரன் வித்தை பிரஹ்மம் 3. ஸ்தூல பூதங்கள் 5.



ஆகத் தத்துவங்கள் 36. சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்குச், சமஷ்டி சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20. சமஷ்டி ஜீவன் அவித்தை 2. சூக்ஷ்ம பூதங்கள் 5. வித்தை ஈசுவரன் பிரஹ்மம் 3. ஆகத் தத்துவங்கள் 30. காரண சரீர வியவகாரத்திற்கு, வித்தை ஈசுவரன் பிரஹ்மம் 3. ஈசுவர வியவகாரத்திற்கு, ஈசுவரன் பிரஹ்மம் 2. பிரஹ்ம வியவ காரத்திற்குப், பிரஹ்மம் 1.

இந்திரிய வியவகாரத்திற்கு, இந்திரியம் 1. ஷட் கோச தத்துவங்கள் 6. அந்தக் கரணம் 5. வாயு 5. ஜீவன் ஈசுவரன் அவித்தை வித்தை பிரஹ்மம் 5. ஆகத் தத்துவங்கள் 22.

மநோ ராஜ்ஜிய வியவகாரத்திற்கு, அந்தக் கரணம் 5. ஜீவன் ஈசுவரன் அவித்தை வித்தை பிரஹ்மம் 5. ஆகத் தத்துவங்கள் 10.

[இப்படித் தத்துவங்களி னுடைய தோற்றமும், நிலையும், சொல்லப்பட்டன.]

(இ—ள்.) தூல சரீர வியவகாரத்திற்கு - தூல சரீர (வியவ கார மாகிய சாக்கிர) வியவகாரத்திற்கு, 36 தத்துவங்க ளாகும். சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்கு - சூக்ஷ்ம சரீர (வியவகார மாகிய ஸ்வப்ந) வியவகாரத்திற்கு, 25 தத்துவங்கள் ஆகும். காரண சரீர வியவகாரத்திற்கு - காரண சரீர (வியவகார மாகிய சுழுத்தி) வியவ காரத்திற்கு, 3 தத்துவங்க ளாகும். ஈசுவர வியவகாரத்திற்கு - ஈசுவர (துரிய) வியவகாரத்திற்கு, 2 தத்துவங்க ளாகும். பிரஹ்ம வியவகாரத்திற்கு - ஈசுவர (துரியாதீத) வியவகாரத்திற்கு, 1 தத்து வம் ஆகும்.

இந்திரிய வியவகாரத்திற்கு - (ஜாக்கிர அவஸ்தையில்), ஓர் இந்திரியம் தொழில் செய்யும் வியவகாரத்திற்கு, 22 தத்துவங்கள் ஆகும். மனோ ராஜ்ஜிய வியவகாரத்திற்கு - (ஜாக்கிர அவஸ்தையில், உண்டாம்) மனோ ராஜ்ஜிய வியவகாரத்திற்கு, 10 தத்துவங்கள் ஆகும். இவ் வாறு, 36, 25, 3, 2, 1, 22, 10, என எழு பிரிவாக, அவஸ்தைகளும், தத்துவங்களும், இருக்கும்.

"அந்ந மயம் ஆன சட் கோச தத்துவங்கள்" என்றது. கோசம் - உறை (மறைப்பு) ஆம். 1. சருமம், உதிரத்தையும், 2. உதிரம், மாமிசத்தையும், 3. மாமிசம், சநாயுவையும், 4. சநாயு, அஸ்தியையும், 5. அஸ்தி, மஜ்ஜையையும், 6. மஜ்ஜை, (வீரிய மாகிய) சுக்ல சோணிதத்தையும், மறைத்திருத்தலின், கோச மாம், அறு ஆறும். (எ-று).

[உத்பத்தியும், ஸ்திதியும், கூறி, இப் போது லயம் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இனித், தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழி சொல்லுகின்றேம். சகல சீவ ரிடத்திலும் இருக்கின்ற தூல சரீரங்கள் அனைத்தும், தமக்கு ஆதாரம் ஆன தூல பூதங்களிலே மடிந்து பூதம் மாத்திரம் ஆக ஒடுங்கும். இந்தத் தூல பூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத் தம் மாத்திரைகள் ஆன தமோ குண பூதங்க ளாக மிஞ்சும். அப் போது, கேவலம் இரண்ய கர்ப்பாவஸ்தை என்று சொல்லப்படும். சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் இரு பதும், கட்டு விட்டுப், பூதங்களி னுடைய சத்துவ குணமும், ரஜோ குணமும் ஆக ஒடுங்கும். அஃ தெங்ஙனம் எனின்:- சகல பிராணிகளிடத்திலும் இருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதாந வாயுவும், உபஸ்தேந்திரியமும், பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்குவையும், சமாநனும், பாயுருவும், அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபாநனும், பாதமும், அக்நியில் ஒடுங்கும். மநதும், தொக்கும், பிராணனும், பாணியும், வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோத்திரமும், வியாநனும், வாக்கும், ஆகாசத்தில் ஒடுங்கும். அப் போது, பழையபடி முக் குண பூதங்கள் ஆகும். இந்தச் சூக்ஷ்ம பூதங்களும், பிருதிவி, அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியில் சுவறி ஒடுங்கும். அக்கினியும், வாயுவில் விளக்குப் போல அணைந்து ஒடுங்கும். வாயுவும், ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும் விக்ஷேப சத்தியில் ஒடுங்கும். ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும், மூலப் பிரகிருதியின் தமோ குண மாத்திரம் ஆய், ஆல மரம் ஆலம் விரையில் ஒடுங்கினாற் போல, இன்னும் ஒரு சிருஷ்டிக்கு வித் தாக, மாயையிலும், அவித்தையிலும் ஒடுங்கும். இந்த மாயையும், அவித்தையும், அதி நுண்மை ஆன மூலப் பிரகிருதி என்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம் பென்கின்ற பெயர் போய்ப் பழுதையாகக் கண்டாற் போலத், தனக்கு அதிஷ்டாந சைதந்யம் ஆன பிரஹ்ம சைதந்யம் மாத்திரம் ஆக ஒடுங்கும்.

இப்படிப் பொய் யெல்லாம் மெய்ப் பொருள் ஒன் றாகக் கண்டு, அதுவே சுபாவ சித்தம் ஆய், நிசம் ஆய் இருக்கின்ற தன் வடிவு எனக் கண்டு தெளிந்து, கவலை கெட்டிருக்கின்றவனே சீவன் முத்தன்.

[இப்படித் தத்துவங்களின் ஒடுக்கம் சொல்லப்பட்டது.]

(இ—ள்.) "இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழி சொல்லுகின்றோம்" என்பது அவதாரிகை யாகும். தத்துவங் களின் உத்பத்தி (தோற்றம்) ஸ்திதியி (நிலைபெறுதலி) ன், பின்னர், லயப்படுகின்ற (ஒடுங்குகின்ற) முறைமையைக் கூறுகின்றோம் என்பது பொரு ளாம்.

உத்பத்திக் கிரமத்திற்கு விபரீதக் கிரமம் லயக் கிரம மாம். உத்பத்திக் கிரமம், மேல் இருந்து கீழ் இறங்குவ (அவரோஹணம்) தாம். லயக் கிரமம், கீழ் இருந்து மேல் ஏறுவ தாகும். (ஆரோஹணம் ஆம்.) அதாவது, ஒரு மரத்தின் மீது இருந்து கீழே (அவரோஹணம்) இறங்கிப், பின், அம் மரத்தின் மேல் ஏறிப் போவதை (ஆரோஹணம்) ஒக்கும்.

லயக் கிரமம்:— 1. ஸ்தூல சரீரங்கள் யாவும் ஸ்தூல பூத மாக ஒடுங்கும். 2. ஸ்தூல பூதம் பஞ்சீகாணம் விட்டுத் தமோ குண சூக்ஷ்ம பூதம் ஆகும். 3. சூக்ஷ்ம சரீரங்கள் சேர்க்கை நீங்கிச் சூக்ஷ்ம பூதங்களின் சத்துவ குண ரஜோ குணம் ஆக ஆகும். 4. அதன் பின்னர்; பூதங்களின் தமோ குண ரஜோ குண சத்துவ குண ரூப, முக் குண பூதங்க ளாகும். 5. சூக்ஷ்மப் பிருதிவி பூதம், அப்புவில் ஆகும். 6. அப்பு பூதம், அக்கினியில் ஆகும். 7. அக்கினி பூதம், வாயுவில் ஆகும். 8. வாயு பூதம், ஆகாயத் தில் ஆகும். 9. ஆகாயம் விக்ஷேப சத்தியில், ஆகும். 10. ஆவரண சத்தியும், விக்ஷேப சத்தியும், மூலப் பிரகிருதியின் தமோ குண ரூபம் அடையாமல், மூலப் பிரகிருதியின் சத்துவ குண ரூப மாயையிலும், மூலப் பிரகிருதியின் ரஜோ குண ரூப அவித்தை யிலும், உத்பத்திக் கிரமம் மாறி ஆகும். 11. மாயை யாகிய மூலப் பிரகிருதியின் சத்துவ குணமும், அவித்தை யாகிய மூலப் பிரகிருதியின் ரஜோ குணமும், மூலப் பிரகிருதி, ஆகும். 12. மூலப் பிரகிருதி, பிரஹ்மத்தில் லயம் ஆகும். இவ் வாறு பன் னிரண்டு வித மாக லயம் அடைகின்றது என்று உணர்க.



மூலப் பிரகிருதிக்கு, பிந்து தத்துவம் என்றும், பிரஹ்மத் திற்கு நாத தத்துவம் என்றும் பெயர். பிந்து - மெய் - வியஞ் சநம் - ஹல் என்பன ஒரு பொருளை உணர்த்தும் சொற்கள். நாதம் - உயிர் - ஸ்வரம் - அச்சு என்பன ஒரு பொருளை உணர்த்தும் சொற்கள்.

ஆவரண சத்தி விக்ஷேப சத்தி யாகிய இரண்டும், மூலப் பிரகிருதியின் தமோ குணப் பிரிவா யிருக்கப், பிரிந்தவை ஒன்று கூடி, மூலப் பிரகிருதியின் தமோ குணம் ஆகாமல், மூலப் பிரகிருதி யின் சத்துவ குண, ரஜோ குண ரூப, மாயையிலும், அவித்தை யிலும், ஒடுங்கியதற்குக் காரணம், "ஆல மரம் ஆலம் விரையில் ஒடுங்கினாற் போல, 'இன்னும் ஒரு சிருஷ்டிக்கு வித் தாக" என்று (காரணம்), கூறுகின்றார். ஆல மரம் ஆகிய காரியம், தன் காரணம் ஆகிய ஆலம் விரையில் லயப்படுவது, எப்படி மீண்டும் உத்பத்திக்குக் காரணம் ஆகின்றதோ, அங்ஙனமே, கர்மம் - வாசனை என்னும் இரண்டுடன் கூடிய மூலப் பிரகிருதியின் தமோ குண ரூப ஆவரணம் விக்ஷேபம் என்னும் இரண்டும், பரம்பரைக் காரண மான மூலப் பிரகிருதியின் சத்துவ குணத்திலும், ரஜோ குணத்திலும் ஒடுங்கியது, ஜீவர்களின் பாப புண்ணிய பரிபாகத் தால், போகம் - போக்கியம் - போகாயதநம் மீண்டும் உண்டா வதற் காம்.

(இ—ள்.) பிந்துவும் - மூலப் பிரகிருதியும், பாம்பு என்கின்ற பெயர் போய்ப் பழுதை ஆய் கண்டால் போல - (ஆரோப மாகிய) பாம்பு என்னும் நாமம் நீங்கி (அதிஷ்டாநம் ஆகிய) கயிறு என்று பார்ப்பது போன்று, தனக்கு - மாயைக்கு, அதிஷ்டாநம் ஆன - (அத்யாச) அதிஷ்டாநம் ஆன, பிரஹ்ம சைதந்யம் மாத்திரம் ஆக ஒடுங்கும் - பிரஹ்ம சைதந்ய மாத்திரம் ஆக லீநம் ஆம், அதாவது லயப்படும் - நிவிர்த்தி யாம். (எ-று).

நிவிர்த்தி - லய ரூபம் என்றும், அத்தியந்தம் என்றும் இரு வகைப்படும். சாம்சாரிக ஜீவர்கட்கு லய ரூப நிவிர்த்தியும், ஞானிக்கு அத்தியந்த நிவிர்த்தியும் ஆகும். "இப்படிப் பொய்யெல்லாம் மெய்ப் பொருள் ஒன்ருகக் கண்டு அதுவே சுபாவ சித்தம் ஆய், நிசம் ஆய் இருக்கின்ற தன் வடிவு எனக் கண்டு" என்பது ஞானியின் அத்தியந்த நிவிர்த்தி ரூப அநுபவத்தைக் கூறுவதாகும்.

(இ—ள்.) பொய் எல்லாம் - மாயை மாயையின் காரியங்கள் அனைத்தும் மித்தை, மெய்ப் பொருள் ஒன்று ஆக - சத்ய வஸ்துவான பிரஹ்மம் ஒன்றே இருப்பது ஆக, கண்டு - (அபரோக்ஷம் ஆக) அறிந்து, அதுவே - காரியம் மித்தை, காரணம் சத்தியம் என்பதுவே, சுபாவ சித்தம் ஆய் - (செயற்கை இன்றி,) இயற்கையாக உள்ளது ஆய், நிசம் ஆய் - உண்மை ஆய், இருக்கின்ற தன் வடிவு என - உள்ள ஆத்மாவின் ஸ்வரூபம் என்று, கண்டு - (அநுபூதி ரூப அபரோக்ஷ ஞானத்தால்) உணர்ந்து, தெளிந்து - (பஞ்சப் பிராந்தியாகிய மயக்கம்) நீங்கி, கவலை கெட்டு - (பஞ்சக்) கிலேசங்களும் நாசம் ஆய், இருக்கின்றவனே - உள்ள ஞானியே, ஜீவன் முத்தன் - ஜீவித்துக் கொண்டிருக்கும் போதே அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூபம் ஆனவன் ஆவன், (எ-று).

பிந்து வாகிய மூலப் பிரகிருதி ரூப ஜகத்து அதிஷ்டாநத்தில் ஒடுங்கல் தேஜோ பிந்து உபநிஷத்தில் 6-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றது. 71-வது மந்திர முதல் 104-வது வரை உள்ள மந்திரங்களைக் கூர்ந்து நோக்குக.

சுபால உபநிஷத் இரண்டாவது காண்டம்.

"सोऽन्ते वैश्वानरो भूत्वा संदग्ध्वा सर्वाणि भूतानि पृथिव्यप्सु प्रलीयत आपस्तेजसि प्रलीयन्ते तेजोवायौ विलीयते वायुराकाशे विलीयत आकाशमिन्द्रियेष्विन्द्रियाणि तन्मात्रेषु तन्मात्राणि भूतादौ विलीयन्ते



भूतादिर्महति विलीयते महानव्यक्ते विलीयतेऽव्यक्तमक्षरे विलीयते अक्षरं तमसि विलीयते तमः परे देव एकी भवति परस्तान्न सन्नासन्नासदसदित्ये तन्निर्वाणानुशासनमिति वेदानुशासनमिति वेदानुशासनम् ॥"

அது முடிவில் வைசுவாநரன் ஆய் எல்லாப் பூதங்களையும் நன்கு தகித்து, பிருதிவி அப்புவில் லயம் அடைகின்றது. ஜலங்கள் அக்கினியில் லயம் அடைகின்றன. அக்கினி வாயுவில் லயம் அடைகின்றது. வாயு ஆகாயத்தில் லயம் அடைகின்றது. ஆகாசம் இந்திரியங்களில் (லயம் அடைகின்றது). இந்திரியங்கள் தந் மாத்திரைகளில் (லயம் அடைகின்றன). தந் மாத்திரைகள் பூத ஆதியில் லயம் அடைகின்றன. பூத ஆதி மஹத் (தத்வத்) தில் லயம் அடைகின்றது மகாந் அவ்யக்தத்தில் லயம் அடைகின்றது. அவ்யக்தம் அக்ஷரத்தில் லயம் அடைகின்றது. அக்ஷரம் தமசில் லயம் அடைகின்றது. தமம் பர தேவனிடத்தில் ஒன்ருக ஆகின்றது. பரத்தைப் பார்க்கிலும் சத்தும் இன்று, அசத்தும் இன்று, சதசத்தும் இன்று, என இது நிர்வாண அநுசாசநம் ஆம் என. வேத அநுசாசநம் என. வேத அநுசாசநம்." எனச் சுபால உபநிஷத் இரண்டாவது காண்டம் கூறும் லயக் கிரமத்தைக் கூர்ந்து நோக்கிஞல் விளங்கும்.

பூத ஆதி மகத் தத்வம் என்பன இந் நூலுக்கு வேற்றுமையாம். அஞ்ஞாநம் பரத்தில் ஒன்ருகுதல், பாத சமாநாதிகரணத்திலேயாம். இரண்டும் சம்யோகித்து இருப்பதுவே ஒன்ருதல் என்று கூறுவாராயின், காலாந்தரத்தில் இரண்டற்கும் விபாகம் உண்டாம், அப் போது மோக்ஷ காலத்திலும் சரீரத் திரயங்களும் வேறு வேருகவே இருக்கின்றன எனக் கொள்ளல் நேரும். காரண சக்தியை நித்திய மெனக் கொள்ளுங் கருத்தால் பிரவிருத்தித்துக் காரிய சரீரங்கள் நித்திய மெனக் கொள்ளக் கிடக்கின்றது. இது தர்க்கம் ஆம். அதாவது, அநிஷ்ட சம்பாதநம் ஆம். தனக்கு நித்தியம் என ஒப்ப இஷ்டம் இல்லாத காரிய சரீரங்களையும், வேறு

கதி இன்றி ஒப்ப வேண்டுவ தாயிற்று. இது நுண் ணறி வுடையோர் கூற் றன்றாம்.

பஞ்சப் பிராந்தி யாவது. (சிவ ஞாந வள்ளலார் அதி ரகசியம்.)

"நித்தனன் றுரைத்த வாக்கியப் படியே
நிகழ்த்துவன் பிராந்தியைந் தினையுஞ்,
சத்திய மிந்தச் சகமெனல் கருவி
தணந்திடா துடலோநா னென்னல்,
கத்தபோக் தாவுந் தானெனல் தானுங்
கடவுளும் வேறெனக் கருதல்,
சித்துரு வாகி யிருந்துநா னுகேன்
சிவனெனல் சிதடர்பா லறியே." (என)

ஜகத் - சத்தியம், தேகம் - ஆத்மா, நான், கர்த்தா - போக்தா, சீவனும், சிவனும், வேறே - சித் ரூப நான், சிவன் ஆகேன், என்பன பஞ்சப் பிராந்திகள் ஆம்.

பிராந்தி ஐந்து, அந்ந பூர்ணு உபநிஷத் 1-வது அத்தியாயம் 13, 14, 15 மூன்று சுலோகங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

அந்ந பூர்ணு உபநிஷத் 13, 14, 15 மூன்று மந்திரங்கள்.

"भ्रमः पञ्चविधो भाति तदेवेह समुच्यते ।
जीवेश्वौ भिन्नरूपाविति प्राथमिको भ्रमः ॥१३॥"

"பிராந்தி ஐந்து வித மாக விளங்குகின்றது. அதுவே ஈண்டு கூறப்படுகின்றது. ஜீவ ஈசுவரர் வெவ் வேறு ஸ்ரூபர் என்பது முதற் பிராந்தி யாம்." (13) என்றும்,

"आत्मनष्टं कर्तृगुणं वास्तवं वा द्वितीयकः ।
शरीरत्रयसंयुक्तजीवः सङ्गी तृतीयकः ॥१४॥"



"ஆத்மா நஷ்ட மாயிற்று. கர்த்தா குணம் வாஸ்தவம் (என்பது) இரண்டாவ தாம். மூன்று சரீரங்களோடு கூடிய ஜீவன் சங்கி (என்பது) மூன்றுவ தாம்." (14) என்றும்,

"जगत्कारणरूपस्य विकारित्वं चतुर्थकः ।
कारणाद्भिन्नजगतः सत्यत्वं पञ्चमो भ्रमः ॥१५॥"

"ஜகத் காரணத்துக்கு விகாரித் தன்மை நான் காவ தாம். காரணத்தினின்றும் வேறு பட்ட ஜகத்திற்குச் சத்தியத் தன்மை ஐந் தாவது பிராந்தி யாம்." (15) என்றும்,

ஐந்து பிராந்திகளை அந்நபூர்ணு உபநிஷத் கூறுகின்றது.

அந்ந பூர்ணு உபநிஷத் 1-வது அத்தியாயம், 15-வது மந்திரம். பிராந்தி நிவிர்த்தியைக் கூறுகின்றது.

"पञ्चभ्रमनिवृत्तिश्च तदा स्फुरति चेतसि ।
बिम्बप्रतिबिम्बदर्शनेन भेदभ्रमो निवृत्तः ॥१५॥"

"ஐந்து பிர்ாந்திகளின் நிவிருத்தியும் அப் போது சித்தத்தில் தோற்றுகின்றது. பிம்பப் பிரதிபிம்ப (நியாய) த்தைப் பார்த்த லினல், பேதப் பிராந்தி நிவிர்த்தி ஆகின்றது." (15) எனவும்,

"स्फटिकलोहितदर्शनेन पारमार्थिककर्तृत्वभ्रमो निवृत्तः ।
घटमटाकाशदर्शनेन सङ्गीति भ्रमो निवृत्तः ॥१५॥"

"ஸ்படிகச் சிவப்பைப் பார்த்தலினல், பாரமார்த்திக கர்த்திருத்துவப் பிராந்தி நிவிர்த்தி ஆகின்றது. கட மட ஆகாசத்தைப் பார்த்தலினல், சங்கி என்னும் பிராந்தி நிவிர்த்தி ஆகின்றது." (15) எனவும்,

" रज्जुसर्पदर्शनेन कारणाद्भिन्नजगतः सत्यत्वभ्रमो निवृत्तः ।
कनकरुचकदर्शनेन विकारित्वभ्रमो निवृत्तः ॥१५॥ "

" ரஜ்ஜு சர்ப்பத்தினைப் பார்த்தலினால், காரணத்தினின்றும் வேறான சகத்தின் சத்தியத் தன்மைப் பிராந்தி நிவிருத்தியாகின்றது. தங்கம் சைன் அட்டிகையைப் பார்த்தலினால், விகாரித் தன்மைப் பிராந்தி நிவிருத்தி ஆகின்றது." (15) என்றும்,

அந்த பூர்ண உபநிஷத்திலேயே, ஐ வகைப் பிராந்தியின் நிவிர்த்தியும், திருஷ்டாந்த வாயிலாகக் கூறப்பட்டிருக்கின்றது என்பதையும் உணர்ந்து கொள்ளல் தகுதி யாம்.

பஞ்சக் கிலேசம் ஆவது:—

அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம் ஆம்.

1. அவித்தை:— அநித்ய மான தேகாதிகளில், நித்தியம் என்றும், அசுத்த மான சரீராதிகளில், சுத்தம் என்றும், துக்கங்களான விஷய போகங்களில், சுகம் என்றும், அநாத்மாக்களான தேகாதிகளில், ஆத்மா என்றும், பாப கார்யங்களில், புண்ணியம் என்றும், அநர்த்தத்தில், அர்த்தம் என்றும், உண்டாம், அவிவேக ரூப மான அத்தியாசமே அவித்தை ஆகும்.

2. அஸ்மிதை:— சேதந ஞான புருஷனையும், சட மான அந்தக் கரணத்தையும், பிரித்து அறியாமல், இரண்டையும் ஒன்றாக அபிமானிப்பதே அஸ்மிதை எனப்படும். பிரஹ்ம வித்துக்கள் இதனை ஹிருதயக் கிரந்தி என்பர். ஸ்மிதா - சந்தோஷம் - விவேகம் - அஸ்மிதா துக்கம் அவிவேக மாம்.

3. ராகம்:— சுகத்தை அநுபவித்தவனுக்குச், சுக சாதநங்களில் உண்டாகும் விருப்பமே ராகம் ஆம்.



4. துவேஷம்:— துக்கத்தினை அநுபவித்தவனுக்குத், துக்க சாதநங்களில் உண்டாகும் வெறுப்பே துவேஷம் ஆம்.

5. அபிநிவேசம்:— " எனக்கு மரணம் வரக் கூடாது, நான் உயிருடனேயே யிருக்கவேண்டும் " எனச் சகல ஜீவர்கட்கும் தொடர்ந்து விளங்கும் அபிமானமே அபிநிவேசம் ஆம்.

இவற்றினை " தமம் - மோஹம் - மஹா மோஹம் - தாமிசிரம் - அந்த தாமிசிரம் " எனவும் பாதஞ்சலர் கூறுவர். (எ-று).

[முடிந்தது முடித்தல் என்னும் யுக்தியால், தத்துவங்களின் உத்பத்தி லயம் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இப்படித், தோற்றி ஒடுங்கின தத்துவங்கள் 36. அவை யாவன:-பூதங்கள் 5, ஸ்தூல சரீர தத்துவங்கள் 6, சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20, காரண சரீரம் ஆன மாயை, அவித்தை 2, இவற்றில் பிரதிவிம்பித்த சீவன், ஈசுரன் 2, இவைகட்கெல்லாம் அதிஷ்டாந சைதந்ய மாயிருக்கின்ற பிரஹ்மம் 1 இவை யாம். இவைகளில், பூதங்கள் 5. மாயை 1. மாயாப் பிரதிவிம்பர் ஆன ஈசுரன் 1. பிரஹ்மம் 1 ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்கும் சமுதாயம் ஆக அநுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்குப் பிருதக்கு ஆக அநுபவிக்கப்படும். அஃதெங்ஙனம் எனில், பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில், எல்லாருக்கும் ஆதாரம் இல்லை. மழை மறுக்கில், எல்லாருக்கும் சலம் இல்லை. தேயு இல்லாதிருந்தால், பாகம் இல்லை. வாடை தென்றல்

இல்லாவிட்டால், வாயு இயக்கம் இல்லை. ஆகாசம் இறக்கில், ஒருவருக்கும் அவகாசம் இல்லை. மாயையும், மாயாப் பிரதிவிம்பரும், இறக்கில், சகல சமயங்களுக்கும் தெய்வம் இல்லை. பிரஹ்மம் இல்லையோ, ஒருவருக்கும் அறிவில்லை; ஆகையால், இந்த எட்டும் எல்லாருக்கும் சமுதாயம் ஆம். பிருதக்கு எங்ஙனம் எனின், ஒருவனுக்குத் தூல சரீரம் இறக்கில், எல்லாருக்கும் ஸ்தூல சரீரம் இறவாதபடியினும், சூக்ஷ்ம சரீரத்தில், ஒருவனுக்கு அங்க வைகல்யம் வந்தால், எல்லாருக்கும் வாராதபடியினும், முத்தரா யிருந்த சுகர் வாம தேவர் முதலியோருக்கு, அவித்தையும், சீவனும், இறந்து போயிருக்க, மற்றையோருக் கெல்லாம் அவித்தையும், சீவனும், இறவாதபடியினும், இந்த இரு பத் தெட்டுத் தத்துவங்களும், அவன் அவனுக்குப் பிருதக் கென்பதிலே சந்தேகமே யில்லை.

(இ—ள்.) இப்படி - இவ்வாறு, தோற்றி ஒடுங்கின தத்துவங்கள் 36. — தோற்றினதும், ஒடுங்கினதும் ஆன தத்துவங்கள் 35 ஆகும். பிரஹ்மத்தைச் சேர்த்துக் கூறியது தத்துவங்களின் எண்ணிக்கைக்கே அன்றி வே றல்ல. பிரஹ்மம் தோற்றுவதும் இல்லை; ஒடுங்குவதும் இல்லை. பிரஹ்ம அதிஷ்டானத்தில், ஆரோபரூப 35 தத்துவங்களும், தோற்றமும், ஒடுக்கமும் உடையன ஆம். இவைகளில் - கூறிய 36 தத்துவங்களில், தத்துவங்கள் 36ல், சமுதாய (பொது) தத்துவம் என்றும், பிருதக் (தனி) தத்துவம் என்றும், தத்துவங்கள் இரு வகையாக இருக்கின்றன. சமுதாய தத்துவம் எட்டும், பிருதக் தத்துவம் இரு பத் தெட்டும் ஆகும். [சமுதாய தத்துவத்தையும், பிருதக் தத்துவத்தையும் வியதிரேக முகத்தான் விளக்குகின்றார்.] "பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில்"— என்பன வாதியாகவும், "ஒருவனுக்குத் தூல சரீரம் இறக்கில்"—



என்பன வாதியாகவும் உள்ள வாக்கியங்களால். ஒருவனுக்குத் தூல சரீரம் இறக்கில் — என்பது — தூல சரீரம் இறத்தற்கு அறி குறி என்ன என்றால், சரீரத்தில் மடிப்புக்கள் உண்டாயின், பிருதிவி பூத அம்ச சக்தியும், நரை உண்டாயின், அப்பு பூத அம்ச சக்தியும், அழகு குறையின், அக்கி பூத அம்ச சக்தியும், நடுக்கம் உண்டாகுமாயின், வாயு பூத அம்ச சக்தியும், சரீரம் ஜீவியாது மரிக்கும் ஆயின், ஆகாச பூத அம்ச சக்தியும் குறைந் திருப்பதால், இதனைக் கொண்டு மரணம் வரும் என அறிய லாம் என்பது அறிகுறி யாம்.

இவ் வாறு, வராக உபநிஷத் ஐந் தாவது அத்தியாயம் 4-வது, 5-வது மந்திரங்கள் (கூறுகின்றன).

" சரீரத்தில், பிருதிவி மண்டலம் குறைந்தால், மடிப்புக்கள் உண்டாகின்றன. ஜல பாகம் குறைந்தால், கிரம மாக நரை உண்டாகின்றது. அக்கினி பாகம் குறைந்தால், பசியும், காந்தியும், குறைகிறது. வாயு பாகம் குறைந்தால், சதா நடுக்கம் உண்டாகின்றது. ஆகாச பாகம் குறைந்தால், ஜீவித்திருக்கிற தில்லை" எனக் கூறுகின்றது.

இந் நூலில் கூறும் முப் பத் தாறு தத்துவங்கள் ஒரு வகையாகும்.

தத்துவங்கள்:— இரு பத்து நான்கு, இரு பத் தெட்டு, முப் பத் தாறு, தொண் ணூற்று ஆறு, என்று பல வகை யாகக் கூறுகின்றார்கள்.

## 24 தத்துவங்கள்.

1. ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, பிராணாதிகள் ஐந்து, சப்தாதிகள் ஐந்து, மன ஆதி நான்கு ஆகிய இவை வேதாந்தி ஏகதேசி கொண்ட இரு பத்து நான்கு தத்துவங்க ளாம்.

### 28 தத்துவங்கள்.

2. தத்துவ போதத்தில், இருபத்தெட்டுத் தத்துவம் கூறியிருக்கிறது, தூல சரீரம் ஆறு தத்துவம், ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, பிராணன் முதலிய வாயுக்கள் ஐந்து, மனம் ஒன்று, புத்தி ஒன்று. ஆகச் சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் பதினேழு, காரண சரீர தத்துவம் மாயை ஒன்று, அவித்தை ஒன்று, ஜீவன் ஈசுவரன் கூடஸ்தன் மூன்று, ஆகிய இவை வேதாந்திகள் கொண்ட இருபத்தெட்டுத் தத்துவங்களாம்.

### 36 தத்துவங்கள்.

3. ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, பிராணன் முதலியன ஐந்து, சப்தம் முதலியன ஐந்து, மனம் முதலியன நான்கு, பஞ்சீகிருத பூதம் ஐந்து, அவஸ்தை மூன்று, சரீரம் மூன்று, ஜீவன் ஒன்று ஆகிய இவை சைவர் கொண்ட முப்பத்தாறு தத்துவங்களாம்.

### 96 தத்துவங்கள்.

4. ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, பிராணன் முதலியன ஐந்து, சப்தம் முதலியன ஐந்து, மனம் முதலியன நான்கு, பஞ்சீகிருத பூதம் ஐந்து, அவஸ்தை மூன்று, சரீரம் மூன்று, அஞ்ஞானம் ஒன்று, பாவ விகாரம் ஆறு, ஊர்மி ஆறு, கோசம் ஆறு, சத்ரு வர்க்கம் ஆறு, ஜகத் மூன்று, குணம் மூன்று, கர்மம் மூன்று, வசனம் முதலியன ஐந்து, சங்கற்பம் முதலியன நான்கு, மைத்திரி முதலியன நான்கு, திக்கு வாயு சூரியன் முதலிய அதிஷ்டான தேவதை பதினான்கு ஆகிய இவை, சேசுவர சாங்கியர் கொண்ட தொண்ணூற்றாறு தத்துவங்களாம்.



வராஹ உபநிஷத்தின், முதலாவது அத்தியாயம், 1-வது மந்திரம் முதல் 14-வது மந்திரம் வரை; 24 - 36 - 96 தத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவை அடியில் வரும் ஆறு:—

चतुर्विंशंति तत्वानि केचिदिच्छन्ति वादिनः ।
केचित्षट्त्रिंशत्तत्त्वानि केचित्षण्णवतीनि च ॥१॥

तेषां क्रमं प्रवक्ष्यामि सावधानमनाः शृणु ।
ज्ञानेन्द्रियाणि पञ्चैव श्रोत्रत्वग्लोचनादयः ॥२॥

कर्मेन्द्रियाणि पञ्चैव वाक्पाण्यङ्घ्रयादयः क्रमात् ।
प्राणादयस्तु पञ्चैव पञ्च शब्दादयस्तथा ॥३॥

मनो बुद्धिरहंकारश्चित्तं चेति चतुष्टयम् ।
चतुर्विंशतितत्त्वानि तानि ब्रह्मविदो विदुः ॥४॥

एतैस्तत्त्वैः समं पञ्चीकृतभूतानि पञ्च च ।
पृथिव्यापस्तथा तेजो वायुराकाशमेव च ॥५॥

देहत्रयं स्थूलसूक्ष्मकारणानि विदुर्बुधाः ।
अवस्थात्रितयं चैव जाग्रत्स्वप्नसुषुप्तयः ॥६॥

आहत्य तत्वजातानां षट्त्रिंशत्मुनयो विदुः ।
पूर्वोक्तैस्तत्वजातैस्तु समं तत्वानि योजयेत् ॥७॥

षड्भावविकृतिञ्चास्ति जायते वर्धऽपि च ।
परिणामं क्षयं नाशं षड्भावविकृतिं विदुः ॥८॥

अशना च पिपासा च शोकमोहौ जरा मृतिः ।
एते षडूर्मयः प्रोक्ताः षड्कोशानथ वच्मि ते ॥९॥

त्वक् च रक्तं मांसमेदो मज्जास्थीनि निबोधत।
कामक्रोधौ लोभमोहौ मदो मात्सर्यमेव च ॥१०॥

एतेऽरिषड्व विश्वश्च तैजसः प्राज्ञ एव च।
जीवत्रयं सत्वरजस्तमांसि च गुणत्रयम् ॥११॥

प्रारब्धागाम्यर्जितानि कर्मत्रयमितीरितम्।
वचनादानगमनविसर्गानन्दपञ्चकम् ॥१२॥

संकल्पोऽध्यवसायश्च अभिमानोऽवधारणा।
मुदिता करुणा मैत्री उपेक्षा च चतुष्टयम् ॥१३॥

दिग्वातार्कप्रचेतोऽश्विवह्नीन्द्रोपेन्द्रमृत्युकाः।
तथा चन्द्रश्चतुर्वक्त्रो रुद्रः क्षेत्रज्ञ ईश्वरः ॥१४॥

आहत्य तत्वजातानां षण्णवत्यस्तु कीर्तिताः।१४=॥

"இரு பத்து நான்கு தத்துவங்களைச் சில வாதிகள் இச்சிக்கின்றனர். சிலர் முப்பத்தாறு தத்துவங்களையும், சிலர் தொண்ணூற்றாறு தத்துவங்களையும் (இச்சிக்கின்றனர்). 1. அவர்களுடைய கிரமத்தினைக் கூறுகிறேன். சாவதாந மந முடையவனாகக் கேட்பாயாக. ஞாந இந்திரியங்கள், சுரோத்திரம் த்வக் நேத்திரம் முதலியன ஐந்தே. 2. கர்ம இந்திரியங்கள் வாக், பாணி, பாதம் முதலியன கிரமமாக ஐந்தே. பிராணாதிகள் ஐந்தே. அங்ஙனமே சப்த ஆதிகள் ஐந்து. 3. மநம், புத்தி, அகங்காரம், சித்தமும் என நான்காம். இவை இரு பத்து நான்கு தத்துவங்கள் வேதாந்திகளில் ஏக தேசிகள் கொண்டார்கள் (என) பிரஹ்மம் உணர்ந்தவர் அறிகின்றனர். 4. இந்தத் தத்துவங்களோடு சமம் பஞ்சீகரணம் செய்த, பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு ஆகாசமும் என்னும் பூதங்கள் ஐந்து. 5. ஸ்தூல, சூக்ஷ்ம, காரணங்கள் தேகத் திரயங்கள் என ஞாநிகள் அறிகின்றனர். ஜாக்கிர, ஸ்வப்ந, சுழுத்திகள் மூன்று அவஸ்தைகளே யாகும். 6. (சைதந்யம்) தத்துவக் கூட்டங்கள் சேர்ந்து (சைவர் கொண்ட) முப்பத்தாறு (என) முநிகள் அறிகின்றனர். முன் புகன்ற தத்துவக் கூட்டங்களோடு சமமாகத் தத்துவங்களைச் சேர்க்குக. 7. சட் பாவ விகிருதி, அஸ்தியு (இருத்தலு)ம், ஜாயதே (பிறத்தலும்), வர்த்ததே (விருத்தியடைதலும்), பரிணாமமும், க்ஷயமும், நாசமும் சட் பாவ விகிருதி (என) உணர்க. 8. அசநா பிபாசா (உண்ணல் தாகம்) சோகம் மோகம் ஜரா மரணம் இவை சடூர்மி (என)க் கூறினர். பின்னர் உனக்குச் சட் கோசங்களைக் கூறுகின்றேன். 9. த்வக்கும், ரக்தமும், மாம்சமும், மேதையும், மஜ்ஜையும், அஸ்திகளும் (என) அறிந்து கொள். காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்சர்யமுமே. 10. இவை அரிஷட் வர்க்க மாம். விசுவனும், தைஜசனும், பிராஞ்ஞனுமே ஜீவத் திரய மாம். சத்வம் ரஜஸ் தமஸுகள் குணத் திரயங்க ளாம். 11. பிராரப்தம் ஆகாமி சஞ்சிதங்கள் கர்மத் திரயம் எனக் கூறப்பட்டிருக்கின்றது. வசந தாந ஆகமந விசர்க்க ஆநந்த பஞ்சகம். 12. சங்கற்பம் அத்யவசாயம் அபிமாநம் அவதாரணையும் (நான்காம்.) முதிதை, கருணை, மைத்திரி, உபேக்ஷையும் (என) நான்காம். 13. திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவி, வந்நி, இந்திரன், உபேந்திரன், மிருத்யு, பிரஹ்மா அங்ஙனமே, சந்திரன், நான்முகன் (ருத்ரன்), க்ஷேத்ரஞ்ஞன், ஈசுவரன் (என (14) இத்) தத்துவக் கூட்டங்கள் யாவும் சேர்ந்து (சேசுவர சாங்கியர் கொண்ட) தொண்ணூற்றாறு (தத்வங்கள்) எனக் கீர்த்திக்கப்பட்டிருக்கின்றது." (14) என கூறப்பட்டிருக்கின்றது.

திரு மந்திரம் எட்டாந் தந்திரம் 2-வது மத்திய சாக்கிராவஸ்தை.

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்பர்,
ஆகின்ற வாறாறு ருஞ்சைவர் தத்துவம்,
ஆகின்ற நாலேழ்வே தாந்திவை ணவர்க்,
காகின்ற நாலாறை யைந்துமா யாவாதிக்கே."

என்று (2179) திரு மந்திரம்.

(96 - 36 - 28 - 24 - 25 என) 24 - 25 - 28 - 36 - 96 என ஐந்து பிரிவாகவும் கூறுகின்றதையும் உணர வேண்டும். தத்துவங்களைப் பிரிப்பது கர்த்தாவின் இச்சை யாகும்.

மாயா வாதி, நிரீசுவர சாங்கியரும், தாந்திரீக சைவரும், ஆவர்.

[வேறு வகைத் தாக முப் பத் தாறு தத்துவங்களும், தா னுகவும், தனக்கு அந்நிய மாகவும், தானும், தனக்கு அந்நியம் என்னும் இரு வகை யாகவும், ஆக மூன்று பிரகார மாக வழங்குகின்றது கூறப்படுகின்றது.]

(மூலம்)

இந்தத் தத்துவங்கள் முப் பத் தாறில், எப் போதும் தா னுகவே காணப்படுகிற தத்துவம் ஒன்று. எப் போதும் தனக்கு அந்நிய மாகக் காணப்படுகிற தத்துவங்கள் ஏழு. தா னுகவும், தனக்கு அந்நிய மாகவும் அநுப விக்கப்படுகிற தத்துவங்கள் இரு பத் தெட்டு. அஃது எங்ஙனம் எனில்:— அவஸ்தாத் திரய சாக்ஷியா யிருக் கின்ற பிரஹ்ம சைதந்யம், எல்லா அவஸ்தைகளிலும் தா னுக விளங்குகையினுலும், மற்றைத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நிய மாக விளங்காதபடியினுலும், அந்தப் பிரஹ்ம சைதந்யம் ஒன்றுமே தா னுகக் காணப் படுகிறது. பஞ்ச பூதங்கள், மாயை, மாயாப் பிரதி



விம்பர் ஆக ஏழும், தம் தம் தொழில் ஆன, வெட்டு, கொத்து, உழவு, பஞ்ச கிருத்தியம், தசாவதாரம் முத லானவை, ஒரு காலும் தன் னுடைய தொழி லாகக் காணப்படாதபடியினுலே, தனக்கு அந்நியங்களே யல்லா மல், தா னுகமாட்டா. மற்றை யிரு பத் தெட்டுத் தத்து வங்க ளுள்ளே, நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிருஹஸ்தன், நான் வாநப் பிரஸ்தன், நான் சந்யாசி, நான் ஆண், நான் பெண், நான் கறுவல், சிவலை, கட்டை யன், நெட்டையன், நான் பருத்தேன், இளைத்தேன் என்று தான் ஆக வழங்குகிற, ஸ்தூல சரீரம் ஆறு தத்து வங்களும், மற்று ஒரு வேளையிலே, தனக்குப் புறம்பு பட்டு, "என் மாடு, என் கன்று" என்ருற் போல, "என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாள் ஆயிற்று" என்று, தான் வேறு, தூல சரீரம் வே ருக வழங்குகிறபடியினுலும், "நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன்," என்று தான் ஆக வழங்குகிற சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் இரு பதும், மற்று ஒரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு, "என் வீடு, என் உடைமை" என்ருற் போல, என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என் கை, என் கால், என் மநம், என் புத்தி, என் அஹங்காரம், என் சித்தம், என் பிராணன்" என்று, தான் வேறு, அவைகள் வேறு ஆக வழங்குகிறபடியினு லும், "நான் அறிவேன், அறியேன்" என்று, தான் ஆக

வழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும், மற்று ஒரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு, "என் அஞ்ஞானம், என் சீவன்," என்று வழங்கக் கண்டபடியினுலும், இந்த இரு பத் தெட்டுத் தத்துவங்களும், தான் ஆகவும், தனக்கு அந்நியம் ஆகவும், வழங்குகின்றது சித்தம்.

(இ—ள்.) பஞ்ச கிருத்யம்:— சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் திரோபவம் அநுக்கிரகம் என்பன ஆம். ஐந்து செய்தற்கு யோக்யம் பஞ்ச கிருத்யம் என்னும் சொற் பொரு ளாம்.

தச அவதாரம்:— பத்து இறங்குதல் என்பது பொரு ளாம். பத்து அவதாரங்க ளாவன:— மச்சம், கூர்மம், வராகம், நரசிம்ஹம், வாமநன், பரசு ராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி என்பன வாம்.

[குரு சிஷ்ய சங்கை சமாதாநம் கூறப்படுகின்றது.]

(மூலம்)

இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட்கும்படி:—

"இந்த இரு பத் தெட்டுத் தத்துவங்களும் தான் ஆனல், சாக்ஷியைப் போல, ஒரு தன்மை யாகத் தோற்ற வேண்டுமே யல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத், தனக்கு அந்நியம் ஆகக் காணக் கணக் கில்லை, இந்த இரு பத் தெட்டும் தனக்கு அந்நியமே யானல், எப் போதும் புறம்புபட்டே இருக்க வேண்டும் அல்லாமல், தான் ஆக வழங்கக் கணக் கில்லை. தானும் ஆய்த் தனக்கு அந்நியமும் ஆய், இருக்கும் என்கிறது, இருட்டு ஆதித்தன்



என்றுற் போலும், வெள் ளாள தீக்ஷிதன் என்றுற் போலும், விருத்தம் ஆம்" என்னும் சங்கைக்கு:— "பரமார்த்தம் ஆகத் தான் என்கின்றது ஒரு வகையும், அத்தியாசத்தினலே தான் என்கின்றது ஒரு வகையும், ஆக இரு வகையும் உண்டு.

(இ—ள்.) "இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட்கும்படி" என்பது அவதாரிகை யாம். "விருத்தம் ஆம் என்னும் சங்கைக்கு" என்பது— "சீவன் முத்தன் என்று சொல்லப்படுவன் என்று உத்தரம்" என்னும் சொற் றொடரோடு அந் நுவயம் ஆம். இருட்டு ஆதித்தன் — இருட்டுச் சூரியன் என்பது விரோதமாம். பிரகாச மாகவும், இருட் டாகவும், ஒரு பொருள் இருத்தல் அநுபவ விரோதமாம், வெள்ளாள தீக்ஷிதன் — வே ளாண்மை செய்வோன் வேளாளன் ஆவன். தீக்ஷை யுடையவன் தீக்ஷிதன் ஆவன், ஈண்டு வெள்ளாளன் என்னும் சொல் சூத்ர ஜாதியில் பிரயோகம் ஆம். தீக்ஷிதன் என்னும் சொல் யஞ்ஞ தீக்ஷித னுகிய ரித்விக் முதலிய வற்றில் பிரயோகம் ஆம். சூத்ரன் தீக்ஷிதன் என்பது விரோதமாம். சூத்ர னும், யஞ்ஞ தீக்ஷித னுகவும் ஒருவன் இருத்தல் அநுபவ விரோதமாம். அதாவது, சங்கரம் ஆம். சங்கரத்துக்கு இலக்கணம். "பரஸ் பரம் அத்தியந்தாபாவ முடைய ஒரு நிலைக் களத் துள தாய வற்றிற்கு, ஓரிடத் திருக்கும் தன்மை யாம்." இவ் வாறுய சங்கர தோஷம் வரின், இருட்டும் விளங்காது, பிரகாசமும் விளங்காது, அது போல், வெள் ளாளனும் ஆகான், தீக்ஷிதனும் ஆகான்; என்பது சங்கையின் கருத் தாம். (எ-று).

(மூலம்)

சாக்ஷி சைதந்யத்தைத் தான் என்கின்றது, பரமார்த் தம் அல்லாமல், உபசாரம் அல்ல. தனக்கு அந்நியம் ஆய் இருக்கின்ற இந்த இரு பத் தெட்டையும், தான் என்

கின்றது, "கட்டையைக் கள்ளன்" என்றுற் போலும், "பழுதையைப் பாம்பு" என்றுற் போலும், "புத்திர தாராதிகளைத் தான்" என்றுற் போலும், மயக்கமே யல்லாமல், உண்மை யல்ல. ஆகையினுல், அஞ்ஞாந காலந் தொடங்கித் தான் அல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள் 7. இப் போது இப்படி விவேகம் பண்ணின பின், தான் அல்ல என்று காணப்பட்ட தத்துவங்கள் 28. ஆக இந்த 35 தத்துவங்களையும் அ ததற்குச் சொன்ன, குணம் குறிக ளுடனே கூடக் காண்கின்ற அறிவானது, "கடத்தைப் பார்க்கின்றவன் கடத்திற்குப் புறம்பாகவே யிருந்து, கடத்தைப் பார்க்கின்றது போல," அவைகளை அறிகின்றது என்றும், முப் பத்து ஆறும் தத்துவம் ஆகிய அதுவே தான் என்றும், அதுவே பரம சிவம் என்றும், கலக்கம் அறத் தெளிந்தவனே, சிவ தெரிசநம் உடைய ஜீவந் முத்தன் என்று சொல்லப்படுவன்" என்று உத்தரம்.

(இ—ள்.) சாக்ஷி சைதந்யத்தை - பிரஹ்மத்தை, தான் - ஆத்மா, என்கின்றது - என அநுபவ ரூப மாக அறிவது, பரமார்த்தம் - உண்மை, அல்லாமல் - அன்றி, உபசாரம் - அர்த்த வாதம், அல்ல - அன்று, தனக்கு - ஆத்மாவிற்கு, அந்நியம் ஆய் - வே ருக, இருக்கின்ற - உள்ள, இந்த - பிரத்தியக்ஷ மாக (எதிரில்) உள்ள, இரு பத்து எட்டையும் - இரு பத்து எட்டுத் தத்துவங்களையும், தான் - ஆத்மா, என்கின்றது - என உணர்வது, மயக்கமே பிராந்தியே, அல்லாமல் - அன்றி, உண்மை - யதார்த்த அநுபவம், அல்ல - அன்று, ஆகையினுல் - இக் காரணத்தினுல், அஞ்ஞாந காலம் தொடங்கி - (ஞாந காலம்) அஞ்ஞாந காலம் ஆகிய எல்லாக் காலங்களிலும், தான் - ஆத்மா, அல்ல - அன்று, என்று - என, காணப்பட்ட தத்துவங்கள் - அறியப்பட்ட தத்துவங்கள், ஏழு - (பஞ்ச பூதம் மாயை மாயாப் பிரதிபிம்பர் என்னும்) ஏழும் ஆம், இப் போது - இக் கால், இப்படி - இவ் வாறு, விவேகம் பண்ணின பின் - (தேக தேகியை) விவேசநம் செய்த பின்னர், தான் - ஆத்மா, அல்ல - அன்று, என - என்று, காணப்பட்ட - உணரப்பட்ட, தத்துவங்கள் 28 - (அநாத்ம) தத்துவங்கள் 28, கலக்கம் அற - கிலேசம் இன்றி, தெளிந்தவனே - அபரோக்ஷ அநுபவியே, ஜீவந் முக்தன் - ஜீவித்துக் கொண்டிருக்கும் போதே (தேகத் திரய அபிமாநம்) விடுபட்டவன், என்று சொல்லப்படுவன்' - என (வேத ஆதி பிரமாணங்களால்) கூறப்படும், என்று உத்தரம் - (முன் சிஷ்யன் கேட்ட விஞ ரூப சங்கைக்கு) இவ் வாறு சமாதாநம் ஆம், (எ-று).



அந்நபூர்ணு உபநிஷத் 2-வது அத்தியாயத்தில் தேக தேகி விவேசநம் விரி வாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு நோக்குக.

[ஞாநி அஞ்ஞாநிகள் கூறப்படுகின்றனர்.]

(மூலம்)

இப்படிப் பிரஹ்மமே தாம் என்றும், மற்றை முப் பத் தைந்து தத்துவங்களும், தமக்கு அந்நியம் என்றும், பிரித்து அறியாத அவிவேகிகள், அகங்காரக் கிரந்தியினுலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறேம் என்கிற மூடகரம் போல, இந்த இரு பத் தெட்டினுடைய தொழில்களையும், தம் தொழில் என்று மயங்குகின்றபடியினுல், இந்த இரு பத் தெட்டினுலும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாபங்களினுல் கட்டுப்பட்டு, அந்தக் கர்மத்தின் படியே சநந மரணுதி சம்சாரத்திலே அடிபடுகிறேம், என்று மயங்குவர்.

பிரஹ்ம சைதந்யமே தான் என்றும், மற்றை முப் பத் தைந்தும் தான் அல்ல என்றும், தெளிந்த விவேகி

யானவன், அகங்காரக் கிரந்தி யற்றபடியினுல், இந்த இரு பத்தெட்டி னுடைய தொழில்களேயும் நான் செய்ய வில்லை என்றும், இந்த இரு பத்தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்க வில்லை என்றும், திடப்படத் தேறி மயக்கம் அற்று இருக்கின்றபடியினுல், இந்த இரு பத்தெட்டினு லும் ஆர்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாபங்களினின்றும் விடுபட்டுக் கர்மம் இல்லாதபடியினுல், சநந மாணுதி சம்சாரம் இல்லாமல், முத்தன் ஆய்ப், பிரஹ்ம மாத்திர மாகவே யிருப்பன்.

இவனைச் சீவந்முத்தன் என்றும், திடப் பிரஞ்ஞன் என்றும், அதி வர்ணுச்சிரமி என்றும், குணுதீதன் என் றும், பகவற்பத்தன் என்றும், பிராஹ்மணன் என்றும், வாசிட்டம் முதலிய சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் பண்ணி மோக்ஷம் அடையக் கடவர்.

நானா ஜீவ வாதக் கட்டளை முற்றற்று.

(இ—ள்.) இப்படி - இவ் வாறு, தாம் பிரஹ்மமே என்றும் - தமது ஸ்வரூபம் பிரஹ்ம ஸ்வரூபமே எனவும், மற்றை முப் பத் தைந்து தத்துவங்களும்-(மாயா காரிய மாகிய) ஏனை முப் பத்தைந்து தத்துவங்களும், தமக்கு - (பிரஹ்ம ஸ்வரூப மாகிய) நமக்கு, அந்நியம் என்றும் - வே ருய் (மித்தை யாகத் தோற்றுகின்றன) எனவும், பிரித்து - (முப் பத் தாறு தத்துவங்களின் இயற்கையை விசாரித்து) வேறு படுத்தி, அறியாத - (குருவின் உபதேசத்தால்) அபரோக்ஷ ஞானம் அற்ற, அவிவேகிகள் - விவேகம் இல்லாத மூடர் கள், அஹம் காரக் கிரந்தியினுல் - நான் என்று அபிமானம் செய்யும் முடிச்சால், புத்திர தார ஆதிகள் - புத்திரன் மனைவி முதலி



யோர், தபிக்கின்றதை - தாபம் அடைகின்றதை, தாம் - நாம், தபிக்கின்ருேம் - தாபப்படுகின்ருேம், என்கிற - என உண்டா கின்ற, மூட கரம் போல - அறி வற்ற செய்கை போல, இந்த இரு பத்தெட்டின் உடைய தொழில்களேயும் - இப் பொழுது கூறிய ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர ஜீவனது இரு பத்தெட்டுத் தொழில்களேயும், தம் - ஆத்மாவினது, தொழில் - செய்கை யாம், என்று மயங்குகின்றபடியினுல் - (ஸ்வரூப அத்தியாசம், சம்பந்த அத்தியாசம், தர்ம அத்தியாசம், தர்மி அத்தியாசம், அந்யோந்ய அத்தியாசம், அந்யதா அத்தியாசம், மித்தையா அத்தியாசம், சத்திய அத்தியாசம், இதர அத்தியாசம், இதரேதர அத்தியாசம், சோபாதிக அத்தியாசம், நிருபாதிக அத்தியாசம், ஆதியான பிராந்தியினுல்) எனக் கலங்குகின்றபடியினுல், இந்த இரு பத் தெட்டினுலும் - இப் பொழுது கூறிய ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர ஜீவ ரூப, இரு பத் தெட்டுத் தத்துவங்களினுலும், ஆர்ச்சிக்கப் பட்ட - சம்பாதிக்கப்பட்ட, புண்ணிய பாவங்களினுல் - புண்ணிய பாப (மிசிர) கர்மங்களினுல், கட்டுப்பட்டு - பந்திக்கப்பட்டு, அந்தக் கர்மத்தின்படியே - அந்த அந்தக் கர்மங்கட்குத் தக்கபடி, ஜநந மரண ஆதி சம்சாரங்களிலே அடிபடுகிருேம் - பிறப்பு இறப்பு முதலிய குடும்பப் படுகுழியில் கிடந்து வருந்துகின்ருேம், என்று - என, மயங்குவர் - (ஜீவர்கள்) கலக்கம் அடைவார்கள்.

தான் பிரஹ்மம் என்றும் - (ஆத்மா வாகிய) தனது ஸ்வரூபம் பிரஹ்ம ஸ்வரூபம் என்றும், மற்றை முப் பத் தைந்தும் - ஏனை முப் பத் தைந்து தத்துவங்களும், தான் அல்ல - பிரஹ்ம ஸ்வரூபம் அல்ல, என்றும் - எனவும், தெளிந்த விவேகி யானவன் - (அசேஷ சாஸ்திர பாண்டித்தியமும், ஆத்ம ஞானமும் உடைய ஆசாரியர் உபதேசத்தால்) அபரோக்ஷ ஞானம் அடைந்த ஞானி யானவன், அஹம் காரக் கிரந்தி யற்றபடியினுலே - நான் என்னும் அபிமான முடிச்சு நீங்கியபடியால், இந்த இரு பத் தெட்டின் தொழில்களை

யும், ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீர ஜீவனது, இரு பத் தெட்டுத் தத்துவ, (கர்த்தா ரூபத்தால்) செய்யும் தொழில்களையும், நான் செய்ய இல்லை என்றும் - ஆத்மா செய்ய இல்லை எனவும், இந்த இரு பத் தெட்டும் புசிக்கின்றதை - இப் பொழுது கூறிய இரு பத் தெட்டுத் தத்துவ, (போக்தா ரூபத்தால்) புசிக்கின்றதை, நான் புசிக்க இல்லை என்றும் - ஆத்மா புசிக்க இல்லை எனவும், திடப் படத் தேறி - அதிடம் இன்றித் தெளிந்து, மயக்கம் அற்று இருக்கின்றபடியால் - பிராந்தி நீங்கி யிருக்கின்ற காரணத்தால், இந்த இரு பத் தெட்டினலும் - இந்த இரு பத் தெட்டுத் தத்துவங் களினலும், ஆர்ச்சிக்கப்பட்ட - சம்பாதிக்கப்பட்ட, புண்ணிய பாபங்களினின்றும் - புண்ணிய பாப (மிசிர) கர்மங்களினின்றும், விடுபட்டு - நிவிர்த்தி யடைந்து, கர்மம் இல்லாத படியினல் - (சஞ்சித ஆகாமிய) கர்மம் இல்லாதபடியினல், ஜநந மரண ஆதி சம்சாரம் இல்லாமல் - பிறப்பு இறப்பு முதலிய கட்டு இன்றி, முத்தன் ஆய் - விடுபட்டவன் ஆய், பிரஹ்மம் மாத்திரம் ஆகவே இருப்பன் - பிரஹ்ம (ஸ்வரூபம்) மாத்திரம் ஆக (ஜீவந் முத்தன்) ஆக இருப்பன், இவனை - இவ் வாறு அத்தியாசம் விடுபட்ட ஞாநியை, சீவந் முத்தன் என்றும் - சரீரத்தோடு கூடிச் சீவித்துக் கொண் டிருக்கும் போதே விடுபட்டவன் எனவும், திடப் பிரக்ஞன் எனவும் - ஞாநம் திடம் ஆனவன் எனவும், அதி வர்ண ஆசிரமி என்றும் - வர்ண ஆசிரமங்களைக் கடந்தவன் எனவும், குண அதீதன் என்றும் - (சத்துவ ரஜஸ் தமஸ் என்னும்) முக் குணங்களை யும் கடந்தவன் எனவும், பகவத் பத்தன் என்றும் - பகவா (ஞகிய கிருஷ்ண பரமாத்மாவி) னிடத்தில் (காயிக வாசிக மாநசிக) பத்தி யுடையவன் எனவும், பிராஹ்மணன் என்றும் - (பிரஹ்மத்தினை உணர்ந்த) பிராஹ்மணன் எனவும், வாசிட்ட முதலிய சாஸ்திரங் கள் - (ஆறு வகை யாக) வாசிட்டம், பகவத் கீதை, ஜீவந் முக்தி விவேகம், சூத சம்ஹிதை, என்பன ஆதி நூல்கள் (விரி வாக), முறையிடுகின்றன - கதறுகின்றன.



சகலரும் - (உத்தம மத்திம அதம மாய் உள்ள) எல்லா அதிகாரி களும், இந்தத் தத்துவங்களை - இப் பொழுது கூறிய (முப் பத் தாறு) தத்துவங்களையும் லக்ஷணப் பிரமாணங்களின் வாயி லாக, விசாரம் பண்ணி - (அபரோக்ஷ ஞாந வாயி லாய்ப்) பேதம் உணர்ந்து, மோக்ஷம் அடையக் கடவர் - (அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப ஜீவந் முக்தி விதேக முக்தி யாகிய) மோக்ஷம் சேரக் கடவர்கள் (எ-று).

**அத்தியாசம் ஆவன:—**

வேதாந்த சூடாமணி - திருசிய விவேகம். கவி 87.

பற்றியவார் மாப்பதிபிம் பித்திடுத ரூனே
பதிபிம்போ பாதியாம் புத்திகத மாய,
முற்றுசுக துக்கங்க ளுயிர் நுகர்தல் போல
முயலுதலே யத்தியா சோபாதி யாகு,
முற்றவத்தி யாசவிலக் கணமாம்வே ரொன்றி
லொன்றினது பத்தியிப்பி வெள்ளியது போல,
மற்றதுநால் வகைப்படுமால் மித்தையுட னிதா
மற்றிதரே தாஞ்சத்தி யங்களினு லன்றே.

மேற்படி கவி 88.

நெருப்பினெடு புணர்ச்சியாற் புனற்கழற்சி வால்போ
னித்தமுறு மாங்மசந் நிதியதனின் முறையே,
சரிப்பினெடு காண்டனினை வுறலறிதல் வரலாற்
றுக்தூல மெய்மித்தி யாத்தியா சந்தா,
னிருப்பருமிந் தியங்களே யிதராத்தி யாச
மிதரேத ராத்தியா சங்காண மாகுந்,
தரிப்பரிய மூலவகங் காரமது தானே
சத்தியாத் தியாசமெனச் சாற்றுவர்தக் கவரே.

மேற்படி கவி 89.

ஆங்கார மாந்மாவிற் குநானெனலாற் கயிற்றி
னரவமென நிருபாதி காத்தியா சந்தா,
ஞங்கார வியலாத்மா விற்குநான் கருத்தா
வாமெனலாற் சிவப்புவலம் போற்சோபா திகமா,
மீங்காகுங் கரணதரு மாந்மாவிற் கிச்சை
யினேனுனென் றிருத்தலினு லலைபுனலிற் புக்க,
வீங்கதிரின் பிம்பமெனத் தத்தருமாத் தியாச
மெனவுரைப்பர் நான்குடும்ப வானெனலிற் கையினுல்,

மேற்படி கவி 90.

மைந்தர்முத லாயினு ருடனுன்மா விற்கு
மண்ணுலகிற் பஃறியத்தர் விவகார மெனவே,
யந்தமுறு சம்பந்த மாத்திராத் தியாச
மாமென்பர் ............

என்று கூறப்பட்டிருக்கின்றது.

**அத்தியாச லக்ஷணம்:—** தனது அபாவ அதிகரணத்தில், தனது அவபாசம் அத்தியாச மாம். அதாவது, வெள்ளியின் அபாவ நிலைக் களம் ஆன கிளிஞ்சிலி னிடத்தில், வெள்ளியின் தோற்றம் ஆம். அவை அநேக விதம் ஆம். அவற்றுள், (1) சத்தியம், மித்தை என இரு வகைத் தாம். சத்திய அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின் சந்நிதியில், மூல அகங்கார சம்பந்தம் ஆம். மித்யா அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின் சந்நிதியில் - நடத்தல் - பார்த்தல் - நினைத்தல் - அறிதல் வாயி லாக, தூல சரீர சம்பந்தம் ஆம். (2) சோபாதிகம் - நிருபாதிகம் எனவும் இரு வகைத் தாம். சோபாதிக அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின் சந்நிதியில், அகங்காரத்தின் தன்மை, நான் கருத்தா என்று ஆத்மாவிற்கு ரக்த ஸ்படிகம் போல் உண்டாகின்ற



தாம். நிருபாதிக அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின் சந்நிதியில், அகங்காரம், ஆத்மாவிற்கு நான் என்று ரஜ்ஜு சர்ப்பம் போல உண்டாகின்ற தாம். (3) தர்ம - தர்மி எனவும் இரு வகைத் தாம். தர்ம அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின் தர்மம் அநாத்மாவிலும், அநாத்மாவின் தர்மம் ஆத்மாவிலும் தோற்றுவது ஆம். தர்மி அத்தியாசம் ஆவது:- ஆத்மாவின்கண், அநாத்மா வாகிய ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்கள் தோற்றுவ தாம். (4) ஸ்வரூபம் - சம்பந்தம் எனவும் இரு வகைத் தாம். ஸ்வரூப அத்தியாசம் ஆவது:- ஆத்மாவி னிடத்தில், அநாத்மாவின் ஸ்வரூபம் அத்தியாசம் ஆவது ஆம். சம்பந்த அத்தியாசம் ஆவது:- ஆத்மாவி னிடத்தில் அநாத்மாவின் சம்பந்தம், அல்லது, அநாத்மாவி னிடத்தில், ஆத்மாவின் தர்ம சம்பந்தம் அத்தியாசம் ஆவது ஆம். (5) அந்யோந்யம் - அந்ய தாம் எனவும் இரு வகைத் தாம். அந்நிய அந்நிய அத்தியாசம் ஆவது:- (பரஸ்பரம்) ஆத்மாவி னிடத்தில், அநாத்மாவும், அநாத்மாவி னிடத்தில், ஆத்மாவும் அத்தியாசம் ஆவது ஆம். அந்ய தா அத்தியாசம் ஆவது:- இரண்டில் ஒன்று, அதாவது, ஆத்மாவி னிடத்தில், அநாத்மா, அல்லது, அநாத்மாவி னிடத்தில், ஆத்ம தர்மம் அத்தியாசம் ஆவது ஆம். (6) இதரம் - இதரேதரம் எனவும் இரு வகைத் தாம். இதர அத்தியாசம் ஆவது:- ஆத்மாவி னிடத்தில், இந்திரியங்களுக்கு உண்டாம் அத்தியாசம் ஆம். இதர இதர அத்தியாசம் ஆவது:- ஆத்மாவி னிடத்தில் அந்தக்கரணத்திற்கு உண்டாம் அத்தியாசம் ஆம். (7) காரணம் - காரியம் எனவும் இரு வகைத் தாம். காரண அத்தியாசம் ஆவது:- காரியப் பிரபஞ்சத் தோற்றம் ஆகிய அத்தியாசத்திற்குக் காரணமா யுள்ள அஞ்ஞாந அத்தியாசம் ஆம். காரிய அத்தியாசம் ஆவது:- காரியமாகிய தேக ஆதிப் பிரபஞ்சங்களின் அத்தியாசம் ஆம். (8) ஞாநம் - அர்த்தம் எனவும் இரு வகைத் தாம். ஞாந அத்தியாசம் ஆவது:- ஒன்றில் வேறு ஒன்றன் தோற்றம், ஞாந அத்தியாசம் ஆம். அர்த்த அத்தியாசம் ஆவது:- பரோக்ஷ அபரோக்ஷப் பிராந்திப் பொருள்க

ளின் தோற்றம் அர்த்த அத்தியாசம் ஆம். (9) பரோக்ஷ ஞானம் - அபரோக்ஷ ஞானம் எனவும் இரு வகைத் தாம். பரோக்ஷ ஞான அத்தியாசம் ஆவது:- நெருப் பின்றிய இடத்தில் நெருப்பின் அநுமிதி ரூபப் பிராந்தி ஞானமும், வஞ்சகன் உரையால் உண்டா கின்ற நெருப்பின் சாப்த போதப் பிராந்தி ஞானமும், பரோக்ஷ ஞான அத்தியாசம் ஆம். அபரோக்ஷ ஞான அத்தியாசம் ஆவது:- சுக்தி ரஜதம் ரஜ்ஜு சர்ப்பம் முதலிய இடங்களில் உண்டாம் பிராந்தி ஞானம் அபரோக்ஷ ஞான அத்தியாசம் ஆம். (10) பரோக்ஷ அர்த்தம் - அபரோக்ஷ அர்த்தம் எனவும் இரு வகைத் தாம். பரோக்ஷ அர்த்த அத்தியாசம் ஆவது:- நெருப் பின்றிய இடத்தில் நெருப்பும், வஞ்சகன் உரையால் சாப்தப் பொருளும், பரோக்ஷ அர்த்த அத்தி யாசம் ஆம். அபரோக்ஷ அர்த்த அத்தியாசம் ஆவது:- சுக்தி ரஜதம் - ரஜ்ஜு சர்ப்பம் முதலியன அபரோக்ஷ அர்த்த அத்தியாசம் ஆம். (11) அநாதி - ஆதி எனவும் இரு வகைத் தாம். அநாதி அத்தியா சம் ஆவது:- அநாதி யான அஞ்ஞானத்தின் அத்தியாசம், அநாதி அத்தியாசம் ஆம். அநாதி அஞ்ஞான அத்தியாசத்தின்கண், சுத்த சேதநத்தினோடு கூட அஞ்ஞான அநாதி சம்பந்தத்தில், அஞ்ஞானமே உபாதானமும், நிமித்தமும் ஆம். எதனால் எனின், நையாயிகர்க ளால் அங்கீகரிக்கப்பட்ட சமவாயம் முதலியன போன்று அஞ்ஞா நமும் ஸ்வ பர நிர்வாகம் ஆகலின். ஆதி அத்தியாசம் ஆவது:- ரஜதாதிகளும், அகங்காராதிகளும், ஆகியவற்றின் அத்தியாசம், ஆதி அத்தியாசம் ஆம். இதனைச் சாதி அத்தியாசம் என்றும் கூறுவர். சாதி ஆதி என்பன ஒரு பொருளன.

ஆசாரியர் உபதேசம் - மகா உபநிஷத் 5-வது அத்தியாயம் 104—105-வது மந்திரங்கள் கூறுகின்றன:

**आदौ शमदमप्रायैर्गुणैः शिष्यं विशोधयेत् ।**
**पश्चात्सर्वमिदं ब्रह्म शुद्धस्त्वमिति बोधयेत् ॥ १०४॥**



**अज्ञस्यार्ध प्रबुद्धस्य सर्वं ब्रह्मेति यो वदेत् ।**
**महानरकजालेषु स तेन विनियोजितः ॥ १०५॥**

வாசிட்டம் 4-வது திதிப் பிரகரணம் 4-வது தாசூரன் கதை 12-வது கவி.

"இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாலையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றோதின் மீளாத நீரகில் வீழத்த தாகும்," (12) என்று, முதலில் சிஷ்யனது குணங்களைப் பரீக்ஷித்துப், பின்னர் சர்வம் பிரஹ்மம் என உபதேசிக்க வேண்டும் எனவும், பாதி உணர்ந்த அஞ்ஞனுக்குச் சர்வம் பிரஹ்மம் என உபதேசிப்பவர் மகா நரகக் கூட்டங்களில் அவனைத் தள்ளியவர் ஆகின்றார் எனவும் கூறுகின்றது.

ஆகலின், அசேஷ சாஸ்திர (குறை விலா நூல்) பாண்டித்திய மும், ஆத்ம ஞானமும் உடையவர் குரு வாக வேண்டும் என்று விரி வுரை செய்யப்பட்டது, என உணர்க.

1. ஜீவந் முக்தன், 2. திடப் பிரக்ஞன், 3. அதி வர்ணசிரமி, 4. துறீதன், 5. பகவத் பக்தன், 6. பிராஹ்மணன் என அறு வருக்கும் உதாரணம்.

1. ஜீவந் முக்தன்.

வாசிட்டம் 3-வது உத்பத்திப் பிரகரணம் 1-வது (ஞான) விண்மகன் கதை.

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போன் மிக நொய் தானோர், அகமெனவின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலு மழுத்த மற்றோர், சகநெறிகள் செய்திடினு மந்நியர் போற் கண்டுகுளிர் தன்மை சான்றோர், திகழ்மநமு நினைவுமிருந் துஞ்சிறிது மில்லாதோர் சீவந் முத்தர். (37)

துக்கசுகங் களிலமிழ்ந்தி மிதவாத புந்திநிலை சுபாவ மானோர்,
புக்கசுழுத் தியினனவாய் நநவின்றி வாதனைதீர் போத முற்றோர்,
மிக்கசம மாயுலகால் வெருளாம லுலகினையும் வெருட்டா மேலோர்,
சிக்கறநன் னினைவிருந்து நினைவிலா தவரிவரே சீவந் முத்தர். (38)

வாசிட்டம் 5-வது உபசாந்திப் பிரகரணம் 2-வது புண்ணிய பாவநர் கதை.

சூழுறு மின்ப துன்பந் தொடர்வுறி லொருகா லத்தும்,
மாழுதன் மிதத்த லில்லா வவர்களே சீவந் முத்தர்,
கேழுயர் மகிழ்ச்சி யச்சஞ் சினமின்மை பொறாமை கேதம்,
மூழுறு மிவற்றை நோக்கா வுளத்தினர் சீவந் முத்தர். (20)

மேற்படி மேற்படி 9-வது வீத கவ்வியன் கதை.

செப்பியவத் திறநின்று மற்றொன் றின்றிச் சீவத்தன் மையைச்
சேராச் சீவந் முத்தர், இப்புவியிற் றொழிலெல்லாஞ் செய்க தீர்க
வின்பவுணர் வன்செய்கை யியற்றி னுலுந், தப்பறவே விட்டாலுந்
தொழில்க டம்மாற் றருபயன்க ளொருசிறிதுந் தாக்க மாட்டா,
மைப்புயல்கள் பலவிதமா யெழுந்த போதும், வாநகத்திற் பற்றாத
வகையே போல.
(13)

அன்றியே யதுதனையுந் தீர நீக்கி யறிபொருளின் முடிவான
வறிவாற் றுன்னி, ஒன்றுமுப சாந்தனாய்ப் பளிங்கு போலுள்
ளொளிமேவிச் சீவனொரு மித்து நிற்பன், நன்றுணர்சிற் சுகராகிப்
பெரியோ ராகி ஞாநபர ராய்ப்பரம நன்றாய்ப் பெற்றோர், நின்
றசைவார் புறத்தின்மயிற் பீலி போல நிலைகலங்கார் மேருவைப்போ
னெஞ்சி னுள்ளே.
(14)



பண்டத்திற் பற்றின்மை யாலே சித்தம் பயில்சாந்தி முத்தி
தரும் பகர்ந்த முத்தி, பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட் டாலும்
பேறாகும் பற்றறுத்த பெரியோர்க் கென்பர், மண்டுற்ற நேயமற
வாழ்வோ ரின்பம் வருஞ்சீவந் முத்தராம் வளர்நே யத்தால்,
தொண்டுற்று வாழுமவர் பந்த முற்றோர் சொன்னமூன் றுமவனே
தூய முத்தன்.
(24)

வருதொழிலின் விருப்புறான் வத்த மாந வழிநில்லான்
சென்றவற்றை மநத்தி னெண்ணான், கருமமுழு வதுமியற்றுந்
தொடர்பந் தத்திற் கலந்தவர்பான் மநம்பற்றான் கவலை கூரான்,
மருவியவோர் பத்தர்பாற் பத்த னாகும் வஞ்சகர்பால் வஞ்சனும்
வாலர் தம்பால், பருவமுறு வாலனும் விருத்த ரானோர் பால்
விருத்த னுந்தீரர் பாலு மாங்கே. (25)

விடலைபால் விடலையாந் துயருற் றோர்பால் வெந்துயா முறு
நிலைமை விடாத புந்தி, திடமுளதா மாநந்த நிறைந்து தோன்றுந்
செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பே செய்யும், மடமையிலா
வறிஞனுந் தெளிந்தோ னுகு மதாமுள னுந்தீந மாமில் லோனும்,
சுடர்குளிரின் மதிகருகி லெரிகிழ் நோக்கிற் றுளங்கிவிய வான்சீவந்
முத்தன் றாயோன்.
(26)

5-வது உபசாந்திப் பிரகாணம், ஆகாச கமநாதி அபாவ நிருபணம்.

அபாவமே பற்றலபா வம்பா வித்த லாய்ந்துண்மைப் பொருள்
காண்டன் மநமாய் வென்பர், சுபாவமா மனைத்தையுமுள் ளகற்றிச்
சீதச் சுதைபோலு மிவ்விதய நடக்கு மென்னில், தவாததொழி
லற்றாலு மந்தச் சித்தந் தன்வடிவி லாததெனச் சாற்றுங் கண்டாய்,
குவான்மறசந் மந்தருவா தனைதுன் னுதோர் குலாலவட்டம்
போற்றிரிவர் குறைவின் முத்தர்.
(26)

வறுத்தவிதை யொப்பாகி யின்ப மின்றி மறுசார மற்றவா தனைசேர்ந் துள்ளோர், ஒறுத்தவிடர் தீர்சீவந் முத்த ராகு முண்மையுரு வடைந்தமா முடையோ ரன்னார், கிறுத்துணர்ஞா நக்கரையுற் றவரு மன்னார் நெஞ்சமிலா தவரன்னார் நிமல மாகப், பொறுத்தவுட னீங்கிலா காச ரூபம் பொருந்தினான் னுறென்று புகல்வ ரன்றே. (27)

என்பன ஆதிச் செய்யுட்களில், வாசிட்டத்தில், சீவர் முத்தன் இலக்கணம் கூறி யிருப்பதனைக் கொள்க.

தேஜோ பிந்து உபநிஷத்தின் நான் காவது அத்தியாயத்திலும், மகோபநிஷத் முத லாவது அத்தியாயத்திலும், ஜீவர் முக்தன் லக்ஷணம் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றது.

## 2. திடப் பிரக்ஞனது லக்ஷணம்.

### பகவற் கீதை 2-வது அத்தியாயம்.

"இவ்வகை யவனை நின்றூ றெவ்வகை யுரைப்ப ரந்தச் செய்வகை யிலாதோன் செய்யுஞ் செயல்களென் செப்பு மாறென், மெய்வகை யருள்செய் கென்ன விண்ணையே முதலாக் கொண்ட, வைவகைப் பொருளு மீன்ற வவனிவை யருளிச் செய்வான். (48)

அறிவினிற் றன்னு வின்புற் றனைத்தவா வினையு நீக்கி,
வெறிதரு வெகுளி காம மயக்கநீத் தின்ப துன்பம்,
வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சியென் றிவையு மாய்த்துப்,
பொறிதரு புகழுந் திங்கும் போற்றல்போற் றூமை போக்கி. (49)

ஆமைதன் னுறுப்போ ரைந்துந் தன்னுளே யடக்கு மாபோற்; றீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தி, வாய்மையு ணிகழு மின்னே வழுத்தவும் படுகின் றூனாற், றூய்மை செய் தெவையு நாளுஞ் சொல்லுவ தவன்றன் சொல்லாம். (50)



குறையுமாப் பிணிப்புற் றூலுங் கொண்டவிப் புலன்க ளெண்ணி, லறைகட லனைய நெஞ்சத் தவாவறு னறிவி னில்லான், மறைமொழி பலவு மோதி யடக்குவான் மனத்தை வாங்கிப், பொறைகெடப் புலன்க ளைந்தும் பொறியிலே புகட்டுங் கண்டாய். (51)

ஆதலாற் புலன்க ளைந்து மடக்கரி தடங்கா தாகில்,
றீதிலாக் கருத்துந் தீய வவற்றிலே செல்லுஞ் சென்றூன்,
காதலாற் புகைந்து வெய்ய காமமாய்க் கொளுந்திக் காம,
மேய்தலா காமை தீய வெகுளியா யெரியு மன்றே. (52)

எரிமிகர் வெகுளி பொங்க மயக்கம்வந் தெய்து மெய்தத்,
தெரிபவை சிதையு முள்ளந் தெரிந்தவை சிதைந்த போதே,
யுரியதன் னுணர்வு மாயு முணர்வுமாய்ந் தொழிந்த வாறே,
யரியவென் றறிஞர் பேசு மனைத்துமாய்ந் தொழியு மன்றே. (53)

வேண்டல்வேண் டாமை யின்றி மிகைசெலாப் புலன்க ளாலே,
மாண்டபோ கங்க டுய்ப்பான் மனங்கலங் குறுன்மற் றத்தா,
றீண்டிய தெளிவுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப்,
பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனிலை நிற்கு மன்றே. (54)

அடுத்தலைம் புலன்செ யாதார்க் கறிவில்லை யறிவின் றூக,
விடுத்தமெய் யுணர்வின் றூமான் மெய்யுணர் வில்லை யாகிற்,
றொடுத்தபின் சித்த சாந்தி தோன்றிடா ததுதோன் றூதே,
லெடுத்தசல் லின்பந் தானு மில்லையே யிசைக்க வேண்டா. (55)

ஆறுசெல் பொருள்க டுய்க்கு மைம்புல னுக்கும் பின்னே,
காறூடர் நெஞ்ச மந்தப் புலன்றனைக் கலக்கு மாங்கே,
யூறிய கடலு ளோடு கலத்தினை யுடன்செல் காற்றே,
வேறுசெய் தறைந்து மாய்த்து வீழ்த்துமா போல வேயாம். (56)

யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்போற் காணா,
வோதரு ஞானி யத்தை யுளங்கையிற் கனிபோற் காணும்,
யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காணுங்,
காதலின் ஞானி யத்தைக் கண்ணினுற் றெரியக் காணான். (57)

நீரினா னிறைந்து நின்ற கடலிலே நெறிமேற் கொண்டு,
நீரினா னிறைந்த வாறு வீழ்ந்ததா னிறைவு றாது,
தேரினா யதுபோ லாசை செறிந்தவர் திறமே நோக்கிச்,
சாருமா லாகி லத்தா லவர்களுஞ் சலித்தல் செய்யார். (58)

யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான்,
றானெனச் சரிக்கின் றான்யா ரவனையே யடையுஞ் சாந்தி,
யீனம தடையா ரித்தை யடைந்தவ ரிறக்கு மப்போ,
தேனுமீ தடைவாரென்னை யெய்துவார் பிறவி யெய்தார்.'' என(59)

**சம்ஸ்கிருதத்தில், 2-வது சாங்கிய யோக அத்தியாயம், 54-வது சுலோகம் முதல் 72-வது சுலோகம் வரை 19 சுலோகம் உள்ளன.**

**54.** "கேசவ! ஞானம் நிலைத்துச் சமாதியில் நிற்பவனை எவ்வாறு சொல்வது? ஞானம் நிலைத்தவன் எவ்வாறு பேசுவான்? எவ்வாறு இருப்பான்? எவ்வாறு நடப்பான்?

**55.** பார்த்த! தானாக ஆத்மாவினிடத்தே சந்தோஷித்திருப்பவனாய், மனத்தில் உள்ள சகல ஆசைகளையும் (எவன்) எப்பொழுது தள்ளி விடுகின்றானோ? அப்பொழுது (அவன்) ஞானம் நிலைத்தவன் எனப்படுகின்றான்.

**56.** துக்கங்களில் நொந்திடாத மனத்தினனாய், சுகங்களில் ஆசை யற்றவனாய், (பொருள்களின் மேல்) பற்றும், பயமும், கோபமும், நீங்கப் பெற்றவனாய் இருப்பவன், நிலைத்த ஞானம் உடையவன். முனிவன் எனப்படுகின்றான்.



**57.** எவன் எங்கும் பற்றில்லாதவனாய், நல்லதும், தீயதும் ஆனவற்றைப் பெற்றச் சந்தோஷமும், வெறுப்பும், கொள்வதில்லையோ, அவனுடைய ஞானம் நிலை பெற்றது.

**58.** ஆமை (தன்) அவயவங்களை, எல்லாப் பக்கங்களினின்றும் (உள்ளே) அடக்கும் ஆறு போல், இவன் எப்பொழுது விஷயங்களினின்றும் இந்திரியங்களை அடக்குகின்றானோ, (அப்போது) அவனுடைய ஞானம் நிலைத்தது.

**59.** உணவில்லாத மனிதனுக்கு ஆசையைத் தவிர விஷயங்கள் ஒழிகின்றன. பரம் பொருளைக் கண்ட பின்பு இவனுடைய ஆசையும் ஒழிகின்றது.

**60.** எனெனில், புத்தி சாலியான புருஷன் (தன் இந்திரியங்களை அடக்க) முயல்கின்றனனாயினும், கௌந்தேய! கொந்தளிக்கும் இயல்பையுடைய இந்திரியங்கள் மனதை வலியக் கவர்ந்து கொண்டு போகின்றன.

**61.** (அவன்) அவற்றையெல்லாம் அடக்கி, என்னிடத்தில் ஈடுபட்டவனாய் அமைந்திருக்க வேண்டும். இந்திரியங்கள் எவனுக்குத் (தன்) வசத்தில் இருக்கின்றனவோ, அவனுக்கு ஞானம் நிலைத்தது.

**62.** விஷயங்களை நினைக்கும் புருஷனுக்கு, அவற்றின் மேல் பற்று உண்டாகின்றது. பற்றினின்றும் ஆசை உண்டாகின்றது. ஆசையினின்றும் கோபம் உண்டாகின்றது.

**63.** கோபத்தினின்று மயக்கமும், மயக்கத்தினின்று நினைவுத் தவறும், நினைவுத் தவறினின்றும் அறிவுக் கேடும் உண்டாகின்றது. அறிவு கெடுதலால் (ஒருவன்) முற்றும் கெட்டுப் போகின்றான்.

64. அந்தக் கரணம் அடங்கியவனே, விருப்பு வெறுப்புக்கள் நீங்கப் பெற்றுத், தனக்கு அடங்கி நிற்கும் இந்திரியங்களால் விஷயங்களிற் சென்று (மநத்) தெளிவைப் பெறுகின்றான்.

65. தெளிவுள்ள வழி இவனுடைய துன்பங்கட்கெல்லாம் அழிவு பிறக்கின்றது. ஏனெனில், மநந் தெளிந்தவனுக்குப் புத்தி விரைவாக நிலைத்து நிற்கின்றது.

66. ஒரு நிலையில்லாதவனுக்கு, ஞாநம் உண்டாவதில்லை. ஒரு நிலையில்லாதவனுக்கு, (ஆத்ம) த்யாநமும் உண்டாவதில்லை. (ஆத்ம) த்யாநம் இல்லாதவனுக்கு, ஒழிபும் உண்டாவதில்லை. ஒழி பற்றவனுக்குச், சுகம் ஏது?

67. ஏனெனில், எந்த மநம் ஆனது (விஷயங்களில்) திரிகின்ற இந்திரியங்களைப் பின் தொடர்கின்றதோ, அது, ஜலத்திலே கப்பலைக் காற்று (அடித்துக் கொண்டு போவது) போல, இவனுடைய அறிவை கவர்ந்து கொண்டு போகின்றது.

68. ஆதலால், உயர் தோளாய்! எவனுடைய இந்திரியங்கள், இந்திரிய விஷயங்களினின்றும் முழுதும் அடக்கப்பட்டனவோ, அவனுடைய ஞாநம் நிலைத்தது.

69. எது, பிராணிகட்கெல்லாம் இரவோ, அதில், அடக்கமுள்ளவன் விழித்திருக்கிறான். எதில், பிராணிகள் விழித்திருக்கின்றனவோ, அது, (உண்மையைக் காணும்) முநிவனுக்கு இரவு.

70. (தானே) எப் புறமும் நிரம்பியதாய் (த், தன்) நிலை மாறாது நிற்கும் சமுத்திரத்தை, (நதியின்) ஜலங்கள், எவ்வாறு புகுகின்றனவோ, அவ்வாறே, ஆசைகள் எல்லாம், எவனைப் புகுகின்றனவோ, அவன் சாந்தியை அடைகிறான். காமத்தை விரும்புகிறவன் (அதனை அடைவது) இல்லை.



71. எந்தப் புருஷன் சகல காமங்களையும் விட்டுப் பற்றற்றவனாய், அஹங்கார மமகாரங்கள் இல்லாதவனாய்த் திரிகின்றானோ, அவன் சித்தியைப் பெறுகின்றான்.

72. ஏ பார்த்த! இது பிரஹ்மத்தினைப் பற்றிய நிலை, இதனை அடைந்து (ஒருவனும்) மயங்க மாட்டான். (ஒருவன்) முதுமைப் பருவத்திலும் இதிலே நின்று பிரஹ்மாநந்தத்தினை அடைகின்றான்."

என்று திடப் பிரக்ஞனது லக்ஷணத்தைப் பகவற் கீதையில் பகவான் அர்ஜ்ஜுநனுக்குக் கூறியிருக்கின்றார்.

### 3. அதிவர்ண ஆசிரமி.

3. சூத சம் ஹிதை, முக்தி கண்டம் - மோசகப் பிரதாந கதநம் 5-வது அத்தியாயம்.

32. "எந்த மநிதன் தனது வர்ண ஆசிரமங்களைத் தாண்டி ஆத்மாவிலேயே இருக்கின்றானோ, அவனை அதிவர்ண ஆசிரமி என்று எல்லா வேதங்களையும் உணர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

33 + 34. (சொல்லப்பட்ட அதிவர்ணாசிரமியின் அநுபவமும் விவரிக்கப்படுகிறது) ஆத்மா தேகம் அன்று, இந்திரியம் அன்று, பிராணன் அன்று, மநஸ் அன்று, புத்தியும் அன்று, அஹங்காரமும் அன்று, சித்தமும் அன்று, மாயையும் அன்று, மேலும், ஆகாச ஆதி ஜகத்தும் அன்று, கர்த்தா அன்று, போக்தா அன்று, புஜிக்கிறவனும் அன்று, (ஆனால்) உண்மையில் சித்தாயும், சதாநந்தமாயுமிருக்கிற பிரஹ்மமே (யாவன்).

14. அதிவர்ண ஆசிரமி எல்லா அதிகாரிகளுக்கும் குருவாவான், நான் எவ்விதம் ஒருவருக்கும் சிஷ்யன் ஆகிறதில்லையோ, அப்படியே அவன், ஒருவனுக்கும் சிஷ்யன் ஆகிறதில்லை.

15. அதிவர்ண ஆசிரமி குருக்களுக் கெல்லாம் குரு என்று சொல்லப்படுகிறான். அவனுக்குச் சம மாக வாவது, மே லாக வாவது இந்த லோகத்தில் ஒருவரும் இல்லை என்பதில் சந்தேகம் இல்லை" எனக் கூறுகின்றது.

நாரத பரிவிராஜக உபநிஷத் 6-வது உபதேசம் 9-வது மந்திரம் முதல் 13-வது மந்திரம் வரை கூறுகின்றது.

"எவன் சரீர இந்திரியாதிகள் இன்றிய சர்வ சாக்ஷி யாய், பாரமார்த்திக ஞான முடைய தாய், சுக ஆத்மா வாய், ஸ்வயம் பிரபை யாய் உள்ள, 9. பர தத்துவத்தை அறிகின்றனனே, அவன் அதி வர்ணாசிரமி ஆவன். வர்ணாசிரமம் முதலியன மாயையால் தேகத்தில் கற்பிக்கப்பட்டன. 10. போத ரூப ஆத்மா வாகிய எனக்கு அவை எப் பொழுதும் இல்லை என எவன் வேதாந்தங்களால் அறிகின்றன னே, அவன் அதிவர்ணாசிரமி ஆவன். 11. எவனுக்குத் தனது ஆத்ம தரிசநத்தினால், வர்ணாசிரம ஆசாரம் கழன்றதோ, அவன் வர்ணங்களை, ஆசிரமங்களை, எல்லாவற்றையும் கடந்து தனது ஆத்மாவி னிடத்தில் நிலைத்திருக்கின்றான். 12. எந்தப் புருஷன் தன் வர்ணங்களையும், ஆசிரமங்களையும், கடந்து ஆத்மாவி னிடத் தில் இருக்கின்றனனே, அவன் அதிவர்ணாசிரமி எனச் சர்வ வேதாந்தங்களையும் உணர்ந்தவர்களால் கூறப்படுகின்றது. 13." என்று கூறுகின்றது.

ஆசிரம உபநிஷத், ஆசிரமங்கள் 16 எனக் கூறுகின்றது.

ஆசிரமங்கள், பிரஹ்மச்சாரி ஆசிரமம் நான்கு. 1. காயத்திரன். 2. பிராஹ்மணன். 3. பிராஜாபத்யன். 4. பிருஹன் என ஆவன.

கிரகஸ்த ஆசிரமம் நான்கு. 1. வார்த்தாக விருத்தி. 2. சாலீந விருத்தி. 3. யாயாவரா. 4. கோர சந்யாசிகா என ஆவன.



வாநப்பிரஸ்த ஆசிரமம் நான்கு. 1. வைகாநசன். 2. உடும் பரன். 3. பாலகில்யன். 4. பேனபர் என ஆவன.

சந்யாச ஆசிரமம் நான்கு. 1. குடீசகன். 2. பகூதகன். 3. ஹம்சன். 4. பரமஹம்சன் என ஆம்.

### 4. குணாதீதன் லக்ஷணம்.

#### பகவற் கீதை 14. குணாதீத அத்தியாயம்.

19. "கண்ணிய வுலகிற் கடப்பரி தாய குணங்கண்மூன் றையுங்கடந் துயர்ந்த, புண்ணிய ரியல்புங் கடந்துறு நெறியுங் குறியையும் புகன்றரு ளென்ன, வெண்ணிய வுலகு மூலகில்வா ழுயிரு மிருவினை யாக்கையு மாகப், பண்ணியு மழித்து மேவிளை யாடும் பரமன்வே றிவ்வகை பணிப்பான்.

20. வாய்மைய வல்லாக் குணமவை மூன்றின் காரிய மாய் வருகின்ற, தூய்மையுந் தொழிலு மயக்கமு மென்று சொல்லிய துறையிவை மூன்றுஞ், சேய்மைய வென்று பெறுதபோ தவாவல் பெற்றபோ திறங்கல்செய் யாதா, ஞய்நொது மலன்போற் குணங் களோ டிருந்தே யவற்றினாற் சலித்திடா னன்றே.

21. மாநமவ மாநம்வரு மின்பமிடர் மண்பொன்,
ஞனமகிழ் வப்பிரிய மன்பர்பகை யானே,
ரூனவுரை யோடுபுக ழுற்றபொழு தொப்பா,
னீனமுறு கின்றகுண மானவையி கந்தான்.

22. இப்பரிசி னல்வருகு ணங்களையி கந்தே,
மெய்ப்பருவ மாயபெரு வீடுபெறு கிற்பா,
ரெப்பரிசி னுமிடை யின்றியெழு மன்பா,
லொப்பவரி லாதவெனை யுன்னுமவர் கண்டாய்.

23. ஒழியா தென்று மியாவற்கு மியானே யுணர்த்தி வருத லாற், கிழியா வறிவுங் கெடாவீடுங் கேடி லின்ப மானதுவு, மழியா வறமு மென்னுள்ளே யுளவா காநின் றனவென்றான், சுழியா நின்ற பெருவெள்ளத் திடையே பண்டு துயில் கொண்டான்." என.

### சம்ஸ்கிருதத்தில் 21 சுலோக முதல், 27-வது சுலோகம் வரை 7 சுலோகங்கள் உள்ளன.

21. "பிரபுவே! இந்த முக் குணங்களையும் கடந்து நிற்பவன் என்ன அடையாளங்கள் உள்ளவன் ஆகின்றான்? என்ன ஒழுக்கம் உள்ளவன், மேலும், எவ் வாறு இந்த முக் குணங்களையும் கடந்து விடுகின்றான்?

22. பாண்டவ! விளக்கம், முயற்சி, மயக்கம், என வந்த வற்றை (அவன்) வெறுப்ப தில்லை, போனவற்றை விரும்புவ தில்லை.

23. எவன், உதாசீநன் போல வீற்றிருப்பவ னாய்க், குணங் களால் அசைக்கப் பெறுவ தில்லையோ, எவன், "குணங்கள் செய் கின்றன" என்றே உறுதி யாக நிற்கின்றானோ, அசைவ தில்லையோ, (அவன் குணங்களைக் கடந்தவன்).

24 + 25. இவன் இன்ப துன்பங்களைச் சம மாகக் கொண்ட வன், தன்னிடத்து வாழ்பவன், மண்ணாங் கட்டி, கல், தங்கம், பிரிய அப்பிரியங்கள் என்பவற்றைச் சம மாகக் கொண்டவன், ஞாநம் உள்ளவன், இகழ்ச்சியையும், தற் புகழ்ச்சியையுஞ் சம மாகக் கொண்டவன், மாந அவமாநங்களில் ஒப்ப நிற்பவ னாய், நண்பர் பகைவாது பக்கத்தினும் ஒப்ப நிற்பவ னாய், எல்லா முயற்சிகளையும் துறக்கின்ற அவன். "குணாதீதன்" எனப் படுகின்றான்.



26. மேலும், எவன் பிறழாத பத்தி யோகத்தினால், என்னைத் தொழுகின்றானோ, அவன், இக் குணங்களைச் செவ்வனே கடந்து, பிரஹ்ம மா யிருத்தற்குத் தக்கவ னாகின்றான்.

27. ஏ னெனில், யான், இறவாத தாய், வேறு பாடில்லாத தாய், சாசுவத மான தருமமும், தவறாத இன்பமும் ஆன பிரஹ் மத்திற்கு இருப்பிடம் (ஆக இருக்கின்றேன்)."

என்று குணாதீதன் லக்ஷணத்தைப் பகவற் கீதையில், பகவான் அர்ஜ்ஜுநனுக்குக் கூறி யிருக்கின்றார்.

## 5. பகவத் பக்த லக்ஷணம்.

### பகவற் கீதை 12-வது அத்தியாயம்.

1. "ஏயநா னெதிரே கண்ட வுருவமே யிசைகிற் பாரோ,
தூயநான் மறைக்கு மெட்டாப் பொருளையே தொடர்கிற் பாரோ,
தாயனாய் பெரியோ ரென்று தநஞ்செயன் வினவத் தானோர்,
ஆயனாய் நிரைகண் மேய்க்கு மாயன்வே றருளிச் செய்வான்.

2. மன்னநீ காண நான்முன் காட்டிய வடிவை நெஞ்சால்,
உன்னல்வாய் மொழியி னாலே யுரைத்தல்செய் பவர்க ளெல்லாம்,
என்னலாற் பிறிதொன் றெய்தா ரியாரினு நல்ல ரிங்குச்,
சொன்னவ ரன்றி மற்றை யவர்கடந் துறையுங் கேளாய்.

3. உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப் படாதா யெங்கும்,
புரையறக் கலந்து போக்கு வரவின்றிப் பொலிந்த தொன்றைக்,
கரைசெயற் கரிய வாய புலன்களைக் கடந்து காண்பான்,
அரசமற் றியானே யென்னி னந்நிய மென்ன லாமோ.

4. காரண மிறந்தோன் றிற்குங் காட்சியிற் படாத தொன்றைச், சேர்பவர் வருத்தம் வேறு செப்பிட லாவ தன்றால், ஓர்வரி திதுதான் வாழு முயிர்களா லாவ தொன்றோ, ஆரவர் பெருமை தன்னை யளவறுப் பவர்க ளையா." என.

**சம்ஸ்கிருதத்தில் 1-வது சுலோகம் முதல் 5-வது சுலோகம் வரை 5 சுலோகங்கள் உள்ளன.**

1. "எவர்கள், இவ் வாறு எப் பொழுதும் ஒரு நிலைப்பட்ட பக்த ராய், உம்மைத் தொழுகின்றார்களோ, மற்றும், எவர்கள், வெளிப்படை யாக இல்லாத, அழியாப் பொருளைத் (தொழு கின்றார்களோ), அவர்களுள், யோகத்தை விசேஷ மாக உணர்ந் தவர்கள் யாவர்?

2. எவர்கள் என்னிடத்து மநதைச் செலுத்தி, உயர்ந்த நம்பிக்கையோடு கூடி, எப் பொழுதும் ஒரு நிலைப்பட்டவ ராய், என்னைத் தொழுகின்றார்களோ, அவர்கள் எனது அபிப்பிராயத்தில் மே லான யோகிகள்.

3 + 4. மற்று, எவர்கள் இந்திரியக் கூட்டத்தைச் செவ்வை யாய் அடக்கி, எப் பொழுதும் சம புத்தி உள்ளவ ராய், சகல பிராணிகளுடைய நன்மையிலே கருத் துடையவ ராய், குறிப்பிட்டுக் காட்டி உணர்த்த முடியாததும், வெளிப் படை யாக இல்லாததும், எங்கும் உள்ளதும், நினைக்க வொண்ணாததும், கூடஸ்தமும், அசை யாததும் ஆன, அழியாத நித்தியப் பொருளை, எங்கும் தொழு கின்றார்களோ, அவர்கள், என்னையே அடைகின்றார்கள்.

5. அவ்யக்தத்தி னிடத்தும் மநம் பற்றிய அவர்கட்குப், பிரயாசம் மிக்க அதிக மானது. ஏ னெனில், அவ்யக்த மான, கதி யானது, தேகாபிமாநம் உடையவர்களால் அரி தாக அடையப் படுகின்றது."

என்று பகவத் பக்தன் லக்ஷணத்தைப் பகவற் கீதையில், பகவான் அர்ஜ்ஜுனனுக்குக் கூறியிருக்கின்றார்.



### 6. பிராஹ்மணன் லக்ஷணம்.

1. "अनुत्तरीयवसनमनुपस्तीर्यशायिनम् ।
बाहूपधायिनं शान्तं तं देवा ब्राह्मणं विदुः ॥

இடையில் வஸ்திரமும், மேல் வஸ்திரமும் இல்லாதவனும், பாய் முதலியன விரித்துப் படுக்காதவனும், கையைத் தலை யணை யாக வைத்துக் கொள்பவனும், சாந்தனும், ஆகிய அவனைத் தேவர்கள் பிராஹ்மணன் என்று அறிவார்கள்.

2. येन केनचिदाच्छन्नो येन केनचिदाशितः ।
यत्र क्वचन शायी स्यात्तं देवा ब्राह्मणं विदुः ॥

எதேனும் ஒன்றால் மறைத்துக் கொள்பவனும், எதேனும் ஒன்றால் புஜிக்கின்றவனும், எதேனும் ஓர் இடத்தில் படுப்பவனும் ஆய் இருப்பவன், எவனோ, அவனைத் தேவர்கள் பிராஹ்மணன் என்று அறிவார்கள்.

3. कन्थाकौपीनवासास्तु दण्डधृग्ध्यानतत्परः ।
एकाकी रमते नित्यं तं देवा ब्राह्मणं विदुः ॥

கந்தை கௌபீநம் வஸ்திரம் உடையவ னாய்த், தண்டந் தாங்கிய வ னாய்த், தியாந தத்பர னாய், தனித்தவ னாய், நித்தமும் ரமிக் கின்றானோ, அவனைத் தேவர்கள் பிராஹ்மணன் என்று அறிவார்கள்.

4. निराशिषमनारम्भं निर्नमस्कारमस्तुतिम् ।
अक्षीणं क्षीणकर्माणं तं देवा ब्राह्मणं विदुः ॥

ஆசீர்வாதம் செய்யாதவனும், ஒரு கிரியையும் செய்யாத வனும், நமஸ்காரஞ் செய்யாதவனும், க்ஷீணம் இல்லாதவனும், க்ஷீண கர்மம் உடையவனும், ஆகிய அவனைத் தேவர்கள் பிராஹ் மணன் என்று அறிவார்கள்.

5. याऽहेरिव गणाद्भीतः सन्मानान्नरकादिव।
कुणपादिव यः स्त्रीभ्यस्तं देवा ब्राह्मणं विदुः ॥

எவன் பாம்பினின்றும் பயப்படுவது போலக், கூட்டத்தினின்றும் பயப்படுகிறானே, நரகத்தினின்றும் பயப்படுவது போலச், சன்மானத்தினின்றும் பயப்படுகிறானே, பிணத்தினின்றும் பயப்படுவது போல, ஸ்திரீகளினின்றும் பயப்படுகின்றானே, அவனைத் தேவர்கள் பிராஹ்மணன் என்று அறிவார்கள்.

6. येन पूर्णमिवाकाशं भवत्येकेन सर्वदा।
शून्यं यस्य जनाकीर्णं तं देवा ब्राह्मणं विदुः ॥

எந்த ஒன்றினால் எப்போதும் ஆகாசம் நிறைந்தது போல் இருக்கின்றதோ, ஜனக் கூட்டம் எவனுக்குச் சூன்யமாயிருக்கின்றதோ, அவனைத் தேவர்கள் பிராஹ்மணன் என்று அறிவார்கள்.

அந்ந பூர்ண உபநிஷத் 37.

7. तमेव धीरा विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः।
नानुध्यायान्बहूञ्छब्दान्वाचो विग्लापनं हि तत् ॥

தீரன் அவ் வாத்மாவினையே அறிந்து பிராஹ்மணன் (பிரஹ்மஸ்வரூப அபிவியக்தியாகிய) பிரஞ்ஞையைச் செய்யக் கடவன். வெகு வார்த்தைகளைச் சிந்திக்க லாகாது. அது வாக்குக்கு வருத்தமே யாம்."

இவ் வாறு பிரஹ்ம ஞானியைப் பிராஹ்மணன் என்று சுருதி ஸ்மிருதிகள் கூறுகின்றன.



## மங்கலக் கவி.

குற்றமே கூறுங் குணம்பல வுடைய கூர்மையா மதியுடையவர்க்கும், வெற்றியைக் காண விருப்புடை யவர்க்கும் வீணிலே வாதங்கள் பொருதும், பெற்றியை யுடைய பெருமநத் தவர்க்கும் பேச்சிலா மௌநம தளித்துச், சொற்றிறம் பாமற் காப்பன்வீரேசன் றணைவலி யிருத்தலா லன்றே.

துங்கமெய் புணர்வாற் பிரமத்தைச் சாரச் சொல்லுநற் கணபதி கழலே, அங்கையி லயில்வா ழறுமுக னடியை யங்கயற் கண்ணியி னடியை, எங்கள்மெய் யுருவாஞ் சோமசுந் தரேசனிணையடி களைத்திநம் பணிந்து, சங்கையில் சத்யார்த் தப்ரகாசிகையைச் சற்குரு பாதத்தி லணிவாம்.

திருவொடு திகழுர் திருக்களர் வீரசேகர விறையடி துணைக் கொண், டொருவினல் நாநா ஜீவவா தக்கட் டளையினல் லுரையெனப் புகழுந், திருமிகு சத்யார்த் தப்ரகா சிகையைச் சிரமிசைச் சரணம்வைத் தென்றன், கருவினைக் கெடுக்கும் பாததாமரையிற் கனிவுட னணிந்துவாழ்த் துதுமே.

இந்த நாநா ஜீவ வாதக் கட்டளைக்குத், திருப் பூவணம், வேதாந்த மடம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகள் இயற்றிய, சத்தியார்த்தப் பிரகாசிகை என்னும் விரி வுரை முற்றுப் பெற்றது.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

ஓம். சாந்தி: சாந்தி:



70 வது பக்கத் தொடர்ச்சி.

(இந்திரிய வாத உரை.)

இன்னும், வாசுதேவ யதீசுவரர் என்பவரால், மநநம் (விவேக சாரம்) என்னும் பெயருடைய ஒரு நூல் செய்யப்பட்டிருக்கின்றது. அதற்கு வாசுதேவ மநநம் என்று பெயர் ஆம். அது நாற்பத்தைந்து சுலோகத்தில், நாற்பத்தைந்து பிரகரணமாக வியாக்யானத்தோடு விளங்குகின்றது. அதனைப் பிருஹத் வாசுதேவ மநநம் எனக் கூறுவாம்.

நாராயண யதி அவர்களின் மாணவர் ஒருவர் அதனைச் சுருக்கி 12 பிரகரணத்தில், சம்ஸ்கிருதத்திலேயே, ஒரு நூல் "லகு வாசுதேவ மநநம்" எனப் பெயரிட்டு வசநமாக எழுதியிருக்கின்றார்.

முற்கூறிய பிருஹத் வாசுதேவ மநநத்தில், 9-வது சரீரத்திரய விலக்ஷண நிரூபணப் பிரகரணத்தில், "நபோ (ஆகாச) தேசத்திலிருந்து இரண்டு இரண்டு கவருகப் பிரிந்து" என்று இந்திரியங்கள், சுரோத்திரம் - சக்ஷு - நாசி - கை - கால் - பாயுரு என்னும் ஆறும், இரண்டு இரண்டு கவருகக் கோளகங்களை அநுசரித்துப் பிரிந்திருக்கின்றன எனக் கூறப்பட்டிருக்கின்றது.

பிருஹத் வாசுதேவ மநந மாகிய விவேக சாரத்திலும், லகு வாசுதேவ மநநத்திலும், உபஸ்தேந்திரியம், சுக்லத்தையும், மூத்திரத்தையும் விடுகிறது என்றும்; குதத்திலிருக்கும் பாயு இந்திரியம் மலத்தை மாத்திரம் வெளியில் தள்ளுகிறதென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

பிரசிந உபநிஷத்திலும், 2-வது பிரசிநம் 5-வது மந்திரம் "एताः सप्तार्चिषो भवन्ति ॥" எனக் கூறுமிடத்தும், முன்னும் பின்னும் கண் கொண்டு பார்க்கில், ஏழென்னும் விளக்கம் யாவை என விளங்கும்.



சுவேத அசுவதர உபநிஷத்தும், முதலாவது அத்தியாயம் ஐந்தாவது மந்திரத்தில், "पञ्चस्रोतोम्बुं" (ஐந்து ஓடும் நதி) என்ற இடத்தில், ஐந்து ஞான இந்திரியங்களாகிய ஐ வகைச் சலங்கள் உள்ளன என்று கூறப்பட்டிருக்கின்றது. எட்டு ஞான இந்திரியங்களாகிய சலங்கள் உள்ளன என்று கூறப்பட வில்லை.

மஹா உபநிஷத் முதலாவது மந்திரத்தில், "दशेन्द्रियाणि" "பத்து இந்திரியங்கள்" என்றும், பகவற் கீதை 15-வது புருஷோத்தம யோகம் என்னும் அத்தியாயத்தில், ஏழாவது சுலோகத்தில், "मनः षष्ठानीन्द्रियाणि" "மநம் ஆறுவது இந்திரியங்கள்" என்றும் கூறும் இடங்களில் எல்லாம், வேதங்களும், ஸ்மிருதிகளும், ஞான இந்திரியங்கள் ஐந்து, கர்ம இந்திரியங்கள் ஐந்து என்று கூறுகின்றனவே அன்றி, ஞான இந்திரியங்கள் எட்டு, கர்ம இந்திரியங்கள் எட்டு என்று ஓரிடத்தாவது, ஓர் உருவகத்தாவது, ஆத்ம எஜமாநப் பிரசங்கத்திலாவது, பிராண யஜமாநப் பிரசங்கத்திலாவது, அயர்ந்துங் கூற வில்லை என்று உணராற் பாற்று.

பைங்கள உபநிஷத் இரண்டாவது அத்தியாயத்தில், அஷ்டபுரங்களைச் சொல்லுமிடத்தில், "अथ ज्ञानेन्द्रियपञ्चकं कर्मेन्द्रियपञ्चकं प्राणादिपञ्चकं वियदादिपञ्चकं अन्तःकरणचतुष्टयं कामकर्मतमांस्यष्टपुरम् ॥" "அதன் பின், ஞான இந்திரியம் ஐந்து. கர்ம இந்திரியம் ஐந்து. பிராணன் முதலியன ஐந்து. ஆகாசம் முதலியன ஐந்து. அந்தக் கரணம் நான்கு. காமம் கர்மம் தமசுகள் என்பன அஷ்டபுரம்" என எண்ணிக்கை செய்யுங் காலத்து, ஞான இந்திரியம் ஐந்து, கர்ம இந்திரியம் ஐந்து, பிராணன் முதலியன ஐந்து, ஆகாசம் முதலியன ஐந்து, அந்தக் கரணம் நான்கு என எண்ணுகின்றனரே அன்றி, இந்திரியங்களை எட்டு எட்டு ஆகக் கொள்ள வில்லை. சிலர்

கருத்துப் போல், இந்திரியங்கள் அதிக மாக வுளவாமேல், பிராணன் ஆகாசம் அந்தக் கரணம் முதலியவற்றிற்கும் ஜாதி யொருமை வசநங் கொள்ளல் நேரும். அங்ஙன மாகவே, பிராணன் 15. அந்தக் கரணம் 1 அல்லது, 2 அல்லது, 4 அல்லது 5 என்பது கொண்டு நீக்கினும், ஆகாசாதி ஐந்துக்கு மேல், ஆறுவது பூதம் யாண்டும் கூற வில்லை. அவ் விடத்தும் ஜாதி யொருமை வசநம் கொள்ளல் வேண்டும். கொள்ளவே அப்பிரசித்த ஸ்வீகாரம் என்னும் தோடம் வரும்.

இன்னும், புல் அரன் முதலியவற்றிற்கு ஒரு தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், நந்து முரள்கட்கு இரு தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், சிதல் எறும்புகட்கு மூன்று தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், ஞண்டு தும்பிகட்கு நான்கு தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், மா - மாக்கட்கு ஐந்து தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், மக்கட்கு ஆறு தத்துவ ரூப சூக்ஷ்ம சரீரம் வேறு என்றும், கொள்ளுவோ மாயின், ஒரு ஜீவன் பல வகைத் தாய தூல சரீரங்களைப் பாப புண்ணிய வசத்தால் பற்றினும், காரண சரீர அஞ்ஞாநமும், சூக்ஷ்ம சரீரமும், விதேக முக்தி பரியந்தம் மாறுமல் ஒரே படித்தாகவே இருக்கின்றன என்னும் கூற்றும், சுழுத்தி பிரளயங்களிலும் மாறுகிற தில்லை என்னும் சம்பிரதாயமும், விச்சிந்நம் ஆகும். அதிக தத்துவ முடைய நூதந சூக்ஷ்ம சரீரத்தில், புதிய சம்பந்த முடைய ஜீவனுக்குச் செய்யுங் கிரமம், அறியுங் கிரமந் தெரியாமல் மயங்கி யிடர்ப்பாடுண்டாய், அறிவதும், செய்வதும், தடைப்பட்டுத் தம்பித்துத் தியக்கம் உண்டாகும். அதனல், திதி (அதாவது நிகழ்) காலத் தொழில் இன்றுய் முடியும். விருத்திம் இச்சத: மூலதோ ஹாநி: (விருத்தியை விரும்பி மூலத்தினேடு கூடவே நாசம்) என்னும் நியாய மாக (வட்டிக்கு ஆசைப்பட்டு முதல் இழந்தான் கதை யாக) முடியும்.



மற்றும், ஸ்தூல சரீரம் போல், சூக்ஷ்ம சரீர மாறுதல் யாண்டுங் கூறப்படாமையான், பல சூக்ஷ்ம சரீரங்களை ஒரு ஜீவனுக்குக் கொள்ளுதல் அப்பிரமாண சுவீகார தோஷம் வரும்.

"எண் டோள் அண்ணு" (அஷ்ட புஜ மூர்த்தி) என்று கடவுளைத் தோத்தரிக்கின்றபடியால், சிவனுக்கு எட்டுப் பாணி இந்திரிய மிருக்கின்றமையின், சீவர்கட்கும் பாணி இந்திரியம் எட்டு எனக் கொள்ளல் நேரும். ஆகவே, அபூத ஸ்வீகார மாம். பின்னும்,

கணேச உத்தர தாபநி உபநிஷத், நாலாவது உபநிஷத்தில், உத்பத்திக் கிரமஞ் சொல்லுமிடத்தில்,

राजसाः पञ्च ज्ञानेन्द्रियाणि पञ्च कर्मेन्द्रियाणि पञ्च वायवश्चाजायन्त ॥

"ராஜஸ அஹங்காரத்தினின்றும் 5 ஞான இந்திரியம், 5 கர்ம இந்திரியம், 5 வாயுக்கள் உண்டாயின." என்று விதந்து, ஐந்து ஞான இந்திரியம், ஐந்து கர்மேந்திரியம், ஐந்து வாயுக்கள் உண்டாயின என எண்ணுங்கால், ஐந்து ஐந்து இந்திரியம் என எண்ணுகின்றதே அன்றி, எட்டு எட்டு இந்திரியம் என்று எண்ண வில்லை. மாறுய் ஐந்து என்றே சொல்லுகின்றது.

இன்னும், அநேக உபநிஷத்துக்கள் இவ் வாறு கூறுகின்றன. விரிவஞ்சி விடுத்தாம்.

இவ் வாறு, பல தோஷங்கள் சம்பிரதாய விரோத மாகப் பிரமாணம் இன்றிக் கொள்ளுதலில், இந்திரிய விஷய மாக உண்டாம் என உணர்க.

இந்திரிய வாத உரை முற்றுப் பெற்றது.

# அநுபந்தம்.

**சங்கை:—** **16**-வது பக்கத்தில், "அகண்ட பிரஹ்மாகார விருத்தி ஞாநம் உத்பத்தி யுடையதாய் நாசம் இன்றி யிருக்கின்ற மையினுலும் என்க" என்று எழுதியதற்கு, நூற் பிரமாணம் உண்டா? ஸ்வகபோல கற்பனையா? என்று சில அறிவாளிகள் கேட்டனர்.

**அதற்குச் சமாதாநம்:—** ஸ்காந்த புராணம் - சூத சம்ஹிதை - **4.** யஞ்ஞ வைபவ கண்டத்தில், **19**-வது அத்தியாயத்தில், நித்திய வஸ்து விசாரத்தில்,

"**4.** விசாரித்துப் பார்த்தால் கட முதலிய ஞாநத்திற்கும், அநித்தியத்துவம் இல்லை. ஏனெனில் அந்த ஞாநம் அந்தக் காண விருத்தியாலே தோன்றுகிறது."

"**5.** அந்தப் பிரத்தியயத்தில் சித் ஆகாரம், விருத்தி யாகாரம் என இரண்டு முள்ளன. பிராந்தியினுல் ஒன்ருய்த் தோற்றும்."

"**6.** பிரத்தியய ஞாநத்தில் பாவ அம்சம் என்றும், காண அம்சம் என்றும், இரண்டும் உள்ளன. இவற்றில் பாவ அம்சம் சித் ரூப மாயும், காண அம்சம் விருத்தி யம்சமாயும் இருக்கின்றன."

"**7.** கட வஸ்துவைப் போலச் சட மாகிறபடியால் விருத்தி யம்சத்திற்கே நாச முண்டாகும். சித் (ஞாந) அம்சத்திற்கு நாசம் உண்டாகிற தில்லை. ஒருவராலும் காணப்படாதபடியால்."

"**8.** இதிலும், ஞாநத் தன்மைக்கு நாசம் இல்லை. விருத்தி யுடன் கூடிய பாவத்திற்கு நாசங் காணப்படுகிறது."

"**9—10—11.** ஆதலால், பாவ அம்சத்திற்கு நாசத்தின் தோற்றம் பிரமமே தவிர வே றன்று. ஞாந மிலார் சித்த விருத்தியிற் ருேன்றும் சித் (ஞாந) ஆகாரத்தை உண்டாயிற்று



என்று நினைக்கின்ருர்கள். அறிஞர்கள் ஒரு பொழுதும் எண்ண மாட்டார்கள். ஹே முநீசுவரர்களே! விருத்தி நாச மாகும் போது "விருத்தியில் உள்ள சித் ஆகாரத்தினைப் பிரகாசம் இல்லாததால், நாசம் ஆயிற்று" என்று அஞ்ஞாநத்தினுல் நினைக்கின்ருர்கள். சைதந்ய மாத்திரத்திற்கு அநித்யத்வம் இல்லை."

என்று இவ் வாறு நான்கு முதல் **11** சுலோகம் வரை எட்டுச் சுலோகங்களில் விசிட்டத்தில் உள்ள விசேஷண பாகம் அநித்தியம் என்றும், விசேஷிய பாகம் நித்தியம் என்றும் கூறியிருக்கின்றனர்.

சைதந்ய பாகம் நித்தியமே யன்றி, விருத்தி பாகம் நித்தியம் இல்லை. விஷயங்கள் வெவ் வே ருக ஆகின்றன. ஞாநம் நித்தியம் என்று பஞ்சதசியில், "ஒலியூடு ருதியாய்" என்னும் கவி முதல் ஐந்து கவிகளால், ஸ்தாபித்திருக்கின்ருர்கள் வித்தியாரண்ய முநீசுவரர்கள்.

அகண்ட பிரஹ்மாகார

ஆனதால், உத்பத்தி யாக வுள்ள விளக்கம் விருத்தி ஞாநத்தில், ஞாநம் விருத்தியோடு கூட உண்டாய் நித்திய மாக இருக்கின்றது என்று உணர வேண்டும். விருத்தி நித்தியம் என்று உணரல், விஷயாவச்சிந்ந, அல்லது, விஷய விசிட்ட சைதந்யத்தில், விஷய பாகம் நித்தியம் என உணரல் போல, மயக்க அறி வுடையார் கூற்ரும். விசிட்டத்தில், விசேணத்தால், விசிட்டம் அநித்தியம் என்றும், விசிட்டத்தில் விசேஷண பாகம் அநித்தியம் என்றும், விசேஷிய பாகம் நித்தியம் என்றும், இரு மதங்கள் உள்ளன. அவற்றை விரிப்பில் இச் சிறு நூல் பெருகும் எனும் பயத்தால், விரிக்காது விடுத்தனம். விருப் புடையார் வேதாந்த பரிபாஷை முதலிய நூற்களில் மூழ்கி எழுவா ராக.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 4 | ரஜ | ரச |
| 10 | 21 | கர்ப்பன் பெரிது | கர்ப்பன் பெரியன் |
| ,, | 23 | ஈசுவரன் பெரிது | ஈசுவரன் பெரியன் |
| 11 | 13 | பெரிது | பெரியன |
| 12 | 10 | ஊர்கள் பெரிது | ஊர்கள் பெரியன |
| ,, | ,, | அதினும் | அவற்றினும் |
| ,, | 11 | தேசங்கள் பெரிது | தேசங்கள் பெரியன |
| ,, | ,, | அதினும் | அவற்றினும் |
| ,, | ,, | உலகங்கள் பெரிது | உலகங்கள் பெரியன |
| ,, | 12 | அதினும் | அவற்றினும் |
| ,, | 14-15 | விராட் (ஜாக்ரம்) பெரிது | விராட் புருடன் (ஜாக்கிராவதை அபிமாநி) பெரியவன் |
| | | ஹிரண்ய கர்ப்பன் (ஸ்வப்நம்) | ஹாண்ய கர்ப்பன் (ஸ்வப்நா வஸ்தை அபிமாநி) |
| ,, | 16 | பெரிது | பெரியவன் |
| | | (ஸ்வப்நம்) | (ஸ்வப்ந அவஸ்தை அபிமாநி) |
| ,, | 17 | பெரிது | பெரியவன் |
| | | (சுழுத்தி) | (சுழுத்தி யவஸ்தை அபிமாநி) |
| | | பெரிது | பெரியவன் |
| ,, | 18 | (துரியம்) | (துரிய அவஸ்தை அபிமாநி) |
| | | பெரிது | பெரியவன் |
| ,, | 19 | (துரியாதீதம்) | (துரியா தீத அவஸ்தை அபிமாநி) |
| | | பெரிது | பெரியவன் |
| ,, | 20 | ஈசுவரன் பெரிது | ஈசுவரன் பெரியன் |
| 15 | 20 | நித்தியம் | நித்திய மாய் |
| 16 | 9 | இல்லாது | இல்லாதது |
| 18 | ,, | அந்தியந்தாபாவம் | அத்தியந்தாபாவும் |



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 19 | 23 | ரூவமா | ருவமா |
| 20 | 3 | பிரம்மா | பிரமமா |
| ,, | 7 | முடற்களிற் | முடல்களிற் |
| 28 | 11 | வந்தியந்தா | வத்தியந்தா |
| 29 | 5 | எழுதப்பட்டிருக்கின்றது | எழுதப்பட்டிருக்கின்றன |
| 30 | 4 | சீவனென்றி | ஜீவரொன்றி |
| 31 | 2 | வாசகம் | வாசகத்தின் பொருள் |
| ,, | 8 | பெயர் | பெயராம் |
| ,, | 15 | ஆவரண சத்திக்கு | ஆவரண சத்திக்குச் |
| ,, | 16 | விக்ஷேப சத்திக்கு | விக்ஷேப சத்திக்குச் |
| 33 | 5 | ஆசிரமம் | ஆசிரயம் |
| ,, | ,, | வாசகம் | வாசகத்தின் பொருள் |
| ,, | 8-9 | கூறப்படுகின்றது | கூறப்படுங்கால் |
| ,, | 10 | அவற்றில் | அதன் |
| 34 | 22 | அப்பு தோன்றிற்று | அப்புத் தோன்றிற்று |
| 35 | 8-9 | (ஒலி) அவ்வளவு | (ஒலி) த்தையே தன் குண மாத்திரமாக வுள்ள |
| ,, | 19 | கூறப்படுகின்றது] | கூறப்படுங்கால் |
| 38 | 8 | ஆகாசம | ஆகாசம் |
| ,, | 12 | கூறப்படுகின்றது. | கூறப்படுகின்றன. |
| 39 | 15 | உள் | உள்ளுள்ள |
| ,, | 26 | கூறப்படுகின்றது. | கூறப்படுகின்றன. |
| ,, | ,, | யாவம் | யாவும் |
| 44 | 15-16 | எனக்கூறுகின்றது. | என்பது கூறப்படுகின்றது. |
| 46 | 7 | பிறித்து | பிரித்து |
| ,, | 2 | களுக்கு | களுக்குப் |
| ,, | 21 | வாதி | வாதியன |
| ,, | 26 | கருப்பு | கறுப்பு |
| 51 | 24 | ஈண்டு பிராணன் | ஈண்டுப் பிராணன் |
| ,, | ,, | பத்து தத்துவங்கள் | பத்துத் தத்துவங்கள் |
| ,, | 27 | மறைக் கின்ற தென | மறைக்கின்றன என |
| 52 | 8 | ஆக எட்டு | ஆகிய எட்டு |
| 56 | 2 | ஆக மூன்று | ஆகவே மூன்று |
| ,, | 8 | ஆக இருபத் தேழு | ஆகிய இருபத் தேழு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 56 | 10 | பத்து தத்துவ | பத்துத் தத்துவ |
| ,, | 25 | ரூப தர்ம | ரூபத் தர்ம |
| 57 | 10 | காரண மாதலானும் | காரணத்தாத லானும் ஆம். |
| ,, | 22 | கின்றமையாலும் என்க. | கின்றமையாலும் தூல சரீரம் ஆத்மா அன்று என்க. |
| 58 | 4 | மாகலானும் | மாகலானும் ஆம் |
| ,, | 11 | வாயுக்கள் | வாயுக்களும் |
| ,, | 12 | தர்மம் | தர்மமும் |
| ,, | 13 | களும் ஆத்மா | களும் ஆகிய பிராண மய கோசம் ஆத்மா |
| ,, | 20 | னும் | னும் பிராண மயம் ஆத்மா [வன்று |
| ,, | 26 | லானும் | லானும் ஆம் |
| 59 | 15 | னு மென்க | னும் மனோ மயம் ஆத்மா வன்று என்க |
| ,, | 22 | மாகலானும் | மாகலானும் ஆம் |
| 60 | 10 | அகங்காரம் | அகங்காரம் |
| ,, | 11 | னும் | னும் விஞ்ஞான மயம் ஆத்மா [வன்று |
| ,, | 17 | னும் | னும் ஆம் |
| 61 | 10 | செய்யப்பட்டது | செய்யப்பட்டன |
| 62 | 11 | என பதின் | எனப் பதின் |
| 64 | 23 | ஒரு தொழிலையும் | ஒரு தொழிலையும் ஒரு இந்திரியம் ஒரு கோளகத்தில் இருந்து கொண்டு இரு தொழிலையும் |
| 67 | 19 | ஸ்தானானி | ஸ்திதானி |
| ,, | 22 | ஸ்தானங்கள் | இருப்பன |
| 83 | 24 | நீஙகி | நீங்கி |
| 95 | 24 | (14 இத்) | (14) |
| ,, | 26 | (14) | (14 இ) |
| 102 | 17 | முற்றற்று | முற்றிற்று |
| 115 | 7 | விஷயங்ளினின்றும் | விஷயங்களினின்றும் |
| 118 | 18 | ஆசிரமஙகளையும் | ஆசிரமங்களையும் |

---

| | | |
|---|---|---|
| 17. | கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை. 188 பக்கம் உடையது. | 2—0 |
| 18. | மஹா ராஜத் துறவு - மகப் பிரசாதினி உரை. 206 பக்கம் உடையது. | 2—0 |
| 19. | கீடா சாரம் - பால போதினி உரை. | 0—8 |
| 20. | தாந்திரிக த்வைத சைவ கண்டநம் (குட்டுக் கோல் - கட்டாரி - புச்சம்). | 1—0 |
| 21. | ஸ்தோத்திர ரச மஞ்சரி. 160 கவி உடையது. | 0—4 |
| 22. | வட நாட்டில், ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் னாட்டில் சாதுக்கள் மேளாவும். வசநம். | 0—2 |
| 23. | அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தில் இருப்பவர்கட்கும், ஓர் அறிக்கை. வசநம். | 0—2 |
| 24. | சாது சங்க கிறுவல் விழாக் கூட்ட வைபவம். வசநம். | 0—2 |
| 25. | மடங்களின் உத்பத்தியும், தற் போது உள்ள நிலைமையும். வசநம். | 0—2 |
| 26. | திருக் களர் - வீர சேகர ஞான தேசிக சரிதம். வசநம். | 1—0 |
| 27. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி. கவி 1509. வசநமும் 9 நூல் சேர்ந்தது. | 3—0 |
| 28. | கீதாத் திரயம் கவி 1437. (ஈசுவர கீதை கவி 338. பகவற் கீதை கவி 552. பிரஹ்ம கீதை கவி 547) சேர்ந்தன | 1—4 |
| 29. | விவேக சூடாமணி கவி 671. அஞ்ஞ வதைப் பாணி கவி 494. (1165) | 1—0 |
| 30. | வாசிட்டம். கவி 2055 உடையது. (ஆக நூல் 16-க்கு கவி 6960 உடையன) | 2—4 |
| 31. | பஞ்ச தசி. கவி 794 உடையது | 0–10 |
| 32. | கைவல்ய நவநீதம் பாக்கட் புக் முதல் நினைப்பு உள்பட கவி 288. | 0—9 |

## அச்சில் இருப்பன.

1. பேத திக்காரம் - சத்கிரியை என்னும் உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
2. சிவ சங்கராவதாரம் - கண்டநம்.
3. யுக்திப் பிரகாசம், வசநம், ஹிந்தி மொழி பெயர்ப்பு.
4. காசிகாநந்த விஜயம். வசநம்.
5. பக்தி (வைராக்ய) சதகம் - பத வுரை. பொழிப் புரை.

உ

சிவமயம்.

# இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வண மடம்,

## ஸ்ரீ காசிகா நந்த ஞா நாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள், பதிப்பித்தன.

| | | ரூ. |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—8 |
| 2. | விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 3. | வியாச தாத்பர்ய நிர்ணயம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 4. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 5. | நைஷ்க் கர்ம்ய சித்தி, வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 6. | வேதாந்த பரிபாஷை. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—7 |
| 7. | ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 8. | வேதாந்த சஞ்ஞா. வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—2 |
| 9. | ஹரி மீடே - ஹரி தத்வ முக்தாவலி. பத வுரை வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0-12 |
| 10. | மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜ யோக பாஷ்யம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 11. | ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம். வசநம் பத வுரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 12. | கதா சரித் சாகரம். (கதை நதிக் கடல்) வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 13. | பகவற் கீதை. 15-வது அத்தியாயம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு - பத வுரை. மேற்படி தமிழ் கவி - பத வுரை. மூர்க்க சதகம் - பத உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. நிர்க்குண அஷ்டோத்தர சத நாமாவளி - சம்ஸ்கிருதம் - தமிழ் சேர்ந்தது. | 0—8 |
| 14. | வைராக்ய தீபம். பத உரை - பொழிப் புரை. | 0—8 |
| 15. | வைராக்ய (பக்தி) சதகத் தோத்திரம் - தோத்திரப் பிரகாசம் எனும் பத வுரை. | 0—3 |
| 16. | நாநா ஜீவ வாதக் கட்டளை - சத்யார்த்தப் பிரகாசிகை உரை. 200 பக்கம் உடையது. | 2—0 |